# ஞானியார் அடிகள்

சுந்தரசண்முகனார்



# தவத்திரு ஞானியார் அடிகள்

ஆசிரியர்:
ஆராய்ச்சி அறிஞர்
**முனைவர் சுந்தர சண்முகனார்**
தமிழ்-அகராதித் துறைப் பேராசிரியர் (ஓய்வு)

**மணிவாசகர் பதிப்பகம்**
55, லிங்கி தெரு, சென்னை-600 001.

முதற் பதிப்பு : திருவள்ளுவர் ஆண்டு, 2024
ஜுன், 1993

உரிமை : செறிவு

பேராசிரியர் மெய்யப்பனார் மணிவிழா ஆண்டு

ஞானியார் அடிகள் 120-ஆவது பிறந்தநாள் வெளியீடு

விலை ரூ. 17-75

கிடைக்குமிடம்

**மணிவாசகர் நூலகம்**

12-B, மேல சன்னதி, சிதம்பரம் - 608 001
55, லிங்கி தெரு, சென்னை - 600 001
28-A வடக்கு ஆவணி மூலவீதி, மதுரை - 625 001
15, ராஜவீதி, கோயமுத்தூர் -641 002
28, கிளைவ்ஸ் கட்டடம் தெப்பக்குளம், திருச்சி-620 002
தொலைபேசி சென்னை: 513707 சிதம்பரம்: 2799

அச்சிட்டோர்:
கே.பி.டி. இண்டஸ்ட்ரீஸ்,
அண்ணாமலைநகர் - 608 002

# சைவமும் தமிழும் வளர்த்த சான்றோர்

பேராசிரியர் டாக்டர் ச. மெய்யப்பன்.

தமிழ்நாடு நாகரிகத்தில் நனிசிறந்த நாடு. வழிவழியாக நல்லறங்கள் செழிக்கும் திருநாடு. திருநெறிய தெய்வநெறி தழைத்து வளரும் நிலம். காரைக்கால் அம்மையார், திருமூலர், சம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர், மணிவாசகர், தாயுமானவர், ராமலிங்க அடிகள் என வாழையடி வாழை யாகத் தெய்வநெறி வளர்ந்த திருநாடு.

இருபதாம் நூற்றாண்டில் திருப்பாதிப்புலியூரில் சைவமும் தமிழும் தழைக்க தவத்திரு ஞானியார் அடிகள் செங்கோலோச்சினார்கள். அப்பர் அடிகளை நினைவுறுத் தும் வண்ணம் திருநீறு துதைந்த மேனி. உள்ளம்போல் வெண்ணீறு சண்ணித்த திருமேனி, முதுமையில் பேரழகு, மூதறிவின் தனிப்பொலிவு, ஞானத்தின் திருவுரு என விளக்கம் பெற்றுத் திகழ்ந்தார்கள்.

மனித குல மேம்பாட்டிற்கும், உயிர்க் குலத்தின் உய் விற்கும் ஞானியார் அடிகள் ஆற்றிய ஞானத் தொண்டு நிலத்தினும் பெரிது, வானினும் உயர்ந்தது. கருணை பொழியும் திருமுகம். அருட்கதிரால் மக்களை ஈர்த்தது. அவர்கள் தொட்டது துலங்கும். நான்காவது தமிழ்ச்சங்க மாகிய மதுரைத் தமிழ்ச்சங்கத்தைத் தொடங்கி வைத் தார்கள். சைவ சித்தாந்த சமாஜமாகிய சைவ சித்தாந்தப் பெருமன்றத்தைத் தொடங்கி வைத்தார்கள். பொன், மணி, முத்து, பவள விழாக்கண்டு வளர்ந்தோங்கி வரு கிறது. பெரியார் ஈ.வெ.ராவின் இதழைத் தொடங்கி வைத்தார்கள்.

பேரும், புகழும் பெற்ற பெருமித வாழ்வு நடத்தி வந்தார்கள். சமயப் பொறை மிக்க சான்றோர்.

"பாடம் சொல்லல் பாடம் கேட்டல்" என்னும் நல்ல மரபு தமிழகத்தில் உண்டு. இன்னார் இன்ன பாடம் சொன்னார்கள். இன்னாரிடம் இன்ன பாடம் கேட்டேன் என்று சொல்லிப் பெருமையுறுவர். வல்லார் வாய்க்கேட்டுணர்க என்ற வழக்கும் பெருவழக்காய் உள்ளது. அதுவும் சமய நூல்களைப் பாடஞ் சொல்லு வது அரியகலை. அதுவும் ஞான நூல்களை நயம்படச் சொல்லும் வித்தகர் தவத்திரு ஞானியார் அடிகள். அவர் களிடம் பாடம் கேட்டவர்கள் பெரும்பேறு பெற்றவர்கள்.

பாடம் சொல்லுதலில் தனித்திறம் சான்ற வர்கள் பேரறிவுத் திறத்தால் எதனையும் எளிதில் விளக்கி விடுவார்கள். அவர்களிடம் பாடங்கேட்டவர்கள் இன்று நல்லாசிரியர்களாய், நாடு புகழும் நாவலர்களாய், பேரும் புகழும் பெற்ற பெருமக்களாய் விளங்குவதே அவர்கள் தம் பேராற்றலுக்குச் சான்றாகும். நாடெல்லாம் சென்று, ஊரெல்லாம் இருந்து சைவம் பரப்பிய சைவ எழுகதிர் ஞானியார் அடிகள் அவர்கள் வழியில் அவர்கள் நன்மாணாக்கர்கள் தமிழ் கூறும் நல்லுலகம் எங்கும் நாளும் தமிழ் பரப்பி வருகின்றனர்.

நடேச முதலியார்
இராசாக் கண்ணனார்
சுந்தர சண்முகனார்
ஆறுமுக முதலியார்
வை. இரத்தின சபாபதி

என மாணவர் அணி வாழையடி வாழை என வளர் கிறது. அறிவுக் கடலாய், தமிழ் ஊற்றாய், சொற்பொழிவுக் கொண்டலாய் விளங்கிய ஞானியார் அடிகளின் பிறந்தநாள்

நூற்று இருபத்து ஐந்தாவது ஆண்டு விழாவால் அவர்களது வாழ்க்கை வரலாற்றை வெளியிடும்பேறு பெற்றதில் கழி பேருவகை கொள்கிறோம்.

நாடும், மொழியும் வாழ உழைத்த பெருமக்களை இந்தத் தலைமுறை இளைஞர்களுக்கு அறிமுகம் செய்யும் வகையில் இந்த வாழ்க்கை வரலாற்று வரிசை வெளிவரு கிறது. செயற்கரிய செய்த சான்றோர்களின் சாதனை களைப் புதிய தமிழில் இளைஞர் சமுதாயத்திற்கு இனம் காட்டும் வரிசை இது.

இந்நூலை உருவாக்கிய பெருமகனார் ஞானியார் அடி களின் நன்மாணாக்கர் சுந்தர சண்முகனார். ஆராய்ச்சி நூல் படைப்பதில் வல்லவர். பெருநூல்களை உருவாக்குவது அவருக்குக் கைவந்த கலை. மதுரை காமராசர் பல்கலைக் கழகப் பேரவைச் செம்மல். தமிழக அரசின் **திருவள்ளுவர் விருது** பெற்றவர். கற்றல், சிந்தித்தல், தெளிதல் எழுதுதல் இவருடைய வாழ்க்கை நெறியாகும்.

தன் ஆசிரியப் பெருமானைப் பற்றி அரிய வரலாற்று நூலைப் பக்தி சிரத்தையுடன் படைத்து அளித்துள்ளார்.

மணிவாசகர் பதிப்பகத்தின் ஒவ்வொரு நூலும், தமிழ் நலம் கருதியும், தமிழர் நலம் கருதியும் வெளியிடப்படும் ஆய்வு நூல் என்பது தமிழறிஞர் மதிப்பீடு. இன்னும் அரிய பெரிய பணிகளில் எங்களை நன்னெறிப்படுத்தும்படி தமிழ்த் தாயை வாழ்த்தி வணங்குகிறோம்.

# ஆசிரியர் முன்னுரை

1968 ஆம் ஆண்டு சென்னையில் இரண்டாவது உலகத் தமிழ் மாநாடு நடைபெற்றபோது, தமிழ் நாடு அரசால் யானும் ஒரு பேராளனாக அழைக்கப் பெற்றுச் சென்று கலந்து கொண்டேன்; கட்டுரையும் வழங்கினேன்.

அப்போது ஒரு நாள், சென்னை - இலிங்கிசெட்டித் தெருவில் உள்ள மறைமலையடிகள் நூலகத்திற்குச் சென்றேன். அது, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் மேற்பார்வையில் நடைபெறுவது. நான் சென்றபோது, அக்கழகத்தின் தலைவர் வ. சுப்பையா பிள்ளையும் தேவ நேயப்பாவாணரும் அங்கு இருந்தனர். சிறிது நேரத்தில், செக்கோசுலோவகியாத் தமிழ் அறிஞர் கமல் சுவலெபில் என்பவர் தம் நண்பர் ஒருவருடன் அங்கு வந்து சேர்ந் தார்.

நாங்கள் அனைவரும் உரையாடிக் கொண்டிருந்த பொழுது, வ. சுப்பையா பிள்ளை என்னை நோக்கி, 'உங்கள் வாழ்க்கை வரலாற்றை எழுதிக் கொடுங்கள் - நான் வெளியிடுகிறேன்' - என்று கூறினார். எனக்குத் தூக்கிவாரிப்போட்டது. எனக்கு அப்போது நாற்பத் தாறாவது அகவைதான் நடந்து கொண்டிருந்தது. சில நூல்களும் எழுதியிருந்தேன். நான் சுப்பையா பிள்ளை யைப் பார்த்து, ''என்ன - என்னைக் கிண்டல் செய்கிறீர் களா? நான் அகவையில் சிறியவன் - போதிய பட்டறிவு இல்லாதவன்; இங்ஙனம் இருக்கவும் என் வாழ்க்கை வரலாற்றை எழுதித்தரின் வெளியிடுவதாகக் கூறுகின்றீர் களே - என்ன - கிண்டல் செய்கிறீர்களா?''- என்று நான் பதில் இறுத்தேன்.

அதற்கு அவர் பின்வருமாறு கூறினார்: ''நான் உங்களுக்காக மட்டும் - உங்கள் பெருமைக்காக மட்டும்

உங்கள் வாழ்க்கை வரலாற்றை எழுதச் சொல்ல வில்லை. நீங்கள் உங்கள் வாழ்க்கை வரலாற்றை எழுதினால், உங்களுடைய குருவாகிய திருப்பாதிரிப் புலியூர் ஞானியார் அடிகளாரைப் பற்றியும், புதுச்சேரியில் நீங்கள் அறிந்த பாரதிதாசனைப் பற்றியும், மற்றும் நீங்கள் அறிந்து பழகிய புலவர் பெருமக்களைப் பற்றியும் எழுதுவீர்கள்; அதனால் அன்னாருடைய வாழ்க்கைக் குறிப்புகளையெல் லாம் அறிந்து கொள்ளும் வாய்ப்புப் பலருக்கும் கிடைக்கும் அல்லவா? அதற்காகவும் உங்கள் வாழ்க்கை வரலாற்றை எழுதச் சொல்கிறேன்'' என்று விளக்கினார். செக்கோ சுலோவகியாத் தமிழ் அறிஞர், என்ன - என்ன என்று வினவினார். அவருக்கும் இந்தச் செய்தி அறிவிக்கப்பட்டது. 'சும்மா எழுதுங்கள் ஐயா! நாம் வெட்கப்பட்டுக் கொண்டே எவ்வளவோ வரலாற்றுக் குறிப்புகளைத் தெரிவிக்காமல் விட்டு விடுகிறோம் - நீங்கள் எழுதிக்கொடுங்கள் - வெளி யிடட்டும்' என்று பாவாணரும் ஊக்கப்படுத்தினார்.

ஆனால் யான் இதுவரை என் வாழ்க்கை வரலாற்றை எழுதவில்லை. எழுத உண்மையிலேயே வெட்கப்படுகிறேன். ஆனால், திருப்பாதிரிப் புலியூர் ஞானியார் அடிகளாரின், வரலாற்றை மிகவும் சுருக்கமாக, 1973-ஆம் ஆண்டில் அவரது நூற்றாண்டு விழா நடைபெற்ற போது இருபத்து நான்கு பக்கத்தில் வெளியிட்டுப் பலர்க்கும் இலவசமாக வழங்கினேன்.

என் ஆசான் தமிழகம் போற்றும் தவத்திரு - ஞானி யார் அடிகளாரின் வரலாற்றை இப்பொழுதுதான் இந்த நூல் வடிவத்தில் ஓரளவு விரிவாக எழுதியுள்ளேன். இன் னும் விரிவாக எழுதலாம். இப்போதுள்ள சூழ்நிலை இவ் வளவு எழுதவே இடம் தந்துள்ளது.

ஞாயிறை எல்லாக் காலத்திலும் முற்றிலும் மறைக்க முடியாது. இமயமலையினையும் கண்ணுக்குத் தெரியாத

வாறு மறைக்க முடியாது. ஆனால், ஒரு ஞாயிறு மறைக்கப்பட்டுள்ளது - ஓர் இமயமலை மறைக்கப்பட்டுள்ளது. அந்த ஞாயிறு - அந்த இமயமலை திருப்பாதிரிப் புலியூர் ஞானியார் அடிகளார்தான்.

இப்போது 65 அல்லது 70 அகவை உடையவர்கட்கே ஓரளவு ஞானியார் அடிகளாரைப் பற்றித் தெரியும். அவர் 1942 - ஆம் ஆண்டே இறுதி எய்தினார். அப்போது மிகவும் இளைஞராய் இருந்தவர்கள் நன்றாக அறிந்திருக்கமாட்டார்கள். அப்போதே ஓரளவு பெரியவராயிருந்தவர்களே அறிந்திருக்க முடியும். அப்போது சிறுவர்களாயிருந்த என்னைப் போன்றவர்கள் அவரிடம் படித்ததால் அவரை அறிந்திருக்கிறார்கள்.

ஞானியார் அடிகளை அறியாத இக்காலத்தினர் அவருடைய பெருமைச் சிறப்புகள் முழுமையும் அறிவார்களாயின் மூக்கின்மேல் விரல் வைத்து வியப்பார்கள். முன்னர் அறியாதார் இப்போது அறிந்து கொள்வதற்கு இந்த நூல் ஓரளவுவேனும் துணை புரியும். முன்னர் அறிந்தவர்கள் இப்போதும் ஞானியர் அடிகளாரைப் போற்றுகின்றனர்.

இப்போது இந்த நூலை யான் எழுதத் தூண்டியவர், சிதம்பரம் மணிவாசகர் பதிப்பகத்தின் புரவலரான பேராசிரியர் உயர்திரு. ச. மெய்யப்பன் ஆவார். அவருக்கு யான் மிகவும் நன்றி செலுத்துகின்றேன். இத்தகைய நூல்கள் வெளிவரவேண்டும் என்று விரும்புகிற அவரது முயற்சியைப் பாராட்டுகிறேன்.

புதுச்சேரி - 11. **சுந்தரசண்முகன்**

19-1-1989

# பொருளடக்கம்

# 1. அறிமுகம்

**ஞானியார் போற்றி:**

"அந்தாதி சதகங்கள் ஆன சிறு நூல்பயில
அண்டிவந் தவர்கள் ஒருசார்
அரியதொல் காப்பியம் சித்தாந்த சாத்திரம்
அறியவந் தவர்கள் ஒரு சார்

மந்த்ரஉப தேசமது பெற்று சிவ பூசைசெய
மருவிவந் தவர்கள் ஒருசார்
மறைந்தநுண் பொருள்தமை விளக்குமொழி கேட்டுமே
மகிழ்ந்திருப் பவர்கள் ஒருசார்

இந்தமுறை மடாலயம் எங்கணும் கூட்டமாய்
இரவுபகல் என்பது இன்றி
இருந்துநின் மொழிகேட்டுப் புலவரா னோர்தமை
எண்ணிடத் தகுவ தோதான்

பந்தமற ஞானமொழி பகர்கின்ற பானுவே
பான்மைதரு புலிசை வாழ்வே
பரிவுடைய சிவசண்மு கப்பெயர்கொள் தேசிகரின்
பதமலர்கள் போற்றி போற்றி."

தமிழகத்தில் நாற்பத்தைந்து ஆண்டுகட்குமுன் 'ஞானியார் சுவாமிகள்' என்றால், சிறார் முதல் முதியோர் வரை – கற்றவர் கல்லாதவர், தொழிலாளர் அரசு உயர் அலுவலர், ஏழையர் செல்வர் முதலிய பலரும் அறிவர். அருள்மிகு சமயத்தலைவராயும் கற்றுத் துறைபோகிய பெரும் புலவராயும் தலைசிறந்த பேச்சாளராயும் திகழ்ந் தவர் திருவருட் செல்வர் தவத்திரு ஞானியார் அடிகளார். அவர்களிடம் முறையே பாடம் கேட்டுப் பெரும் புலவரான வர்கள் நூற்றுக் கணக்கானவர்கள். அடிகளாரின் சொற்

பொழிவுகளைக் கேட்டுப் புலமை பெற்றவர்கள் ஆயிரக் கணக்கானவர்கள். அவர்தம் அருள் உரைகளைச் செவி மடுத்து நல்லறமும் நல்லொழுக்கமும் உடையவராய்த் திகழ்ந்தவர்கள் நூறாயிரக் கணக்கானவர்கள்.

மேலுள்ள பாடல் ஞானியாரின் மாணாக்கர் ஒருவரால் இயற்றப்பட்டது. பல்வகை நூல்களைப் பாடம் கேட்கவும், சொற்பொழிவு கேட்கவும், மெய்யுணர்வு - மெய்யறிவு பெறவும் வருபவர்களின் கூட்டம், அடிகளாரின் திருமடம் முழுவதும் இரவு பகல் இன்றி எப்பொழுதும் நிறைந்திருக் கும் - என்பது அப்பாடலின் சுருக்கமான கருத்து.

தமிழிலும் வடமொழியிலும் மிக்க புலமையும்,தெலுங் கிலும் ஆங்கிலத்திலும் போதிய திறமையும் பெற்றுத் திகழ்ந்தவர் தவத்திரு அடிகளார். கேட்பவர் உள்ளங் களைத் தம்பால் ஈர்த்துப் பிணித்து, நான்கு மணிநேரம் - ஐந்து மணிநேரம் சேர்ந்தாற்போல் தொடர்ந்து சொற் பொழிவாற்றும் பேராற்றல் படைத்தவர் ஞானியார் அடிகளார். பெருந்தலைவர்கள் - பெரும் புலவர்கள் பலரும் அடிகளாரின் திருவடிகளில் விழுந்து வணங்கித் திருநீறு பெற்றுப் பெருமையுறுவர். தமிழ்நாடு முழுதும் அன்ப ராயினார் பலர், எங்கள் ஊருக்கு வரவேண்டும் - எங்கள் ஊருக்கு வரவேண்டும் என வேண்டி அன்புடன் அழைத்துச் சென்று சொற்பொழிவாற்றச் செய்து கேட்டு மகிழ்வர். அடிகளாரின் தலைமையில் பேசாத பெரும் புலவர்கள் இல்லை எனலாம். அடிகளார் தலைமை தாங்கிப்பேசாத பெருங்கழகங்களும் இல்லை எனலாம்.

தவத்திரு ஞானியார் அடிகளார் இட்ட பணிகளை அன்புடன் செய்வதைத் தம் வாழ்நாளில் பெற்ற பெரும் பேறாகக் கருதியோர் பலர். அடிகளார்க்குத் தம் அன்புக் காணிக்கையாகப் பழவகைகளைக் கூடை கூடையாகக்

கொண்டுவந்து குவித்தவர் பலர். ஒருவரோ டொருவர் போட்டி போட்டிக் கொண்டு தாமே வலிந்து சென்று அடிகளார்க்கு விசிறு விசிறுவதைத் தம் பிறவிப் பயனாகக் கருதி இறுமாந்தவர் பலர். மணிக்கணக்கில் அடிகளாரின் திருமுன்பு அடக்க ஒடுக்கமாக அமர்ந்து உரையாடி உவகைக் கடலில் திளைத்துச் செம்மாந்தவர் பலர்.

# 2. முன்னோர் வழிமுறை

இத்தகு பெருஞ் சிறப்புகட்கு உரிய தவப்பெருமகனார் எங்கே பிறந்தார்?-எங்கே வளர்ந்தார்?-எங்கே வாழ்ந் தார்?-என்பதை அறிவதற்குமுன், அவர்தம் முன்னோர் வழிவருமுறையைக் காண்பாம்.

**முதல்பட்டத்து அடிகளார்**

திருக்கோவலூரில் சுப்பிரமணிய ஐயர் என்பவர் தம் மனைவி சுப்பம்மா என்பாருடன் வாழ்ந்து வந்தார். இங்கே ஐயர் என்பது பிராமணரைக் குறிப்பதன்று; பிராமணர் அல்லாத வீர சைவர்களும் ஐயர் என்ற பட்டத்திற்கு உரியவர்களாவர். எனவே, இந்தக் குடும்பம் வீர சைவக் குடும்பமாகும்.

இவர்கட்கு, கலி-4774-ஆனந்த-ஆண்டு-கார்த்திகைத் திங்கள்-கார்த்திகை நாளில் (கி.பி. 1672-நவம்பர்) ஓர் ஆண் குழந்தை பிறந்தது. குழந்தைக்கு ஆறுமுகம் என்னும் பெயர் சூட்டப்பட்டது. ஆறுமுகம் தக்க அகவை (வயது) வந்ததும் மார்பில் சிவலிங்கம் அணிந்தார்; கல்வி கேள்வி களில் வல்லவரானார். துறவறம் பூண்டார். தமக்கெனத் திருக்கோவலூரில் ஓர் 'அருளகம்' (மடாலயம்) அமைத்துக்

கொண்டார். அருளகத்தில் முருகனுக்கும் கோயில் அமைத்து வழிபட்டு வந்தார்.

இவருக்கு ''ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமி கள் என்னும் பட்டப் பெயர் வழங்கப்படலாயிற்று. இருப் பினும், இவரை 'ஞானியார் சுவாமிகள்' என்னும் சுருக்கப் பெயரால் மக்கள் குறிப்பிட்டு வந்தனர். அருளகத்திற்கு 'ஞானியார் மடாலயம்' என்னும் பெயர் வழங்கப்படலா யிற்று.

இவர், அறையணி நல்லூர், சிவ குன்றம், செஞ்சி, திருவண்ணாமலை, திருமுதுகுன்றம் (விருத்தாசலம்), சத்திய விசய நகரம், ஆரணி, திருப்பாதிரிப்புலியூர் (புலிசை) ஆகிய இடங்களிலும் அருளகங்கள் (மடாலயங் கள்) அமைத்து அருளாட்சி புரிந்து வந்தார். 'நிட்டாநு பூதி சாரம்', 'சண்முகர் அகவல்' முதலிய முப்பத்தொரு நூல்கள் இயற்றியருளினார். இவ்வாறு அரும்பெருந் தொண்டாற்றி வந்த ஆறுமுக அடிகளார், விகுருதி ஆண்டு மாசி-27-வியாழக்கிழமை (கி.பி. 1769, மார்ச்சு) தமது தொண்ணூற்றேழாவது வயதில் உலக வாழ்வை நீத்தார்.

**இரண்டாம் பட்டம்:**

இவரை அடுத்து வந்த இரண்டாம் பட்டத்து ஞானி யார் அடிகளார், 'சிவ சண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் என்னும் பட்டப் பெயர் தாங்கி அருளாட்சி புரிந்து வந்தார். முருகர் அந்தாதி, விநாயகர் மாலை, சுப்பிரமணியர் பதிகம் முதலிய நூல்கள் இவர் இயற்றி னார். அறுபத்து மூன்று ஆண்டுகள் அருளகத் தலைவராய் அருளாட்சிபுரிந்து வந்த இவர், நந்தன ஆண்டு-கார்த்திகைத் திங்கள்-மூன்றாம் செவ்வாய் நாளில் (கி.பி. 1832, டிசம்பர்) வாழ்வு நீத்தார்.

**மூன்றாம் பட்டம்:**

மூன்றாம் பட்டத்து ஞானியார், 'சிவ சண்முக சங்கண வசவ மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்' என்னும் பட்டப் பெயருடன் பதினாறு ஆண்டு காலமே அருளாட்சி புரிந்தார். கீலக ஆண்டு-புரட்டாசி-நான்காம் திங்கட்கிழமையன்று (கி.பி. 1848, அக்டோபர்) இவர் மறைந்தார்.

**நான்காம் பட்டம்:**

நான்காம் பட்டத்து ஞானியார், 'சிவசண்முக பரசிவ மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்' என்னும் பட்டப் பெயருடன் நாற்பத்திரண்டாண்டு அருளாட்சி புரிந்து, விரோதி ஆண்டு-ஐப்பசி-26-ஞாயிறு அன்று (கி.பி. 1889 நவம்பர்) ஊனுடல் துறந்தார்.

**ஐந்தாம் பட்டம் - பிறப்பு வளர்ப்பு:**

இந்நூலில் விதந்து எழுத எடுத்துக்கொள்ளப் பெற்றவர் ஐந்தாம் பட்டத்து ஞானியார் அடிகளாரேயாவார். இவர் குடந்தைக்கு 3 கி.மீ. தொலைவில் உள்ள திருநாகேச்சுரம் என்னும் பதியில் வீரசைவப் பெரியாராக விளங்கிய அண்ணாமலை என்பார்க்கும் பார்வதி என்னும் அம்மையாருக்கும், திருமுக (ஸ்ரீமுக) ஆண்டு - வைகாசி - நான்கு - வியாழக் கிழமை - மூலநாளின் (17-5-1873) இரவு 10-15 மணிக்குத் தவ மகனாய்த் தோன்றினார். குழந்தைக்குப் 'பழநி' என்னும் பெயர் சூட்டப் பெற்றது.

முதல் பட்டத்து ஞானியார் மட்டும் திருக்கோவலூரிலே நிலையாய்த் தங்கியிருந்தார். மற்ற ஊர் அருளகங்கட்குப் போய்ப் போய் வருவார். இரண்டு-மூன்று-நான்காம் பட்டத்து ஞானியார்கள் புலிசை என்னும் திருப்பாதிரிப் புலியூர் அருளகத்திலேயே நிலையாய் அமர்ந்திருந்து மற்ற ஊர் அருளகங்கட்குப் போய்ப் போய்

ஆதீனம் - வருவார். புலிசையில் இருப்பினும், திருக்கோவ லூர்திருப்பாதிரிப் புலியூர் - என்றே வழங்கப்படும்.

இந்நிலையில், நான்காம் பட்டத்து அடிகளார் மறைவ தற்குப் பதினாறு ஆண்டுகட்கு முன்பே, அருளகத்தை மேற்பார்வையிட்டுக் கவனித்துக் கொள்ள அவருக்கு உதவி தேவைப்பட்டது. அவர், திருநாகேச்சுரத்தில் இருந்தஉறவு முறையினரான அண்ணாமலையின் குடும்பத்தைப் புலிசைக்கு வரவழைத்துக் கொண்டார். அண்ணாமலை ஐயாவும் பார்வதி அம்மையாரும் தம் ஆறு திங்களேயான குழந்தை பழநியுடன் புலிசைக்கு வந்து அருளக மேற்பார் வைப் பொறுப்பை ஏற்றுக் கொண்டனர். காவிரிக் கரை யில் (திருநாகேச்சுரத்தில்) பிறந்த ஆறு திங்கள் குழந்தை பழநி கெடிலக்கரைக்கு (திருப்பாதிரிப் புலியூருக்கு) வந்தது தமிழகத்தின் நற்பேறு ஆகும்.

**கல்வி**

பழநிக்குப் படிக்கும் அகவை வந்ததும், தமிழ், தெலுங்கு, சமசுகிருதம், ஆங்கிலம் ஆகிய மொழிகள் கற்கும் வாய்ப்பு ஏற்பட்டது.

புலிசையில் உள்ள அர்ச். சூசையப்பர் கிளைப்பள்ளி யில் பழநி சேர்ந்து படித்தார். அவருக்குத் தமிழ் ஆசிரியராய் வாய்த்தவர் தெய்வசிகாமணி என்பார். பள்ளிப்படிப்போடு, அருளகத்தில், சென்ன கேசவலுநாயுடு என்பவரால் நான்காண்டு காலம் பழநிக்குத் தெலுங்கு மொழி கற்பிக்கப்பட்டது. கி.பி. 1889-ஆம் ஆண்டு ப்ரி-மெட்ரிகுலேஷன் (Pre - Matriculation) படித்துக் கொண்டிருந்தார் பழநி. அப்போது அவருக்கு அகவை (வயது) பதினேழு.

தாமும் வீரசைவம் பற்றிக் கற்பித்தும் பிறரைக் கொண்டு கல்வி கற்பித்தும் ஐந்தாம் பட்டத்துக்கென்றே

பழநியைப் பண்படுத்தி வந்த நான்காம் பட்டத்து ஞானியார். தமக்கு அண்மையில் இறுதிநேரப் போவதை எண்ணி, விரோதி-ஐப்பசி-3 (20-11-1889) ஆம் நாள், தம் கையாலேயே பழநிக்குத் துறவு தந்து, 'சிவ சண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்' என்னும் பட்டப் பெயரும் சூட்டினார். அடுத்து சிலநாள் கடந்ததும் அவர் இறுதி எய்தினார்.

எனவே, அடுத்த கார்த்திகைத் திங்கள் 7-ஆம் நாள் வியாழக் கிழமையன்று முறைப்படி பழநி பட்டத்து ஆட்சி ஏற்றார். பட்டம் ஏற்ற அடிகளார் வறிதே தசை மூட்டையை வளர்த்துக் கொண்டிருக்கவில்லை. ஓரளவு இசைத் தமிழ் பயின்றார்; பிடில் வாசிக்கக் கற்றார். உபய வேதாந்த கோவிந்தாச்சாரி என்பவரிடம் வடமொழி பயின்றார். பக்கத்து இணை நகரமாகிய கூடலூர் பள்ளியில் தமிழ் ஆசிரியராகப் பணியாற்றிய சி.மு. சுவாமிநாத ஐயரிடம் தமிழ் பயின்றார். தெலுங்கு நான் காண்டு காலமும், ஆங்கிலம் ஏழாண்டு காலமும், தமிழும் சமஸ்கிருதமும் பதினைந்து ஆண்டு காலமும் கற்று முழுப் புலமை எய்தினார்.

சுவாமிநாத ஐயரிடம் தமிழ் கற்றபோது நிகழ்ந்த சுவையான செய்தி ஒன்று வருமாறு:- ஐயர் அருளகத்திற்கு வந்து பாடம் கற்பித்துச் செல்வது வழக்கம், யாப்பிலக் கணம் கற்பித்த காலத்தில் 'வீட்டிற்குப் புறப்படுவதற்கு முன், ஒரு செய்யுளைத் தந்து அதற்குச் சீர்தளை பிரித்து அலகிட்டு வைக்குமாறு சொல்லிச் செல்வது வழக்கம். ஒருநாள்,

"நற்பா டலிபுரத்து நாதனே நாயினேன்
பொற்பாம் நினதடியைப் போற்றினேன்-தற்போது
வேண்டும் செலவிற்கு வெண்பொற்கா சுப்பத்து
ஈண்டு தருக இசைந்து"

என்னும் பாடலை எழுதித் தந்துவிட்டுச் சென்றார். பாடலி புர நாதன் என்பது திருப்பாதிரிப் புலியூர்ச் சிவனைக் குறிக்கும்.

மறுநாள் ஆசிரியர் சுவாமிநாதர் வந்தார். அடிகளார் பாட்டுக்குச் சீர்தளை பிரித்து எழுதிவைத்திருந்த தாளில் ஒரு பத்து ரூபா (currency) தாளையும் வைத்துக் கொடுத்தார். அப்போதைய பத்து ரூபா என்பது, இப்போதைய முந்நூறு ரூபாவுக்கு நிகர் எனலாம். பெற்ற ஐயர் அடிகளாரை நோக்கி, 'ஏதோ நான் பாட்டுக்கு எழுதி வைத்தேன்– நீங்கள் பணம் தந்துள்ளீர்களே' என்று கூறினராம். அதற்கு அடிகளார், 'நான்பாட்டுக்கு ஏதோ தந்தேன்' என்றாராம். இங்கே பாட்டு என்பது, செய்யுள் என்ற பொருளிலும், மனம்போன போக்கு என்ற பொருளிலும் இன்புறுத்துவதை அறியலாம்.

**ஆசிரியர்பால் அன்பு:**

ஆசிரியர்பால் அன்பு (குருபக்தி) கொண்ட அடிகளார் தமது அருளக நூல் நிலையத்திற்குச் 'சுவாமிநாதநூலகம்' எனப் பெயரிட்டார். ஆசிரியரின் மகன் முத்துகிருஷ்ணனை பி.ஏ. (B.A.)வரையிலும் செலவு செய்து படிக்கவைத்தார். இதிலிருந்து, அடிகளாரின் நன்றியுணர்வை அறியலாம்.

**அருள் பணிகள்:**

பரந்த அளவில் கல்வி பயின்று பெரும் புலமை பெற்ற அடிகளார், தமது நேரம் முழுவதையும் நூல் ஆராய்ச்சியிலும், சொற்பொழிவு ஆற்றுவதிலும், மாணாக்கர்க்குப் பாடம் சொல்வதிலும், சிறந்த உரையாடலிலும் செலவிட்டு வந்தார்.

கடல் நீரை முகந்து கறுத்துத் திரண்ட முகிலினம் பெருமழை பொழிவது போன்று, சிறக்கக் கற்றுத் தெளிந்த அடிகளார் கருத்துச் செறிந்த சொல்மழை பொழியத்

தொடங்கினார். ஒரு மணி நேரம் பேசினாலேயே பெருமூச் செறிந்து இடையிடையே எதையாவது குடித்துக்கொண்டு மின் விசிறியை விட்டகலாதிருக்கும் பெருமக்கள் நிறைந்த இவ்வுலகில், அடிகளார் ஒரே மூச்சாக நான்கு மணிநேரம்- ஐந்து மணி நேரம்-இடையில் எதுவும் பருகாதுதொடர்ந்து சொற்பொழிவாற்றுவார். இவ்வாறு பலநாள் தொடர்ந்து நடைபெறுவது வழக்கம். யார் வேண்டுமானாலும் எவ் வளவு நேரம் ஆனாலும் தொடர்ந்து சொற்பொழி வாற்றலாம்-ஆனால், கேட்பதற்கு ஆள் வேண்டுமே.மக்கள் ஐந்துமணி நேரம் தொடர்ந்து அமர்ந்து கேட்பதென்றால், மிகவும் கவர்ச்சியான - சுவையான - பயன்மிக்க கருத்து களை வரையாது வாரி வாரி வழங்க வேண்டு மல்லவா? அதைத்தான் அடிகளார் ஆற்றி வந்தார்.

ஒரு நாளில் மாலை ஐந்து மணி தொடங்கி இரவு 9 மணிக்கு மேலும் சொற்பொழிவாற்றுவதோடு அடிக ளாரின் பணி அமைந்துவிடவில்லை. நாடோறும் முற்பக லிலும் பிற்பகலிலும் இடையறாது மாறி மாறி வரும் மாணாக்கர்கட்கு மணிக்கணக்கில் பாடம் கற்பிப்பதிலும் பொழுதைச் செலவிடுவார். மாணாக்கர் குழுவில் எளிய இளைஞர்களும் இருப்பர் - அரசு உயர் அலுவலர்களும் இருப்பர்.

சொற்பொழி வாற்றும் நேரம் போக - பாடம் கற் பிக்கும் நேரம்போக - எஞ்சிய நேரங்களிலும் இடையறாது பலர் வந்து அடிகளாருடன் உரையாடிக்கொண்டிருப்பர். ஒவ்வோர் உரையாடலும் ஒரு பாடம் போலவே - ஒரு சொற்பொழிவு போலவே சுவை மிக்கதாய் - பயன் நிரம்பி யதாயிருக்கும். இந்தப் பணிகள் திருப்பாதிரிப் புலியூரில் மட்டுமன்று - அடிகளார் செல்லும் ஊர்களிலெல்லாம் நடைபெறும். ஓராண்டு - ஈராண்டு காலமன்று - தமது

வாழ்நாள் முழுதும் இந்த அருட் பணியை அடிகளார் ஆற்றி வந்தார்கள்.

**தூய உரைநடை:**

மக்கள் தமிழைக் கொச்சையாகவும் பிழைபடவும் பேசுவதை எண்ணி அடிகளார் மனம் நோவது வழக்கம் "ஒழுங்கான எழுத்து நடை என்பது, திருத்தமான பேச்சு நடையின் விளைவே" என்பது 'கிரீனிங்' (Greening) என்னும் அறிஞரின் கூற்று. 'செந்தமிழும் நாப் பழக்கம்' என்பது ஔவையாரின் அமிழ்த மொழி (தனிப்பாடல்). என்வே, அடிகளார் தம் வாணாள் முழுதும், வருபவர் களிடமெல்லாம், எழுதுவது போன்ற தூய செந்தமிழ் நடையிலேயே உரையாடி வந்தார்கள். மற்றவர்க்கும் இது ஒரு 'மாதிரி' யாகும்.

# 3. அடிகளாரின் உருவத் தோற்றம்

ஞானியார் அடிகளாரின் உருவத்தோற்றம் காண்ப வரைக் கவர்ந்து அன்பு கொள்ளச் செய்யும். போதிய உயரம் - நடுத்தரமான பருமன் - அருள் ஒழுகும் கண்கள் - நீறு பூத்த பரந்த நெற்றி - ஆழ்ந்த எண்ணம் (சிந்தனை) கொண்ட திருமுகக் குறிப்பு-கால் குண்டலம்-கழுத்தில் உருத்திராக்கம் - மார்பில், சிவலிங்கம் உள்ளிருக்கும் பெட்டகம் போன்ற செச்சை - அட்டைக் கறுப்பு இல்லாத மாநிறம் சார்ந்த கருநிறம் - மழித்த தலை-காவி உடை - இன்ன பிற அமைப்பு கொண்ட அருள் வடிவம் எவரை யும் கவரும். அடிகளாரின் தோற்றப் பொலிவைக் குறித்துத் திரு.வி. கலியாண சுந்தரனார் எழுதியிருப்பது வருமாறு:

"... முருகன்சேவடி வருடி உருகும் ஈர நெஞ்சும், அவன் புகழ்பேசி இனிக்கும் நன்னாவும், தண்மை பொழியும்

செவ்விய நோக்கும், வெண்ணீறு துதையும் நெற்றியும், மாணிக்கக் குழை பிறங்குஞ் செவியும் பொன்னொளிரும் மணிமார்பும், கருமைக்கதிர் விரிக்குந் திருமேனியும் 'சண்முகா.... சண்முகா' என்று நீறளிக்கும் நீண்ட கையும் கொண்ட அடிகளின் திருவோலக்கப் பொலிவு என்னுள் ளத்தில் ஓவியமெனப் படிந்து நிற்கிறது. அஃது எவர் உள்ளத்தையுங் கவரும்; எவர்க்கும் எளிதில் இன்பூட்டும்'' என்பது திரு.வி.க.வின் விளக்கம். இங்கே அடிகளாரின் தோற்றப் பொலிவில் மயங்குவதா? அல்லது திரு.வி.க. வின் தமிழ் நடையில் உள்ளத்தைப் பறிகொடுப்பதா? - புரிய வில்லையே!

'வாதம் பாதி - வண்ணான் பாதி' என்பது ஒரு வகைப் பழமொழி. வாதம் என்பது உடல் வளத்தைக் குறிப்பது; வண்ணான் என்பது உடைவளத்தைக் குறிப்பது. அடிகளார்க்கு உடைவளம் இல்லை – காவி உடைதான் எனினும், உருவத் தோற்றப் பொலிவு சிறந்திருந்தது. மற்றும், 'செட்டியார் மிடுக்கா - சரக்கு மிடுக்கா என்பது ஒரு வகைப் பழமொழி. ஞானியாரைப் பொறுத்த வரையி லும், செட்டியாரும் மிடுக்குதான் – சரக்கும் மிடுக்குதான். அவரிடம் வந்து இலவசமாகச் சரக்கு கொள்முதல் செய்து கொண்டு சென்றவர்கள் மிகப் பலராவர். அவர்களுள் ஒருவரின் உரை காண்பாம்.

சென்னை – டிப்டி கலெக்டராயிருந்தவரும் 'இராவ் சாகீப்' என்னும் பட்டம் பெற்றிருந்தவரும் ஆகிய கே. கோதண்டபாணிப் பிள்ளை அடிகளார் தோற்றப் பொலிவு பற்றி எழுதியுள்ள வியத்தகு உரை வருமாறு:-

''ஞானியார் பெருமான் என்பார் யாவர் - எத்தகையர் என நேரே காணுமாறு நெடுநாள் அவாவி ஒரு நாள் கண்டேன். காட்சியளவில் இவர்தம் வடிவும் அழகும்

மனத்தைக் கவர்ந்தன. சிறிதே சிவந்து நிமிர்ந்த உருவம். துவராடை உடுத்த துகள்தீர்மேனி. பருமையும் மெலிவும் இன்றிப் பாங்குற அமைந்த உடல். விரிந்த கொள்கையின் பரந்த நெற்றி. ஆழ்ந்த நோக்குடன் அன்பு ஒழுகு கண்கள். நேர் நிமிர்ந்து முனை வளையாக் கூர் அறிவு காட்டும் கூரிய மூக்கு. தமிழ்ப் புலமை பூக்கும் தனி வாய். எழுத அரியவடிவும் அழகும் இயற்கையிற்பெற்ற இவர் காதில் அசைந்தது குண்டலம். கழுத்தில் தவழ்ந்தது கண்டிகைத் தாவடம். தெய்வ ஒளி வீசும் திருமுகம். இவர் முகத் தோற்றத்தை உற்று நோக்குக. அதில் தோற்றுவது யாது? சங்கத்தமிழின் தீங்களிப்போ! சிந்தை சேர்ந்த சிவத்துவ ஒளியோ! அன்பு பழுத்த அகத்தெளிவோ! அறிவுபழுத்து அமைவளமோ! தமிழின் பழுத்த தனியழகோ! யாதெனப் புகல்வது! இவை யாவும் திரண்டெழுந்த 'ஞானத்தின் திரு உருவோ' நம் எதிரே தோன்றுவது? கண்டன யாவை யும் வாரி வாரி உண்டனகண்கள்-கொண்டனகளிப்பு''-

கோதண்டபாணியார் கூறியது இது. அடுத்து மற்றோர் அன்பர் கூறியதையும் காண்போம்:

''சிவம் பொலிந்து விளங்கும் அடிகளார், அவைக்கண் எழுந்தருளிய அளவிலேயே புன்னகையுடன் கூடி விளங்கும் திருமுக மண்டலமும் திருநீற்றினால் திகழ்ந்து விளங்கும் பரந்த நெற்றியும், மகர குண்டலங்களை மகிழ்வுடன் தாங்கி நிற்கும் திருச் செவிகளும், அனைவரையும் நோக்கி இன்முகம் காட்டும் ஆழ்ந்தொளிரும் அரிய கண்களும், செம்பொன் ஒளிவிட்டு விளங்கும் சிவலிங்க தாரணத்துடன் மிடைந்து விளங்கும் உருத்திராக்கத் தாழ்வடத்தின் தனி யழகும் காண்போர் கண்களைக் கவரும் பெரும் விருந் தெனத் தோன்றும். அடிகளாரின் வருகையைக் கண்டதும், அவையில் குழுமியுள்ள அன்பர்கள் தம் வீண் பேச்சுக்களை

நிறுத்திக் கொண்டு, அடிகளார் திரு முகத்தையே நோக்கிய வண்ணம் இருப்பர்''-

மேற்கூறப்பட்ட சொல்லோவியங்கள் அடிகளாரை நேரில் காண்பது போன்ற நிலைமையை அளிக்கின்றன அல்லவா?

## 4. தோற்றுவித்த கழகங்களும் பிற கழகங்களும்

ஞானியார் அடிகளார் தம் காலத்தில் பல ஊர்களில் பல கழகங்கள் தோன்றச் செய்துள்ளார். அக்கழகங்களின் ஆண்டு விழாக்களில் தலைமை தாங்கிச் சொற்பொழி வாற்றியுள்ளார். சில விழாக்களில் வேறு யாராவது தலைமை தாங்கினும் தொடக்க உரையும் முடிவில் வாழ்த்துரையும் அடிகளார் அருளுவார். அக்கழகங்களின் பெயர்களும் அவை அமைத்துள்ள ஊர்களும் காலமும் வருமாறு:

மதுரைத் தமிழ்ச் சங்கம் - மதுரை, 24-5-1901
வாணி விலாச சபை - புலிசை, ஞானியார் அருளகம்-1903.
சைவ சித்தாந்தமகா சமாசம் - புலிசை - 7-7-1905.
ஞானியார் மாணவர் கழகம் - புலிசை, திருக்கோவலூர்.
பக்த பால சமாசம் - மணம் பூண்டி - 20-9-1908.
கம்பர் கலாமிர்த சங்கம் - திரு வெண்ணெய்நல்லூர்-
-24-10-1909.
வாகீச பக்தசனசபை - நெல்லிக்குப்பம் - 25-4-1910
கலைமகள் கழகம் - 1911-புதுச்சேரி
புதுவைச் செந்தமிழ்ப் பிரகாச சபை - புதுச்சேரி

ஞானியார் சங்கம் - காஞ்சிபுரம்
சன்மார்க்க சபை - கூடலூர்(தென்னார்க்காடு).
சோமாசுகந்த பக்தசனசபை - வண்டிப்பாளையம்,
சரசுவதி விலாச சபை - புலிசை
சைவசித்தாந்த சபை - உத்திரமேரூர்.
சமயாபி விருத்தி சங்கம் - செங்கல்பட்டு
சைவ சித்தாந்த சபை - காவித் தண்டலம்.
பார்க்கவ குலச்சங்கம் - மணம் பூண்டி - 1911
கோவல் சைவ சித்தாந்த சமாசம் - திருக்கோவலூர்-1912
சத்தி விலாச சபை-திருவண்ணாமலை-1915
- தமிழ்ச்சங்கம்
ஞானியார் பாடசாலை என்னும் பாடலேசுரர் தரும பாடசாலை -2-2-1917
வாகீச பக்தபத சேகர சபை - வட மட்டம் - 3-1-1919
இன்ன பிற - இன்ன பிற.

இனி இக்கழகங்கள் தொடர்பான விவரங்களும் அடிகளார் கலந்து கொண்ட வேறுசில சங்கங்கள் பற்றிய விவரங்களும் வருமாறு:

**மதுரைத் தமிழ்ச் சங்கம்:**

பாலவ நத்தம் குறுநில (சமீன்தார்) மன்னரான பாண்டித் துரைத் தேவர் 1900-ஆம் ஆண்டு சென்னை சென்று திரும்பும் வழியில் திருப்பாதிரிப்புலியூருக்கு வந்து அடிகளாரின் அருளகத்தில் தங்கினார். அடிகளாரின் பெருமையைக் கேள்விப்பட்டு மகிழ்ந்து அடிகளாரோடு உரையாடி இன்புற்றார். அன்று மாலை தேவர் தலைமையில் அடிகளார் "தமிழின் தற்கால நிலை" என்னும் தலைப்பில் சிறந்ததொரு சொற்பொழிவு செய்தார்; தமிழ் வளர்க்க மதுரையில் தேவரும் மற்ற செல்வர்களும்

சேர்ந்து ஒரு தமிழ்ச் சங்கம் அமைக்க வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார்.

பாண்டித் துரைத் தேவர் தமது தலைமை உரையில், வீற்றிருக்கும் தம் தமையன் பாஸ்கர சேதுபதி மன்ன ரிடம் கூறி, மதுரையில் தமிழ்ச் சங்கம் ஏற்படுத்த ஆவன புரிவதாக அறிவித்தார். ஞானியார் அருளகத்தில் விதை ஊன்றப்பட்டு விட்டது.

சில திங்கள் கழித்து மன்னர் சேதுபதியவர்கள் திரு வண்ணாமலை சென்று கார்த்திகை விளக்கு (தீப)விழாக் கண்டு வணங்கிப் பின்னர்த் தம் அரசக் குழுவுடன் (பரி வாரங்களுடன்) புலிசை ஞானியார் அருளகம் வந்து சேர்ந்து அடிகளாரோடு அளவளாவி மகிழ்ந்தார். அன்று மாலை அடிகளார் ஒரு சிறப்புச் சொற்பொழிவு செய்தார். முன்னமேயே பாண்டித் துரைத் தேவர் வாயிலாக அடிக ளாரின் பெருமையைக் கேள்வியுற்ற மன்னர், அடிக ளாரின் சொற்பெருக்கைக் கேட்டதும் மிகுந்த தமிழ்ப் பற்று உடையவரானார். ஊர் திரும்பியதும், போதிய பொருள் உதவி புரிந்து மதுரையில் ஒரு தமிழ்ச் சங்கம் (கலாசாலை) ஏற்படுத்துவதாக வாக்களித்தார்.

'அவ்வண்ணமே, 24 5-1901-ஆம் நாள் மதுரையில் 'தமிழ்ச் சங்கம்' நிறுவப் பெற்றது. அது இப்போது நான்காம் தமிழ்ச் சங்கம் எனப் போற்றப் பெறுகிறது. சங்கத்துடன், 'சேதுபதி கலாசாலை' என்னும் கல்வி நிறு வனம் ஒன்றும் நிறுவப்பெற்றது. 'செந்தமிழ்' என்னும் திங்கள் இதழும் தொடங்கப்பெற்றது. காசு பெறாமல் உண்டியும் உறையுளும் மாணாக்கர்கட்குத் தந்து கல்வி பயிற்றப்பட்டது. பிரவேச பண்டிதம், பால பண்டிதம், பண்டிதம் என்னும் மூன்று தேர்வுகள் முறையே நடத்தப் பெற்றன. பண்டிதத் தேர்வில் வெற்றி பெற்றவர்க்குப்

'பண்டிதர்' என்னும் பட்டம் வழங்கப் பெற்றது. சென்னைப் பல்கலைக் கழகம் நடத்திய தமிழ் வித்துவான் தேர்வினும் பண்டிதர் தேர்வு கடினமானது என்று கூறுவது வழக்கம். பற்பலர் பண்டிதப் பட்டம் பெற்றுப் பள்ளிகளில் தமிழ் ஆசிரியராய்ப் பணி புரிந்தனர். இவ்வாறாக, புலிசை ஞானியார் அருளகத்தில் தரப்பெற்ற விதை மதுரையில் ஊன்றப்பெற்று முளைத்துச் செழித்து வளர்ந்து பெருமர மாய்ப் பயனளித்துக்கொண்டிருப்பதை அறிந்து – அறிந்து புலிசை ஞானியார் பெருமகிழ்வுற்றார். மதுரையில் நான்காம் தமிழ்ச் சங்கம் தோன்றிய வரலாறு இது. இது தோன்றச் செய்த தந்தை(மூல காரணர்)புலிசை ஞானியார் அடிகளார் என்பதைச் சொல்லத் தேவையில்லை. அடிக ளாரின் தமிழ்ப் பணிக்கு இது ஒரு பெரிய சான்றாகும்.

**புலிசை வாணி விலாச சபை:**

புலிசை அருளகத்தில் ஒரு கழகம் ஏற்படுத்த வேண்டும் என அடிகளார் விரும்பிக்கொண்டிருந்தனர். 1903 ஆம் ஆண்டு (சோபகிருது ஆண்டு) பாண்டித் துரைத்தேவர் மீண்டும் ஒரு முறை புலிசை ஞானியார் அருளகத்திற்கு வருகை புரிந்தார். அவர் தலைமையிலேயே "வாணி விலாச சபை" என்னும் கழகத்தை அடிகளார் நிறுவினார். அடிக ளார் தலைவராகவும், வழக்கறிஞர் குப்புசாமி செட்டியார் செயலாளராகவும் மற்றும் அறிஞர்கள் பலர் உறுப்பினர் களாகவும் அமர்த்தப் பெற்றனர். அருளகத்தில் வாரந் தோறும் சொற்பொழிவுகள் நடந்தன; ஆண்டு விழாக்களும் நடைபெற்று வந்தன.

அந்தக் காலத்தில் தமிழ் அன்னை ஆங்கில அரக்க னுக்கு அடிமைப்பட்டுக் கிடந்தாள். ஆங்கிலம் கற்ற அறி வாளிகள் – மா மேதைகள் தமிழில் பேசுவது தாழ்வு என எண்ணம் கொண்டிருந்தனர். தமிழில் பேசவும் தெரியாது.

'எனக்குத் தமிழில் பேச வராது' என்று சொல்வதைப் பெருமையாகக் கருதி வந்தனர். ஆங்கில வெள்ளத்தில் தமிழ்ப் பயிர் மூழ்கித் தத்தளித்துக் கொண்டிருந்தது.

அப்போது அடிகளார் தமது வாணி விலாச சபை வாயிலாகத் தமிழ்ப் பயிருக்குப் புத்துயிர் கொடுத்துக் கொண்டிருந்தார். இந்தச் சபையில் பாண்டித் துரைத் தேவர், உ.வே.சாமிநாதஐயர், ப.வே.மாணிக்கநாயக்கர், கோ. வடிவேலு செட்டியார், ரா.பி சேதுப்பிள்ளை முதலிய பேரறிஞர்கள் வந்து தலைமை தாங்கியும் சொற்பொழி வாற்றியும், தமிழ் வளர்ச்சிப் பணியில் தத்தம் பங்கை ஆற்றினர்.

**சைவ சித்தாந்த மகா சமாசம்:**

சைவ சித்தாந்த மகா சமாசம் என்பது சென்னை யைத் தலைமையிடமாகக் கொண்டிருக்கும் ஒரு பெரிய இயக்கமாகும். இப்போது திராவிட இயக்கங்கள் ஆங் காங்கே கூட்டங்களும் மாநாடுகளும் நடத்துகின்றன. இவை அன்று இல்லை. இவற்றிற்குப் பதிலாக, அன்று, சைவ சித்தாந்த மகா சமாசம், ஆங்காங்கே சிறப்புக் கூட்டங்களும் ஆண்டு தோறும் மூன்று நாள் மாநாடுகளும் நடத்தி வந்தது. ஆண்டு மாநாடுகள் டிசம்பர் திங்களில் கடைசி மூன்று நாட்களில் நடைபெறும். ஆண்டுதோறும் ஏதாவது ஒவ்வோர் ஊரில் மாறி மாறி நடைபெறும். வெளியூர்களிலிருந்து ஏராளமான பேராளர்களும் (பிரதி நிதிகளும்) அன்பர்களும் வந்து குழுமுவர். தொண்டர் படை அமைத்து, வருபவர்கட்கெல்லாம் வசதி செய்வித்து உண்டியும் உறையுளும் இலவசமாக வழங்கச் செய்வர்.

திராவிட இயக்க மாநாடுகளில், கூட்டம் இறுதிவரை யும் இருப்பதற்காக, பெரியார் ஈ.வே. இராமசாமியும் அறிஞர் அண்ணாதுரையும் இறுதியில் பேசுவதுபோல,

சமாசக் கூட்டங்களிலும் மாநாடுகளிலும் திரு.வி.கலியாண சுந்தரனாரே இறுதியில் பேசுவார். திரு.வி.க. பேசியதும் நன்றி சொல்வதெனில் கூட்டம் கலைந்துவிடும். அதனால், திரு.வி.க.வின் இறுதிப் பேச்சுக்கு முன்னாலேயே செய லாளர் நன்றி கூறிவிடுவார். பின்னரே திரு.வி.க.பேசுவார்.

1940-ஆம் ஆண்டு யான் மயிலம் தமிழ்க் கல்லூரியில் விரிவுரையாளனாகப் பணியாற்றினேன். அந்த ஆண்டு டிசம்பர் இறுதியில் மூன்றுநாள் மயிலம் மலையில் சைவ சித்தாந்த மகா சமாச மாநாடு நடைபெற்றது. அதனால் எனக்கு இது பற்றிய பட்டறிவு நிரம்ப உண்டு. அப்போதி லிருந்து யானும் இந்த இயக்கத்தில் பங்கு கொண்டேன். அடுத்தடுத்துச் சீர்காழி, திருச்சி, மதுரை முதலிய ஊர்களில் நடைபெற்ற மாநாடுகட்கு யான் சென்றிருந்தேன் சீர்காழி மாநாட்டில் 'தமிழ்ச் சொல் மலர்' என்ற தலைப்பிலும், மதுரை மாநாட்டில் 'தன் பெருமை தானறியாத் தலைவன்' என்ற தலைப்பிலும், யான் சொற்பொழி வாற்றினேன். மதுரை மாநாட்டுத் தலைவர் திரு.வி.க. ஆவார். சமாசத்தின் திங்கள் கூட்டங்களிலும் யான் பல ஊர்களில் திரு.வி.க. தலைமையிலும் மற்றவர்கள் தலைமையிலும் சொற்பொழிவு செய்துள்ளேன்.

எதற்காக இவ்வளவு சொல்ல வேண்டி நேரிட்ட தெனில், இந்தக் காலத்தில் உள்ளவர்கட்குச் சமாசத்தின் அருமை பெருமை தெரியாது. இலமனூரில் அகண்ட காவிரி என்னும் பெயர் பெற்றிருந்த காவிரி, கடலை நோக்கி வர வர ஆடுதாண்டும் காவிரியாய்ச் சிறுத்து விட்டது போன்று அன்று ஆல மரமாய் இருந்த சமாசம் இன்று சிறு செடியாய்க் குறுகிவிட்டது. அன்று சமாசம், திருமுறைகள் சங்க இலக்கியங்கள் முதலிய நூல்களைப் பதிப்பித்த தன்றி, மேலும் பல நற்பணிகள் செய்து வந்தது. 'சித்தாந்தம்' என்னும் திங்கள் இதழும் உண்டு,

# 19

1945-ஆம் ஆண்டு யான் புதுச்சேரியில் மருத்துவமனையில் படுக்கையாய்க் கிடந்தபோது, வீட்டு முகவரிக்கு வந்த சித்தாந்த இதழ் எனக்கு மருத்துவமனையில் கொண்டு வந்து தரப்பெற்றது. இன்று வளர்ச்சி குன்றியுள்ளது.

ஒரு கருத்தை விளக்கத் தெரிந்ததிலிருந்து 'தெரியாததற்குச் செல்ல வேண்டும்' – 'அண்மையிலிருந்து சேய்மைக்குச் செல்ல வேண்டும்' – என்பது உளவியல் கருத்து. இதை ஒட்டி, இந்தக் கால இளைஞர்கட்குத் தெரிந்த திராவிட இயக்கக் கூட்டங்களை நினைவு படுத்தி, அதன் வாயிலாக, அவர்கள் அறியாத சமாசக் கூட்டங்களையும் மாநாடுகளையும் யான் அறிமுகப் படுத்தினேன்.

சமாசத்தோடு எனக்கு இருந்த தொடர்பை அறிவித்ததும் இந்த நோக்கத்திற்கேயாகும். அன்று சமாச மாநாட்டில் பேசாத பெருந்தலைவர்கள் இல்லை எனலாம். சமாச மாநாட்டில் பேசும் வாய்ப்பு பெறுவதற்குப் பலர் முயன்றதுண்டு. அந்த அளவுக்குச் சமாசம் சிறப்புற்றிருந்தது.

இதுகாறும் சைவ சித்தாந்த மகா சமாசத்தின் சிறப்புப் பெருமையை இவ்வளவு கூறியதற்கு உரிய காரணமாவது:- இதைக் கருவில் தாங்கிக் கருவுயிர்த்து வெளிக் கொணர்ந்து வளர்த்து உருப்படியாக்கி விட்டவர் ஞானியார் அடிகளார் என்பதை அறிவித்தலேயாகும்.

அடிகளார் சைவத்தை வளர்ப்பதற்கு உரிய வழிமுறைகளைத் தமக்குள்ளே ஆராய்ந்துகொண்டிருந்தார். அப்போது, திருப்பாதிரிப் புலியூரை அடுத்துள்ள கூடலூரில் ஜே.எம். நல்லசாமிப் பிள்ளை என்பவர் மாவட்ட நீதிபதியாக இருந்தார். அவர் அடிக்கடி அடிகளாரிடம் வருவார். சிவஞான போதம் என்னும் நூலைப் பாடம் கேட்டு ஆங்கிலத்திலும் மொழி பெயர்த்தார். அவரிடம் அடிகளார்

இது பற்றிக் கலந்துபேசினார். அவர் சென்னை சென்று அறிஞர் பலரிடம் கூறி இம்முயற்சிக்கு ஆதரவு தேடினார். பலரது ஒத்துழைப்பு கிடைத்தது. இதன் பயனாக, விசுவாவசு ஆண்டு - ஆனித் திங்களில் (7-7-1905) 'சைவ சித்தாந்த மகா சமாசம்' என்னும் பெயருடைய நிறுவனத்தைத் தமது புலிசை அருளகத்திலேயே தொடங்கிவைத்தார். அதற்கு, நாவலர் பாடசாலை சதாசிவம் பிள்ளை தலைவராகவும், மறைமலையடிகள் செயலாளராகவும் அமர்த்தப் பெற்றனர். அடிகளார் அவ்வப்போது சமாச வளர்ச்சியைக் கண்காணித்து வந்தார்.

**ஞானியார் மாணவர் கழகம்:**

அடிகளாரின் முதன்மையான மாணாக்கராகிய மணம் பூண்டி ம.ரா. குமாரசாமிப் பிள்ளை, புலிசை அருளகத்திலேயே ஞானியர் மாணவர் கழகம் என ஒன்றை நிறுவினார். ஞானியாரின் நூற்றுக் கணக்கான மாணவர்கள் அதன் உறுப்பினர்கள் ஆனார்கள். கழக விழாக்களில் அடிகளார் தலைமை ஏற்று அரிய பொழிவு செய்வார்கள்.

**புதுவைக் கலைமகள் கழகம்:**

புதுச்சேரியில் பங்காரு பத்தர் என்பவர் பெரிய புலவராய்த் திகழ்ந்தார். விரோதிகிருது - வைகாசி - முதல் நாள் (1911) கலைமகள் கழகம் நிறுவினார். இக்கழகத்தோடு தொடர்புடையவராயிருந்தவர்களின் பெயர்கள் வருமாறு: மகா வித்துவான் பெரியசாமிப் பிள்ளை, திருப்புளிசாமி, துணிக்கடை சு. அண்ணாமலை முதலியார், பெரிய அலுவலர் வி. முத்தைய முதலியார், பெரும்புலவர் வீ. துரைசாமி முதலியார், வேங்கடாசல நாயகர், கிரந்தே சிவ சங்கர செட்டியார், சிவ சச்சிதானந்த செட்டியார், சுப்பிரமணிய பாரதியார், வ.வெ. சுப்பிரமணிய ஐயர், கனக. சுப்புரத்தினம் (பாரதி தாசன்) முதலியோர் ஆவர்'

கலைமகள் கழக ஆண்டுவிழாக்கள் அடிகளாரின் தலைமையில் சிறப்பாக நடை பெறும். விழாவிற்கு வரும் அன்பர்கட்குக் கிரந்தே-சிவ சங்கர செட்டியார் விருந்து அளித்துப் போற்றுவார். அடிகளார் பூசனை புரியத் தம் முடன் முருகன் திருமேனியை எடுத்துச் செல்வது வழக்கம். அதற்குப் புதுவைச் செங்குந்த மரபினர் வெள்ளியால் திருவாசிகை செய்து அளித்துச் சிறப்புப் பெற்றனர்.

**பார்க்கவ குலச் சங்கம்**

திருக் கோவலூரின் அருகில் உள்ளது மணம் பூண்டி அடிகளாரின் தலைமாணாக்கருள் ஒருவராகிய ம.ரா. குமாரசாமிபிள்ளை, தம் குல வளர்ச்சிக்காகத் தம் ஊரில் ஒரு சங்கம் நிறுவ விரும்பினார். 6-8-1911 ஆம் நாள் அடிகளாரை அழைத்துச் சென்றார். அடிகளார் தலைமை யில் அக்குலத்தினர் கூடினர். பார்க்கவ குலம் என்பது, திருக்கோவலூரை ஆண்ட தெய்வீக மன்னனின் குலம் ஆகும். கோவல் மலையமானும் அக்குலத்தவனேயாவான்.

அன்று அடிகளார் தெய்வீக மன்னனைப் பற்றிச் சொல் மழை பொழிந்தார்; பார்க்கவகுலச் சங்கமும் தொடங்கி வைத்தார்; 1912-ஆம் ஆண்டு பார்க்கவ குலச் சங்கத்தின் முதல் ஆண்டு விழாவிற்குத் தலைமை ஏற்றுச் சிறப்புச் செய்தார். கோவல் சைவ சித்தாந்த சமாச ஆண்டு விழாவும், கோவல் ஞானியார் மாணவர் கழக ஆண்டு விழாவும் சேர்ந்து கொள்ள, மூன்று நாட்கள் தொடர்ந்து அடிகளார் அருளுரை வழங்கினார்.

1913-ஆம் ஆண்டு சைவ சித்தாந்த மகா சமாசத்தின் எட்டாவது மாநாடு வேலூரில் நடைபெறுவதாய் முடிவு செய்யப்பெற்றது. தலைமை ஏற்க இசைவு தந்த அடிகளார் வேலூர் செல்லும் வழியில், திருவண்ணாமலையில் தங்கி

னார். அது கார்த்திகை '(விளக்கு (தீப) விழா' நடக்கும் காலம். அடிகளார் அருணகிரி முதலியார் இல்லத்தில் வீற்றிருந்தார். திருக்கோயிலின் அறங்காவலர்களாக இருந்த செட்டிப்பிள்ளைகளின் வேண்டுகோட்கு இணங்க, 'சிவ பக்தி', 'அருணையும் அடியார்களும்' என்னும் தலைப்பு களில் சொற்பெருக்கு நிகழ்த்தினார்.

பின்னர் வேலூர் போந்து, சைவ சித்தாந்த மகா சமாசத்தின் எட்டாவது மாநாட்டுக்குத் தலைமை தாங்கிச் சைவம், சித்தாந்தம் என்னும் தலைப்புகளில் கடல் மடை திறந்தாலெனச் சொல்வெள்ளம் பெருக்கெடுக்கச் செய் தார். இந்த மாநாட்டில், வழக்கம் போல், ம.ரா. குமார சாமிப்பிள்ளை, திரு.வி.க., சச்சிதானந்தம் பிள்ளை முதலி யோரும் சொல்மழை பொழிந்தனர். இம்மாநாட்டில் அடிகளார் ஆற்றிய சிறப்புரையைப் பற்றி, சித்தூர் நாட்டாண்மைக் கழக உயர்நிலைப் பள்ளித் தலைமை யாசிரியர் சி.எம். பார்த்தசாரதி என்பார் 'இந்து' (The Hindu) நாளிதழுக்கு ஆங்கிலத்தில் சிறப்புக் கட்டுரை ஒன்று எழுதி அனுப்பினார். அப்படியே அது வருமாறு:-

Extract from 'The Hindu' 'Jan. 13, 1914.
The Eighth Siva Siddhanta Conference.
(From a Correspondent)

"The eighth anniversary of the 'Saiva Siddhanta Maha Samajam' at Vellure on the 26th, 27th and 28th December 1913. During the entire session, the enthusiasm that prevailed judged both by the numbers that attend and the interest displayed by the audience, was remarkable great. Indeed those who had attended the earlier anniversaries declared that the Vellore Conference was the most sucessful of any in the

annuals of the Samaj. One or two outstanding features of the conference deserve in my opinion the hospitality of your columns.

The most important circurmstance that contributed to the remarkable success was the reputation which the President of the Conference had in the Saiva Community — a reputation, which, if he hap his full desers, merits to traval father abroad. His Holiness Sri-LA-Sri Siva Shanmukha Meignana Sivacharya Swamigal, President of the Gnaniyar Mutt at Thiruppapuliyure is truly a man than whom no higher sat" in the presidential chair of any Mutt at least in recent itmes. He is on erudite scholar in Tamil, and his deeply learned in the Saiva Siddhanta philosophy as exponded in the most mystic works in Tamil. His knowledge of Sanskrit which came out so clearly in his presidential and other uttarances was found quite sound as for as it went, and is quite adequate for the purpose for which he employs it, which is to set forth, and if possible ratify, the teachings Promalgated in our Siddhanta Tamil literature. One Remarkable feature that characterised all the Swamigal's features was the absolute Purity and uniform dignity of their diction, style and spirit, a pleasing contrast to the sickening medley to which we are often treated in the Harikatha and Puranic sermons which are but too frequently a jarring combination of stilted diction which very vulgar Tamil but little removed from the abscene. But with the Swamigal's Power of chaste and dignified diction, his Piety and relegious fervour readily captured

the hearts of his audience, and filled the large hall in which the conference met with a strong aroma of religious enthusiasm and spiritual uplifting, during every one of the three days of the session. It was therefore with perfect justice that the assembled Saivites and even others unanimously declared that his Holiness was most worthy of the great difference, rather the great reverence. that was paid to him by the gathering — but a reverence let me not omit to add, which he received with the greatest modesty and laid at the feet of his God Sri Subramania the more of our Mutts were Presided over by teachers of his stamp"

Contributed by his friend and admirer: C,M. Parthasarathi Mudaliar, Headmaster, Board High School, Chittoor.

**சத்தி விலாச சபை:**

அடிகளார் மீண்டும் திருவண்ணாமலை போந்து 19-5-1916 தொடங்கி மூன்று நாள் சத்தி விலாச சபையின் ஆண்டு விழாவிற்குத் தலைமை தாங்கி அருளுரை வழங்கினார். வழக்கம் போல் திரு.வி க. முதலிய மற்ற புலவர்களும் சொற்பெருக்காற்றுவதில் பங்கேற்றனர். அன்று அடிகளாரின் சொற்பொழிவைக் கேட்டுத் தம் உள்ளத்தைப் பறி கொடுத்த செந்தமிழ்க்கவி கே.வி. இராமச்சந்திர ஐயர் என்பார், அடிகளாரைப் புகழ்ந்து பின்வரும் பாடலை இயற்றி வெளியிட்டார்;

"முத்தி எங்கே ஞான முறைஎங்கே முன்னோர்பால்
பத்தி-எங்கே ஓதும் பனுவலெங்கே-இத்தரையில்
சான்றோர் பரவுகின்ற சண்முகமெய்ஞ் ஞானிநீ
தோன்றா திருப்பாயேல் சொல்"-

**ஞானியார் பாட சாலை:**

ஞானியார் தம் அருளகத்திற்கு எதிரே உள்ள சொந்தக் காலி மனையை ஒரு கல்விக் கூடத்திற்காக விட்டார், அதில் 2-2-1917 ஆம் நாள், பாடலேசுரர் தரும பாடசாலை என்னும் பெயரில் ஒரு கல்விக் கூடம் திறக்கப்பட்டது. அதன் தலைமை ஆசிரியராக, அடிகளாரின் தலை மாணாக்கருள் ஒருவராகிய உருத்திரசாமி ஐயர் என்பவர் அமர்த்தப் பெற்றார். பாடலேசுரர் தரும பாடசாலை என்பது வைக்கப் பெற்ற பெயராயினும் ஞானியார் பாடசாலை என்றே பெருவாரியாகப் பொது மக்களால் பெயர் வழங்கப் பெற்றது.

சித்தார்த்தி - வைகாசி - 11-அடிகளார் தென்னாட்டுப் பயணத்தில் தஞ்சாவூரைச் சார்ந்த கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் ஏழாவது எட்டாவது ஆண்டு விழாவிற்குத் தலைமை தாங்கிச் சிறப்புறச் செய்தார். சித்தார்த்தி - ஆனி - 21 ஆம்நாள், திருச்சி சைவ சிந்தாந்த சபையில் சொல்லாம் தேன் மாரி பொழிந்து அனைவரையும் மகிழ்ச்சியில் நனையச் செய்தார். ஆவணி 20 ஆம் நாள் பலவான்குடி 'மாணிக்க வாசகர் மன்றம்' ஆண்டு விழாவிற்குத் தலைமை தாங்கி நடத்தினார்.

**சமாசத்திற்குப் புத்துயிர்**

சைவ சித்தாந்த மகா சமாசம் இடையில் சரிவர நடைபெறாமல் சோர்வுற்றது. அடிகளார் அதற்குப் புத்துயிர் ஊட்ட விழைந்தார். பலருடைய பொருள் உதவியும் கிடைத்தது. 1924 - டிசம்பரில் திருப்பாதிரிப் புலியூரிலேயே தாம் தலைமை தாங்கி மூன்று நாட்கள் சிறப்பாக நடத்தினார்.

அடிகளார் முதல் முறையாக 1927 - சூன் திங்களில் சென்னை நகர்க்குச் சென்றார். பேலஸ் தியேட்டர்

(Palace Theatre) என்னும் திரையோவியக் கொட்டகையில் சைவ சித்தாந்த மகா சமாசத்தின் சிறப்புக் கூட்டத்திற்குத் தலைமை தாங்கி நடத்தினார். 'சித்தாந்தம்' என்னும் திங்கள் இதழ் நடத்தவேண்டும் என அடிகளார் அறிவித்து, முதல் இதழுக்கு வேண்டிய பொருள் உதவியைத் தாமே புரிந்தார். 1928-சனவரியில் முதல் இதழ் வெளிவந்து அடிகளாரை மகிழ்வித்தது.

1927-டிசம்பரில், புதுச்சேரியில், புதுச்சேரி கிரந்தே - சிவசங்கர செட்டியார், பூரணாங் குப்பம் முனிசாமிப் பிள்ளை ஆகியோரின் பொருள் உதவிகொண்டு, சைவ சித்தாந்த மகா சமாசத்தின் இருபத்திரண்டாவது மாநாடு அடிகளாரின் தலைமையில் சீரும் சிறப்புமாக நடைபெற்றது.

அஞ்ஞான்று, அடிகளார் புதுவை அம்பலத்தாடையர் மடாலயம் போந்து, ஆங்கிருந்த அடிகளாரோடு அளவளாவிச் சென்றார்.

**உயிர்ப் பலி நிறுத்தம்:**

அடிகளார் கொங்கு நாட்டுப் பயணத்தின் போது சேந்த் மங்கலம் (கொங்குநாடு) என்னும் ஊரை அடைந்தார். ஆங்கிருந்த அறிஞர் பெருமக்கள் அடிகளாரை அன்புடன் வரவேற்றனர். அவ்வூரில் 1925 - ஏப்ரலில் பார்க்கவ குலச் சங்கத்தின் பத்தாம் ஆண்டு விழா அடிகளாரின் தலைமையில் நடைபெற்றது. திரு,வி.க., ம.ரா. குமாரசாமிப் பிள்ளை முதலியோர் சொற் பொழிவாற்றினர். அங்குப் பேசிய இராம. சபசோப ஐயங்காருடன் இன்னொருவர் கருத்து மோதல் செய்தார். அடிகளார் தமது உரையில் இருவர் கருத்துகளையும் பற்றிக் குறிப்பிட்டு அமைதி நிலவச் செய்தார்.

ம.ரா. குமாரசாமிப் பிள்ளை, திருக்கோயில்களில் உயிர்ப்பலி செய்தல் கூடாது என்னும் தீர்மானம் ஒன்றைக் கொண்டு வந்தார். தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. வாயால் பேசுவது போதாது - செயலில் செய்து காட்ட வேண்டும் என அடிகளார் அறிவித்தார் - சேந்த மங்கலத்தில் உள்ள செல்லாண்டியம்மன் என்னும் பிடாரி கோயிலில் உயிர்ப்பலி கொடுப்பது வழக்கம். எஸ். ஆர். ஐராவத உடையாரின் முயற்சியால் ஆயிரக் கணக்கான ஆடு மாடுகளைப் பலியிடுவது நிறுத்தப்பட்டது. அடிகளார் அகம் மகிழ்ந்தார்.

ஆண்டு விழாவிற்குச் செல்வங் கொழிக்கும் நிலக்கிழார் பலர் வந்திருந்தனர். அடிகளாரின் பொழிவுத் தேனில் விழுந்து மயங்கிய வண்டுகளாகிய அவர்கள், முழுதும் பொன் உறை (பொற் கவசம்) போட்ட உருத்திராட்ச மாலை ஒன்றை அடிகளார்க்கு அணிவித்துப் பெருமை பெற்றனர்.

### பேரூர்

அடுத்து, கோவை சார்ந்த பேரூர் என்னும் ஊரில் உள்ள சாந்தலிங்க சுவாமிகள் சன்மார்க்க சபையின் ஆண்டு விழாவிற்குத் தலைமை தாங்கிச் சிறப்புற நடத்திக் கொடுத்தார் அவ்விழாவிற்குக் கோவை இரத்தின சபாபதி முதலியார், அப்போது அமைச்சராயிருந்த டாக்டர் சுப்புராயன் முதலியோர் வந்திருந்து அடிகளாரின் சொல்லருவியில் திளைத்து உளங்குளிர்ந்து பாராட்டினர்.

### ஆம்பூரில் 22 நாட்கள்

பின்னர் அடிகளார் ஆரணி சென்றிருந்தார். ஆம்பூர்ப் பெரியவர்கள் சிலர் அடிகளாரை ஆம்பூருக்கு அழைத்துச் சென்று சிறப்பித்தனர். ஆங்குள்ள நாக நாத சுவாமி

திருக்கோயிலில் தொடர்ந்து. இருபத்திரண்டு நாட்கள் அடிகளார் சொல் வெள்ளம் பெருக் கெடுக்கச் செய்தார்,

**சைவப் பெரியார் மாநாடு:**

1929-மே - திங்களில் தம் புலிசை அருளகத்தில் அடிகளார் சைவப் பெரியார் மாநாடு கூட்டி நடத்தினார். மாநாட்டிற்கு மறைமலை அடிகளார் தலைமை தாங்கினார். பல்வேறிடங்களிலிருந்தும் சைவப் பெரியார்கள் வந்து குழுமியிருந்தனர். அம்மாநாடு ஐந்து நாட்கள் காலை மாலை இரு வேளையும் நடைபெற்றது. அம் மாநாட்டின் விளைவாக, சைவ சித்தாந்த மகா சமாசம் பன்னிரண்டு திருமுறைகளையும் பதினான்கு சித்தாந்த சாத்திரங்களையும் மேலும் பல நூல்களையும் தூய்மையாக வெளியிட்டது. 'சைவப் பஞ்சாங்கம்' என ஒரு பஞ்சாங்கம் வெளியிடும் டாக்டர் இ.மு. சுப்பிரமணிய பிள்ளைக்கு, மேலும் ஊக்குவிக்க நூறு வெண்பொற் காசு பரிசாக அளிக்கப்பெற்றது.

**திருவெண்ணெய் நல்லூர்:**

1929-டிசம்பரில் சைவ சித்தாந்த மகா சமாசத்தின் இருபத்து நான்காம் மாநாடு, திருவெண்ணெய் நல்லூரில் உள்ள 'திருவருள் துறை' என்னும் சிவன் கோயிலில் அடிகளார் தலைமையில் மூன்று நாட்கள் வெற்றியுடன் நடைபெற்றது. இது அப்பகுதியைச் சேர்ந்த சின்னசாமி ரெட்டியாரின் பெரு முயற்சியால் நடைபெற்றது. இம்மாநாட்டிற்குத் திருவாவடுதுறை ஆதீனத்து அடிகளார் தம் பேராளரை அனுப்பியதோடு சில சிறப்புகளும் (மரியாதைகளும்) செய்ய வைத்தது மிகவும் குறிப்பிடத்தக்கது.

**தியாகர் வில்லா:**

சென்னை த.ப. இராமசாமிப் பிள்ளை அடிகளாரைச்

சென்னைக்கு அழைத்தார். 1934-ஆகஸ்டில் அடிகளார் சென்னை போந்து, சூளையில் உள்ள பிள்ளையின் 'தியாகர் வில்லா' என்னும் மாளிகையில் தங்கிப் பல சொற்பொழிவு கள் அருளினார். மற்றும், மயிலாப்பூரில் நடைபெற்ற சைவ சித்தாந்த மகா சமாசத்தின் சிறப்பு மாநாட்டிற்குத் தலைமை தாங்கிப் பெருமை செய்தார்கள்.

1934-டிசம்பரில் திரு.வி. கலியாண சுந்தரனாரின் தலை மையில் திருவதிகையில்நடை பெற்ற சைவ சிந்தாந்த மகா சமாச மாநாட்டில் அடிகளார் தொடக்க உரையும் முடிவில் வாழ்த்துரையும் அருளி அனைவரையும் உவகைக் கடலில் ஆழ்த்தினார்.

**மீண்டும் சென்னை செலவு**

சை.சி.ம. சமாசத்தின் செயலாளராகிய ம. பால சுப்பிரமணியமுதலியார் (M.A.,B,L.)சென்னைக்கு அருகில் உள்ள கோவூருக்கு வருகைதர வேண்டினார். 1935-மே திங்களில் அடிகளார் கோவூர் போந்தார். ஆங்குள்ள 'திருமேனீச்சுரம்' என்னும் சிவன்கோயிலின் வைகாசிப் பெருவிழாவின் போது பல சொல்மாரிகள் பெய்தார். அடுத்து, நீதிபதியாயிருந்த வெ. ஆதிசேஷ முதலியாரின் வேண்டுகோளை மதித்துச் சென்னையில் உள்ள அவரது 'நால்வர் அருள்' என்னும் மாளிகையில் மூன்று திங்கள் காலம் தங்கிப் பல சொற்பொழிவுகள் ஆற்றியும் பலர்க்குப் பாடம் நடத்தியும் தமிழ்ப் பயிரும் சைவப் பயிரும் தழைத்துச் செழிக்கச் செய்தார்.

மற்றும், சென்னையில், பர்மா எண்ணெய் வணிக நிலையப் பேராளராயிருந்த கோவிந்தராசன் என்பவரின் இல்லத்திலும், நெல்சன்டைப் பவுண்டரி உரிமையாளராம் மாணிக்கம் என்பவரின் 'கணேசர் கலியாண மண்டபம்' என்னும் மாளிகையிலும் பன்னாள் எழுந்தருளியிருந்து

பாடங்களும் சொற்பொழிவுகளும் அருளினார்கள். சென்னைப் பெருமக்கள் அடிகளார் பொழிந்த தமிழ் மழையில் நனைந்து குளிர்ந்து அகமகிழ்வு எய்தினர்.

அடிகளார் 1937-ஏப்ரலில் மீண்டும் சென்னை சென்று, தம்மை அழைத்த க. அரங்கநாத முதலியாரின் தியாகராய நகர் இல்லத்திலும், சமரசச் செயலாளர் ம. பாலசுப்பிர மணிய முதலியாரின் மயிலாப்பூர் இல்லத்திலும் பன்னாள் தங்கினர். முன்னர் அழைத்த அன்பர்களின் இல்லங்கட்கும் மீண்டும் அழைக்கப் பெற்றனர். ஆங்கெல்லாம் அடிகளா ரின் அமிழ்தத் தமிழ்க் குரல் ஒலித்துக் கொண்டேயிருந்தது.

1937-டிசம்பரில் வேலூரில் நடைபெற்ற சைவ சித் தாந்தமகா சமாசத்தின் மாநாட்டுக்கு அடிகளார் தலைமை தாங்கி நடாத்தினார். அங்கே அடிகளார்க்குக் காய்ச்சல் நோய் கண்டு பலரது கவலைக்கு இடம் தந்தது பின்னர் உடல் நலம் உண்டாயிற்று, அடிகளார் 'சைவ ஒழுக்கம்' என்னும் ஒரு நூல் தொகுத்து அனைவர்க்கும் வழங்கி யருளினார்.

**கரந்தை வெள்ளி விழா:**

தஞ்சையைச் சார்ந்துள்ள கருந்தட்டாங்குடி என்னும் ஊரில் கரந்தைத் தமிழ்ச் சங்கம் என்னும் சங்கம் 1911-ஆம் ஆண்டு தொடங்கப் பெற்றது என்பதும், அதன் ஏழு- எட்டாம் ஆண்டு விழாக்கள் அடிகளாரின் தலைமையில் நடைபெற்றன என்பதும் முன்னரே அறிவிக்கப்பட்டுள்ளன.

இந்தச் சங்கம் தமிழகத்தில் உள்ள மாபெருஞ் சங்கங் களில் ஒன்றாகும். திருவையாற்றில் தமிழ்க் கல்லூரி தோன்றச் செய்தவரும் வழக்கறிஞரும் தமிழுக்கும் சைவத் திற்கும் தம் வாழ்நாளைச் செலவிட்டவரும் ஆகிய த.வே.

உமாமகேசுவரம் பிள்ளையின் தலைமையில் இச்சங்கம் இயங்கி வந்தது.

இச்சங்கத்தின் வெள்ளி விழா 1938–ஏப்ரலில் ஞானியார் அடிகளாரின் தலைமையில் நடைபெற்றது. இந்த வெள்ளி விழா, மற்ற சங்கங்கள் வெள்ளிவிழா நடத்துவதற்கு ஒரு 'மாதிரி' விழாவாய் அமைந்தது.

விழாவின் சார்பாகப் 'புலவர் கல்லூரி' என்னும் கல்லூரி ஒன்று அடிகளாரின் திருக்கையால் வித்தூன்றித் தொடங்கிவைக்கப் பெற்றது. இப்போது இது பெரிய ஆல மரமாய்ப் பரந்து விரிந்து பயனளித்துக் கொண்டுள்ளது. அடுத்து, உமாமகேசுவரனார்க்குத் 'தமிழவேள்' என்னும் தங்கமான பட்டத்தையும், பேராசிரியர் ஆர்.வேங்கடாசலம் பிள்ளைக்குக் 'கவியரசு' என்னும் பட்டத்தையும் அடிகளார் விழாவில் வழங்கினார்கள். மற்றும், மாபெரும் புலவராகிய தாரமங்கலம் அ. வரத நஞ்சையப் பிள்ளை இயற்றிய 'தமிழரசிக் குறவஞ்சி, என்னும் நூல் அரங்கேற்றப் பெற்றது. மேலும், பேரறிஞர்கள் பலர் வழங்கிய அரிய பெரிய கட்டுரைகள் அடங்கிய 'கரந்தைத் தமிழ்ச் சங்க வெள்ளி விழாமலர்' என்னும் மிகப் பெரிய மலர் ஒன்றும் அடிகளார் திருக்கையால் வெளியிடப் பெற்றது.

அவ்விழாவில், சங்கத்தினர், அடிகளார் இவர்ந்து செல்லச் சிவிகை (பல்லக்கு) ஒன்று செய்து அளித்தனர். பிற்காலத்தில் பெரும்பாலும் பயன்படுத்தப்பட்டது இந்தச் சிவிகையே யாகும். இவ்வாறு பல வகையிலும் கரந்தைத் தமிழ்ச் சங்க வெள்ளி விழா பெருஞ் சிறப்புப் பெற்றது. தமிழ் அன்னையின் திருக்கோயில்களுள் இந்தச் சங்கமும் ஒன்றாகும்,

இந்த வெள்ளிவிழா ஒரு 'மாதிரி' வெள்ளி விழா என்று முன்பு குறிப்பிட்டுள்ளேன் அல்லவா? இது தொடர் பாக, 'ஒன்றினம் முடித்தல் - தன்னினம் முடித்தல்' என்னும் இலக்கணக் கொள்கைப்படி ஒரு செய்தி கூற விழை கிறேன். புதுச் சேரியில் 'கல்விக்கழகம்' என்னும் சிறந்த கழகம் ஒன்று உள்ளது. இதனை தேசிகப் பிள்ளை என் பாரும் திருநாவுக்கரசு என்பாரும் மிகவும் சிறப்பாக இயக்கி வந்தனர். இவர்கள் இருவரும் கரந்தைச் தமிழ்ச் சங்க வெள்ளிவிழாவிற்குச் சென்று நேரில் கண்டறிந்து வந்தனர்.

அங்கு நடந்தது போலவே, புதுவைக் கல்விக் கழகத் தின் வெள்ளி விழாவை 1951 - ஆம் ஆண்டு நடத்தினர். விழா ஒரு வாரம் நடைபெற்றது. பேரறிஞர்கள் பலர் தலைமை தாங்கியும் சொற்பொழி வாற்றியும் புதுவை மக்களைப் புளகாங்கிதம் எய்தச் செய்தனர். கரந்தையில் நூல் அரங்கேற்றம் நடந்தது போலவே, அந்தக் கழகப் புலவராகிய யான் இயற்றிய 'செந்தமிழ் ஆற்றுப்படை' என்னும் நூல் அரங்கேற்றப் பெற்றது. கரந்தையில் பட்டம் கொடுத்தது போலவே, க. சோமசுந்தர பாரதியாரால் பரிந்துரைக்கப்பெற்ற 'இயற்கவி' என்னும் பட்டமும் கேடயமும் பாராட்டிதழும் எனக்கு அளிக்கப் பெற்றன. பேரறிஞர்களின் கட்டுரைகள் நிறைந்ததும் என்னால் ஆய்ந்து பதிப்பிக்கப்பட்டதும் ஆகிய 'புதுவைக் கல்விக் கழக வெள்ளி விழா மலர், என்னும் பெரிய மலர், வெளி யிடப் பெற்றது. இஃதும் புதுவையில் ஒரு மாதிரி வெள்ளி விழாவாகும்.

**மறுபடியும் சென்னை:**

ஞானியர் மறுபடியும் 1939-ஆம் ஆண்டு, சென்னையை அடுத்த கோவூர் திருக்கோயிலிலும், சென்னை சிம்புமல்

சௌக்கார் என்பவரின் இல்லத்திலும், கீ. தெய்வசிகாமணி முதலியார் முதலியோரின் இல்லங்களிலும், ம. பாலசுப்பிர மணியனாரின் மயிலாப்பூர் இல்லத்திலும், அவரவரின் வேண்டுகோளுக்கு இணங்கிச் சென்று தங்கிச் சொல் லமிழ்தத் தமிழ்மாரி பொழிந்தார்.

அடிகளார்க்கு முன்பு ஒரு முறை முதுகில் கட்டி வந்து குணப்படுத்தப்பட்டது. இப்போது துடையில் கட்டி வந்து துன்புறுத்தியது. அன்பர்கள் உடன் இருந்து வேண்டிய மருத்துவ உதவி புரிந்து உடல் நலம் பெறச் செய்தனர்.

**கோவலும் கண்டாச்சிபுரமும்**

திருக்கோவலூரில் உள்ள கோவல் தமிழ்ச் சங்கத்தின் முதல் ஆண்டு விழா திரு.வி. கலியாண சுந்தரனார் தலை மையிலும் இரண்டாம் ஆண்டு விழா ச. சோமசுந்தர பாரதியார் தலைமையிலும் நடைபெற்றன. அடுத்தடுத்து வந்த மற்ற ஆண்டு விழாக்கள் பெரும்பாலும் ஞானியாரின் தலைமையிலேயே நடைபெற்று வந்தன. அவற்றுள், 1940 -ஆம் ஆண்டு நடைபெற்ற ஆறாம் ஆண்டு விழா மிகவும் குறிப்பிடத் தக்க முறையில் பெருஞ் சிறப்புடன் நடந்தேறி யது.

கோவலூருக்கு அண்மையில் கண்டாச்சி புரம் (கண்ட ராதித்தபுரம்) என்னும் ஊர் உள்ளது. அவ்வூரில் தொடங்கிய செந்தமிழ்க் கழகத்தின் முதல் ஆண்டு விழாவை அடிகளார் தலைமை ஏற்று நடத்தித் தரும்படி வேண்டினர். அவ்வாறே அடிகளார் அவ்வூருக்கு எழுந் தருளினார். ஊர் மக்கள் மேள தாளத்துடன் அடிகளாரை வரவேற்று ஊர்வலமாக அழைத்துச் சென்றனர். ஒவ் வொரு வீட்டு வாயிலிலும் சிவிகையை நிறுத்தி வழிபட்டுச் சிறப்பு செய்து அனுப்பினராம். விழா மிகவும் சிறப்பாக

நடைபெற்றது. அந்தக் கழகம் தொடர்ந்து நடைபெற்றது. 1942-ஆம் ஆண்டு - அச்சங்க ஆண்டு விழாவில் - திரு.வி.க தலைமையில் யான் 'தமிழ் நாட்டுத் தெய்வம்' என்னும் பொருள் பற்றிச் சொற்பொழிவாற்றியுள்ளேன்.

**செஞ்சி மாநாடு:**

அடிகளார் சிவபுரி முதலாய பதிகட்குச் சென்று சொற்பொழிவாற்றி வந்தபின், செஞ்சி தாசில்தாராயிருந்த எம். கிருஷ்ண முதலியார் என்பவர் செஞ்சியில் ஒரு மாநாட்டிற்கு ஏற்பாடு செய்தார். அடிகளாரைத்தலைமை தாங்கி நடத்தித்தர வேண்டினார். 1940-மே 3-ஆம் நாள் முதல் மூன்று நாட்கள் அடிகளாரின் அமிழ்த உரையால் மாநாடு பெருமை பெற்றது. வரவேற்பு மிகுதி.

**கோவலூரில் வீற்றிருப்பு**

சிறிது காலம் அடிகளார் கோவலூரில் நிலையாகத் தங்கி யிருந்தார். திருப்பாதிரிப் புலியூர் திருக்கோவலூர் ஆதீனத்தைச் சேர்ந்ததன்றோ? முதல் பட்டத்து அடிக ளார் அமைத்த அருளகமும் திருக்கோயிலும் அவரது அடக்கமும் கோவலூரிலே உள்ளன. தமக்கு உரிய அந்த அருளகத்திலேயே அடிகளார் வீற்றிருந்தார்.

அங்கே அடிகளார் கோவல் தமிழ்ச் சங்கத்தின் சார் பாக வாரக் கூட்டச் சொற்பொழிவுகள் செய்துவந்தார். அச்சங்கத்தின் சிறப்புக் கூட்டம் ஒன்று 25-12-1940 - இல் நடைபெற்றது. கூட்டத்திற்கு அடிகளாரின் முன் னிலையில் உமாமகேசுவரனார் தலைமை தாங்கினார். அஞ்ஞான்று, விழுப்புரம் நகராட்சி ஆணையாளராயிருந்த 'ஆட்சி மொழிக் காவலர்' கீ. இராமலிங்கனார் 'திரு வாசகம்' என்னும் தலைப்பிலும், யாழ்ப்பாணம் பேரா சிரியர் க. மதியாபரணர் 'இயேசுவும் வள்ளுவரும்'

என்னும் தலைப்பிலும், பேராசிரியர் க. வெள்ளைவாரண னார் 'தமிழ் இசைத்திறன்' என்னும் தலைப்பிலும், அண்ணாமலைப் பல்கலைக்கழக வரலாற்றுப் பேராசிரியரா யிருந்த ச. க. கோவிந்தசாமிபிள்ளை 'சோழர் காலத்திய கோயில்களும் மடங்களும்' என்னும் தலைப்பிலும் அரிய பெரிய கருத்துக்களை முன்வைத்துச் சொற்பெருக்காற்றி னர். அடிகளாரின் தொடக்க உரையும் முடிவு வாழ்த்து ரையும் நிகழ்ச்சிக்கு நயம் தந்து மெருகு ஊட்டின. இச் சொற்பொழிவாளர்கள் மயிலத்தில் நடைபெற்ற சமாச மாநாட்டில் கலந்துகொண்ட பின்னர் அங்கிருந்து அடிக ளாரைக் காண்பதற்கென்றே கோவலூர் வந்தவர்கள்.

**திருவதிகைக் குட முழுக்கு**

விக்கிரம-ஆவணி-10 (23 6-1940) ஞாயிறு அன்று, திருவதிகைச் சிவன் கோயில் குடமுழுக்கு (கும்பாபிஷேகம்) நடைபெற்றது. இது நடைபெற அடிகளார் எடுத்துக் கொண்ட முயற்சி மிகுதி. இவ்விழாவின் கூறாக, அடிகளார் தலைமையில் மூன்றுநாள் மாநாடு நடைபெற்றது. அறிஞர் பலரின் சொற்பொழிவுகளை, அடிகளாரின் தலைமை உரை அணி செய்தது. அடிகளார் இயற்றிய 'திலகவதி அம்மை யார்துதி' என்னும் சிறு செய்யுள் நூல் அங்கு வெளியிட்டு வழங்கப்பட்டது. பாடல்களைப் பலரும் படித்துச் சுவைத்து மகிழ்ந்தனர்.

**திருமுதுகுன்றம்**

1941 - மார்ச்சு - விக்கிரம - மாசித்திங்களில்திருமுது குன்றம் (விருத்தாசலம்) பெருவிழா (பிரம்மோற்சவம்) நடைபெற்றது. அங்கே அடிகளாரின் ஆதீன அருளகம் ஒன்றும் உள்ளது. அன்பர்களின் வேண்டுகோளை ஏற்று ஆங்குப் போந்து தலைமை தாங்கி, விழாச் சொற்பொழிவு நிகழ்ச்சிக்குப் பொலிவூட்டினார் அடிகளார்.

**கண்டாச்சி புரம்**

முன்னர் ஒரு முறை ஆரவாரமாக அடிகளாரை வரவேற்ற கண்டாச்சி புரத்தினர், 1941- மார்ச்சில் அவ்வூர்ச் செந்தமிழ்க் கழகத்தின் இரண்டாம் ஆண்டு விழாவிற்குத் தலைமை ஏற்க அன்புடன் அழைத்தனர். அடிகளார் இணங்கித் தலைமை ஏற்று அருளுரை வழங்கினார்.

**வடலூர்**

வடலூர் இராமலிங்க வள்ளலாரிடமும் அடிகளாருக்கு ஈடுபாடு உண்டு. வள்ளலாரைப் பற்றித் திரு.வி.க. முதலானோருடன் அடிக்கடி கருத்து கூறுவார். வடலூரில் 'சன்மார்க்கம்' என்னும் தலைப்பில் அடிகளார் சிறந்த சொற்பெருக்கு ஆற்றி வள்ளலார்க்கு மேலும் பெருமை சேர்த்தார்.

# 5. பாடமும் பொழிவும்

அடிகளாரின் பாடம் கற்பிக்கும் முறையும் சொற்பொழிவாற்றும் திறனும் தனிப் பெருமை வாய்ந்தன.

**கற்பிக்கும் முறை**

பாடம் கற்பிக்கும் ஆசிரியருக்கு இருக்கவேண்டிய இலக்கணம் - இயல்பு பற்றி நன்னூலில் சொல்லியிருப்பதற்கு இலக்கியமாய் அடிகளார் அமைந்திருந்ததோடு மட்டுமன்றி, புதிய கற்பிக்கும் முறைக்குப் பொருத்தமானவராயும் அமைந்திருந்தார்.

சிலர், அன்றும் சரி - இன்றும் சரி - ஒரு பாட்டைக் கற்பிக்க வேண்டு மெனில், பாட்டை முதலில் சொல்

சொல்லாகப் பிரித்துக் காட்டி, பிறகு பதவுரை கூறிப் பின்பு கருத்துரை வழங்குவர். இஃது உளவியல் முறைக்கு (Psychological Method) ஏற்றதன்று.

மக்கள் தனித் தனிச் சொல்லாகப் பேசுவதில்லை. சொற்றொடராகவே - வாக்கிய மாகவே பேசுகின்றனர். இதற்கேற்ப, முதலில் பாட்டை இசையுடன் படித்துக் காட்டி அதன் கருத்தை வாக்கியமாகச் சொல்ல வேண்டும். பிறகு விரிவான பொழிப்புரையாகக் கருத்து விளக்கம் செய்ய வேண்டும். இவ்வாறு செய்துவிட்ட பின்பு பாட்டைப் படித்தாலேயே தானே ஓரளவு பொருள் விளங்கும். அதன்பின்னர், பாடலை வாக்கியம்-வாக்கிய மாகப் படித்துக் காட்டிப் பொருள் விளக்கம் செய்ய வேண்டும். பொருள் புரிந்து கொள்ள முடியாத அருஞ் சொற்கள் இருப்பின் அவற்றிற்கு மட்டும் பொருள் கூறிப் பின்னர் ஒரு முறை பாடலைப் படித்துக் காட்டினாலேயே முழுப் பாடலின் பொருளும் விளங்கிவிடும். இதுதான் இன்றைய உளவியல் முறை.

இவ்வாறு கற்பிக்கும் முறை அடிகளாரிடம் இயற்கை யாக அமைந்திருந்தது. முதலில் பாடலின் கருத்தைச் சொல்வார் - பின்னரே பொழிப்புரை - பின்பே பத விளக்கம். யானும் இம் முறையைப் பிற்காலத்தில் பின் பற்றினேன்' என் மாணாக்கர் சிலரும் இம்முறையைப் பின் பற்றுகின்றனர்,

இலக்கிய மேற்கோள்கள் - சொல் நயம் - இலக்கணச் சிறப்பு ஆகியவற்றுடன் அடிகள் பாடம் கற்பித்ததால் மாணாக்கர் பலர் வந்து கற்றுப் பயன் பெறலாயினர். பாடம் நடந்துகொண்டிருக்கும்போதே புதியவர் எவரே னும் வந்து அமரின், அவரும் பாடத்தைத் தொடர்வதற்கு வசதியாக முன் நடந்த பாடத்தின் சுருக்கம் சொல்லித்

தொடர்புறுத்துவார். பாடல்களைக் கற்பிப்பதில் அடிகளார் பின்பற்றிய மற்றொரு முறையும் குறிப்பிடத்தக்கது. அஃதாவது:-

எடுத்துக் காட்டிற்காகச் சேக்கிழார் இயற்றிய 'பெரிய புராணம்' என்னும் நூலின் முதல் பாடலை நடத்தக்கூடிய முறையைக் காணலாம்:

"உலகெலாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்"-

என்பது பாடல். முறையாவது:- வணங்குவாம் - வணங்குவோம்-எப்படி வணங்குவது? வாயால் வாழ்த்திக் கொண்டே கைகளால் வணங்குவாம் - வாழ்த்தி வணங்குவாம். எதை வணங்குவாம்? அடியை வணங்குவாம். அடி எப்படிப்பட்டது? மலர்ந்த அடி - சிலம்பு அணிந்த அடி - மலர் சிலம்பு அடி வாழ்த்தி வணங்குவாம்.

யாருடைய அடி? சிவனுடைய திருவடி. சிவன் எத்தகையவன்? அம்பலத்திலே ஆடக் கூடியவன்-அம்பலத்து ஆடுவான். இன்னும் எத்தகையவன்? அளவற்ற சோதி மயமானவன்-ஒளி வடிவானவன் - அலகுஇல் சோதியான். இன்னும் எவ்வியல்பினன்? - கங்கை நீர் நிறைந்துள்ள வேணியை - முடியை உடையவன் - நீர்மலி வேணியன். அந்த வேணியில் இன்னும் என்ன இருக்கிறது? பிறைநிலவு உலவுகிறது - தங்கியுள்ளது - நிலவு உலாவிய நீர்மலி வேணியன். மேலும் சிவன் எவ்வியல்பினன்? அவனது பெருமையை உலகம் எல்லாம் - உலகத்து உயிர்கள் எல்லாம் முற்றும் உணர்ந்து முழுவதும் எடுத்து ஓதுதற்கு - சொல்வதற்கு அரியவனாய் இருப்பவன் - அதாவது சொல்ல முடியாத அளவுக்கு மிகுந்த பெருமை உடையவன்

– உலகு எலாம் உணர்ந்து ஓதுதற்கு அரியவன் – இனி ஒரு முறை பாடல் முழுமையும் பார்க்கலாம்-

"உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்
நிலவு உலாவிய நீர்மலி வேணியன்
அலகு இல் சோதியன் அம்பலத்து ஆடுவான்
மலர் சிலம்பு அடி வாழ்த்தி வணங்குவாம்"—

இந்த முறையில் ஞானியார் அடிகளார் சில நேரத்தில் பாடல்களைக் கற்பிப்பதும் உண்டு. கற்பிக்கும் முறைகளுள் வினவிக் கொண்டே – வினா எழுப்பிக் கொண்டே பாடம் கற்பிப்பது, கற்பிக்கும் முறைகளுள் மிகச் சிறந்த ஒன்றாகும் என்பது, கல்வி உளவியலாரின் (Educational Psychologists) கருத்தாகும். இந்த முறைகளையெல்லாம் அடிகளார் கையாண்டு கற்பிப்பதால், மாணாக்கர்கள் மகிழ்ந்து பாடம் கேட்டு வந்தனர். அடிகளாருடன் அனைவரும் பாடத் தொடக்கத்திலும் முடிவிலும் கடவுள் வணக்கப் பாடல் பாடுவர்.

யாரும் எப்பொழுதும் வந்து பாடம் கேட்கலாம். மாணவர்க்கு வசதியான நேரத்திலும் கற்பிக்க ஒத்துக் கொண்டு பாடம் கற்பிப்பார். அடிகளார்க்கு இரண்டு முறை கட்டி வந்து அறுவை மருத்துவம் செய்யப்பட்டது. ஒரு முறை கால் ஒடிந்து போக அதற்கு உரிய மருத்துவம் செய்யப்பட்டது. நோய் தெளிந்தும் தெளியாததுமாய் இருக்கும்போதே அடிகளார் சாய்வு நாற்காலியில் சாய்ந்த படி பாடம் நடத்துவார். பாடம் கற்பிக்கும் இன்பத்தில் நோய்த்துன்பம் மறைந்துவிடும்.

பாடம் நடத்துங்கால், வாய்ப்பு நேரும் போது, சீர் திருத்தக் கருத்துகளை வலியுறுத்தவும் அடிகளார் தவறுவதில்லை. ஒருமுறை புறநானூறு பாடம் நடத்திக்கொண்டி

டிருந்த பொழுது, பெண் புலவர்கள் இயற்றிய பாடல் களும் வந்தன. அப்போது அடிகளார், பெண் மக்கள் கல்வி யறிவில் சிறந்து பாடல்கள் இயற்றும் அளவுக்குப் பெருமை பெற்றிருந்தனர் எனக் கூறிப் பெண்மையின் சிறப்பைப் பாராட்டினார். பாடம் கேட்டவர்களுள் சிலர், இந்தக் காலத்தில் அத்தகைய பெண்களைக் காண முடிய வில்லையே என்றனர். உடனே அடிகளார், 'அடுப்பு ஊதும் பெண்களுக்குப் படிப்பு எதற்கு? பெண்கட்குக் கல்வியளிப் பது தவறு' என்னும் குறுகிய நோக்கம் உடையவர்கள் பலர் இன்று இருப்பதால்தான் பெண் கல்வி ஓங்க வில்லை என்று கூறி வருத்தம் தெரிவித்தார். குறுகிய நோக்கினர் பலர் இருந்தும், அடிகளாரிடம் பெண்கள் சிலரும் வந்து பாடம் கேட்டனர். பண்டிகை அசலாம்பிகை அம்மை யாரின் கல்விச் சிறப்பை அடிகளார் பாராட்டியது உண்டு.

**முசுலீம் இளைஞன்:**

இங்கே சுவையான நிகழ்ச்சி ஒன்றைச் சொல்ல வேண்டும். கூடலூரில் இருந்த முசுலீம் இளைஞன் ஒருவன் உயர்நிலைப்பள்ளி இறுதித் (S.S.L.C) தேர்வில் தமிழ் தவிர்த்த மற்ற பாடங்களில் நிரம்ப மதிப்பெண் பெற்றும் தமிழ்ப் பாடத்தில் 16 மதிப்பெண்ணை பெற்றதால் தோல்வியடைந்து விட்டான். அவன் தமக்குத் தெரிந்த, திருஞான சம்பந்தம் பிள்ளை என்பவரிடம் போய், தனக் குத் தமிழ் – தனிப்பாடம் (Private – Tuition) கற்பிக்க ஏற்பாடு செய்ய வேண்டினான். அவர் ஞானியார் அடிக் ளாரின் கல்விச் சிறப்பை விளக்கி அவரிடம் சென்றால் உனக்குத் தமிழ் கற்பிப்பார் என்று கூறி அவனை அடிக ளாரிடம் அனுப்பி வைத்தார்.

அவன் ஒரு நாள் மாலை புலிசை அடிகளாரின் அருளகத்திற்குச் சென்றான். அங்கே முன் கட்டில் ஒரு

சாமியார் எளிய உடையுடன் எளிமையாய்க் காணப் பட்டார், இளைஞன் அவரை அணுகி, நான் ஞானியார் அடிகளாரைப் பார்க்க வேண்டும் என்றான். எதற்கு என்று அந்தச் சாமியார் கேட்டார். அவன் வந்த காரணத்தைத் தெரிவித்தான். உடனே சாமியார் நான் சொல்லித் தருகி றேன் என்று கூறி, அவனது பாட நூலிலுள்ள சில பாடல் களை விளக்கிக் கற்பித்து, நாளைக்கு இதே நேரத்தில் வா என்று சொல்லி அனுப்பி விட்டார்.

இளைஞனுக்கு மனநிறைவு ஏற்பட வில்லை. ஞானி யார் சுவாமிகளிடம் பாடம் கேட்க வந்தோமே - இவர் யாரோ ஒரு சாதாரண சாமியார் நம்மை மடக்கி அனுப்பி விட்டாரே என்ற ஏமாற்றத்துடன் சென்று, திருஞான சம்பந்தம் பிள்ளையிடம் நடந்ததைத் தெரிவித்தான். அவர், சாமியாரின் உருவத் தோற்றத்தைப் பற்றி அவனி டம் விசாரித்துத் தெரிந்துகொண்டு, அவர்தான் ஞானியார் சுவாமிகள் – நீ நாளைக்கும் செல்வாயாக என்று கூறி அனுப்பினார்.

இளைஞன் மறுநாள் குறித்த நேரத்தில் ஞானியார் அருளகத்தை அடைந்தான். அடிகளாரைக் கண்டதும், உங்களை இன்னார் என்று யான் நேற்று அறியவில்லை; மடாதிபதிகள் ஆடம்பரத் தோற்றத்துடன் இருப்பார்கள்– அவர்களை எளிதில் பார்க்க முடியாது என்றெல்லாம் கேள்விப்பட்டிருக்கிறேன் - ஆனால் உங்கள் எளிமை என்னைக் கவர்ந்துவிட்டது என்று சொல்லித் தேம்பித் தேம்பி அழுதான். பின்னர் அடிகளார் அவனுக்கு ஆறுதல் கூறிப் பாடம் கற்பித்தார். 'திருஞான சம்பந்தர்க்கு உமா தேவியார் ஞானப்பால் ஊட்டியது போல, திருஞான சம்பந்தர் அனுப்பிய முகுலீம் இளைஞனுக்கு அடிகளார் தமிழ்ப் பால் ஊட்டினார், ஞானப்பால் உண்டதும் ஞான

சம்பந்தர் 'தோடுடைய செவியன்' எனப் பாடல் பாடியது போல, அடிகளாரின்தமிழ்ப் பால் அருந்தியதால் இளைஞன் அடுத்த தேர்வில் வெற்றி பெற்றான். இந்த நிகழ்ச்சி மிகவும் சுவையாக உள்ளதல்லவா?

**சிங்கப்பூர்த் துறவி**

சிங்கப்பூரிலிருந்து துறவி யொருவர் புலிசைக்கு வந்து தங்கி மற்ற மாணாக்கர்களுடன் பாடம் கேட்டு வந்தார். பாடம் காலை 7 மணி முதல் 9 மணி வரை நடைபெறும். அடிகளார் நீராடிச் சிவ பூசனை முடித்தே கற்பிக்க வருவார். சிங்கப்பூர்த் துறவியும் நீராடிச் சிவபூசனை முடித்து வருவார். ஒருநாள் சிங்கப்பூர்த் துறவி நீராடிச் சிவபூசனை முடிக்காமல் வந்து விட்டார். பாடத் தொடக்கத்தில் அடிகளார் அனைவருக்கும் திருநீறு அளிப்பார். என்று சிங்கப்பூர்த் துறவிக்குத் திருநீறு அளிக்கக்கையை நீட்டிய போது, துறவி குளிக்காமல் - பூசனை முடிக்காமல் வந்ததால் திருநீறு பெறத் தயங்கினார். அதனைத் தம் அக உணர்வால் உணர்ந்த அடிகளார், 'உடல் நலம் இல்லை போலும் - இருக்கட்டும் - திருநீறே நம்மைத் தூய்மைப் படுத்திவிடும் - இது போதும்' என்று கூறி, சிங்கப்பூர்த் துறவியின் நெற்றியில் தாமே தம் கையாலேயே திருநீற்றைப் பூசினார்.

மற்றும் சென்ற ஊர்களில் எல்லாம் - இடங்களில் எல்லாம், பொருள் பெறாமல், இலவசமாக, வருவோர் யாவர்க்கும் அன்புடன் பாடம் கற்பித்தவர் ஒருவர் இருந்தார் என்றால்.அவர் ஞானியார் அடிகளாரே யாவார்.

**சொற் பொழிவு**

இந்நூல் முழுதும் அடிகளாரின் சொற்பொழிவுத்திறன் பேசப்பட்டுள்ளது. மற்றவருடன் உரையாடும் போதே

இலக்கணத் தமிழில் பேசிய அடிகளார், சொற்பொழிவில் தூய இலக்கணத் தமிழிலேயே பேசினார் என்று விதந்து சொல்ல வேண்டியதில்லை.

அடிகளாரின் மணிக்கணக்கான சொற்பொழிவுகளில் - எவ்வளவு நேரம் ஆயினும் கேட்போர்க்கு அலுப்பு ஏற்படுத்தாமல் மகிழ்ச்சியுண்டாக்கும் சொற்பொழிவுகளில் இடையிடையே நகைச் சுவையும், இருபொருள்(சிலேடை) நயமும் இடம்பெறத் தவறுவதில்லை. கந்தபுராணத்தில்- வள்ளியம்மைத் திருமணப் படலத்தில் உள்ள,

"ஐயனே அவள் ஆகம் நல் லெழில்
செய்ய பங்கயத் திருவிற் கும்மிலை
பொய்ய தன்றிது போந்து காண்டி நீ
கையனேன் இவண் கண்டு வந்தனன்" (62)

என்னும் பாடல், நாரதர் வள்ளியின் அழகுச் சிறப்பை முருகனுக்கு எடுத்துக் கூறுவதாகும். இப்பாடலில் இறுதியில் உள்ள 'கண்டு வந்தனன்' என்னும் தொடரில் அடிகளார் இருபொருள் நயம் உள்ளமையைக் கூறி மகிழ்விப்பார். 'கண்டு வந்தனன்' என்றால், 'வள்ளியை நான் கண்டு வந்தேன்' என்று நாரதர் கூறியதாகப் பொருள் கொள்ள வேண்டும். இதையே 'கண்டு உவந்தனன்' என்றும் பிரிக்கலாம். இங்ஙனம் பிரித்தால், நான் வள்ளியைக் கண்டு மகிழ்ந்தேன் (விரும்பினேன்) என்று கூறியதாக முருகன் பொருள் கொண்டால் நம்மேல் சினம் கொள்வாரே என்று நாரதர் அஞ்சி, வள்ளி எனக்கு தாய் போன்றவர் என்னும் கருத்து அமைய, அடுத்த பாடலை, 'தாய தாகும் அத்தையல் முன்னரே' என்று தொடங்கினார். அப்பாடல் முழுதும் வருமாறு:-

"தாய தாகுமத் தையல் முன்னரே
மாயவன் மகள் மற்றுன் மொய்ம்பினைத்
தோய நோற்றனள் சொற்ற எல்லையில்
போயவட் கருள் புரிதியால் என்றான்"-(63)

என்பது பாடல் - என்றெல்லாம் சொல்நயமும் பொருள் நயமும் கூறி அடிகளார் சொற்பொழிவாற்றுவார்.

சொற்பொழிவாற்றும் போது அடிகளார் தொடக்கத்திலும் இடையிடையேயும் அவையினரை 'மெய்யன்பர்களே' என விளிப்பார். தொடக்கத்திலும் முடிப்பிலும் இறைவணக்கப் பாடல்பாடுவார். சொற்பொழிவுகளில் சந்நிதி தொடக்கத்தில் பாடும் பாடல்களுள், திருப்போரூர்ச் சந்நிதிமுறையில் உள்ள பின்வரும் பாடல் இடம்பெறுவதுண்டு.

"இல்லறத்தான் அல்லேன் இயற்கைத் துறவி அல்லேன்
நல்லறத்து ஞானியல்லேன் நாயினேன் – சொல்லறத்தின்
ஒன்றேனும் இல்லேன் உயர்ந்த திருப்போரூரா
என்றேநான் ஈடேறுவேன்" - என்பது அப்பாடல்.

மற்றும் தொடக்கத்தில்,

'விநாயகனே வெவ்வினையை வேரறுக்க வல்லான்
விநாயகனே வேட்கை தணிவிப்பான் – விநாயகனே
விண்ணிற்கும் மண்ணிற்கும் நாதனுமாம் தன்மையினால்
கண்ணிற் பணிமின் கனிந்து'-

'உன்னை ஒழிய ஒருவரையும் நம்புகில்லேன்
பின்னை ஒருவரையான் பின்செல்லேன் – பன்னிருகைக்
கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்தில் வாழ்வே' -

'ஆய கலைகள் அறுபத்து நான்கினையும்
ஏய உணர்விக்கும் என்னம்மை - தூய
உருப்பளிங்கு போல்வாள்என் உள்ளத்தின் உள்ளே
இருப்பளிங்கு வாரா திடர்' -

'தந்தைதா யாவானும் சார்வதீங் காவானும்
அந்தமிலா இன்பநமக் காவானும் - எந்தமுயிர்
தானாகு வானும் சரணாகு வானுமருட்
கோனாகு வானும் குரு' -

என்னும் பாடல்களும் இடம் பெறும். இவை முறையே, பிள்ளையார், முருகன், கலைமகள், ஆசான் (குரு) ஆகியோரைப் பற்றியன வாகும்.

மற்றும், 'பூமேவு' என்று தொடங்கும் சிவன் பாடலும் 'உரையேறு' என்று தொடங்கும் சிவை பாடலும் இடம் பெறுவதுண்டு. சொற்பொழிவின் முடிவுரையை,"ஆறிரு தடந்தோள் வாழ்க ஆறுமுகம் வாழ்க வெற்பைக் கூறுசெய் தனிவேல் வாழ்க் குக்குடம் வாழ்க செவ்வேள் ஏறிய மஞ்ஞை வாழ்க யானைதன் அணங்கு வாழ்க மாறிலா வள்ளி வாழ்க வாழ்கசீர் அடியார் எல்லாம்" என்னும் பாடலும் கந்தர் அனுபூதி நூலின் இறுதிப் பாடலான

'உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே'

என்னும் பாடலும் மற்றும் சிலவும் இறுதியில் அணி செய்யும்.

அடிகளார் தமது முடிவுரையில், மற்ற பேச்சாளர்களின் தலைப்புகளைப் பற்றியும் ஆழ்ந்த கருத்துகள்

வழங்குவார். மற்றவர் சொல்லாது விட்ட கருத்துகளை யும் அறியாத கருத்துகளையும் முடிவுரையில் அடிகளார் எடுத்து விளக்கிக் கூறுவது மிகவும் சிறப்பாயிருக்கும். சொற்பொழிவாளர்கள் தமக்குள் முரண்பட்ட கருத்து களைப் பேசியிருப்பின், அடிகளார் அம்முரண்பட்ட கருத்துகளைத் தொட்டுத் துலக்கி இருசாராரும் அமைதி பெறச் செய்வார்.

அடிகளாரின் சொற்பொழிவின் சிறப்பைக் கோவை கிழார் ஒரு கட்டுரையில் விளக்கியிருக்கும் பகுதி அப்படியே வருமாறு:-

“அடிகளைப்போல் பேசும் திறமை வாய்ந்தவர்கள் தமிழ் நாட்டில் வேறொருவர் உண்டோ என்பது ஐயம். மணிக் கணக்காகப் பல நாள்களும் பேசக் கூடிய வன்மை எவர்க்கு உளது! பல்லாயிரக் கணக்கான மக்களும் வாய்திறந்த வண்ணமாக உட்கார்ந்து கேட்கும் படியாகப் பெருஞ் சொற்பொழிவுகள் நிகழ்த்துவார்கள். கற்றோரும் கல்லாதாரும் பெரும் பயனை அடைந்தே செல்வார்கள். அவர்பேச்சில் வெறும் பேச்சுகள் இல்லாமல் பொருள் வாய்ந்த பேச்சுகளாகவே காண்போம். கோவையில் ‘வள்ளித் திருமணம்’ என்ற பொருள் பற்றி மூன்று மணி நேரம் மூன்று நாள்கள் பேசினார்கள். ஆயினும், கூறியது கூறல் என்பது சிறிதேனும் இருக்கவில்லை. அப்படியே ‘சீதா கல்யாணம்’ என்ற பொருளை விளக்கினார்கள். ஈசுவர தத்துவங்களை விளக்குவதில் அவரைப்போல் யாரும் இலர், பேரூரில் நடராச தத்துவத்தை மிகவும் தெளிவாக விளக்கினார்கள். அறிவுக்கு அறிவு இல்லை. ஆற்றலுக்கும் குறைவு இல்லை. தளர்ந்த வயதிலும் இப் பண்புகளை நன்றாகக் கொண்டிருந்தார்கள்.

சில சமயங்களில் குறைவு என்று நமக்குத் தோன்றும்

செயல்களையும் குணமாகத் திருப்பிப் பாராட்டுவதில் அடிகளைப்போல எவரும் இலர்-ஒரு முறை கோவையில் தமிழ்ச் சங்கத்தின் ஆண்டு நிறைவு விழாவில் தலைமை வகித்தார்கள். சங்கத்து அறிக்கைத் தாளில், கையிருப்பு ஐந்து அணா - நான்கு பை-என்றிருந்தது. நமது தலைமை உரையில் அக்குறைவை ஒரு குணமாகப் பாராட்டினார் கள். அதிக பணம் ஒரு சங்கத்திற்கு இருந்தால், அச்சங்கத் தினர் தாம் செய்யும் வேளையில் சுறுசுறுப்பு காட்ட மாட்டார்கள். எப்பொழுது குறைவாக உள்ளதோ அப் பொழுது தங்கள் ஊக்கத்தையே முதன்மையாகக் காட்டு வார்கள். இச்சங்கத்தார் பணம் சேகரிப்பதற்கு மாறா கச் செய்கையில் ஊக்கத்தைக் காட்டியுள்ளார்கள் என்பது, இச்சிறிய கை இருப்புத் தொகையால் தெளிவாகிறது என்று குறையைக் குணமாகப் போற்றினார்கள்.

எந்தச் சமயத்திலும் எப்பேச்சிலும் ஒருவருக்கு மனத் தாங்கல் வராதபடி அழகாகப் பேசுவார்கள். தமிழே யன்றி வடமொழியிலும் தேர்ந்தவர்கள். ஒரு பொருளைப் பற்றிப் பேசுங்கால், இரு மொழிகளிலிருந்தும் எடுத்துக் காட்டுகளைக் கொண்டு விளக்குவார்கள். ஆங்கிலத்திலும் அடிக்கடிச் சொற்களை எடுத்து விளக்குவது உண்டு. எல்லாச்சமயங்களினுடைய கொள்கைகளையும் அறிவார் கள். ஒரு கொள்கையைத் தாக்கிப் பேசுங் காலத்திலும் இனிய சொற்களாகவே பேசுவதால் எவருக்கும் மனத் தாங்கல் ஏற்படாது. என்றாலும், தாம் எடுத்துக்கொண்ட கொள்கையை உறுதியுடன்தான் தாங்கிப் பேசுவார்கள். சைவக் கொள்கைகளை எவ்வளவு அழுத்தமாகப் பேசு வார்களோ, அதைப்போலவே, வைணவம் - கிறித்தவம் முதலியவைகளையும் சொல்லி விளக்குவார்கள்''-

இது கோவை கிழாரின் மதிப்புரை. ஆகவே, அடி

களாரின் சொற்பொழிவுச் சிறப்பைப் பற்றி இன்னும் என்ன சொல்ல வேண்டும்!

புலிசை அருளகத்தில் ஆண்டுதோறும் வழக்கமாகக் கந்தர் சஷ்டி விழா நடைபெறும் ஆறு நாட்களிலும் சொற்பொழிவு நடைபெறும் - மற்றும், மார்கழித் திங்கள் முழுவதும் காலையில் பாவைச் சொற்பொழிவுகள் உண்டு. மணிவாசகரின் திருவெம்பாவையும் திருப்பள்ளியெழுச்சியும் சொற்பொழிவு உருவம் பெறும். மேலும், புலியூர்ச் சிவன் கோயிலில் வைகாசிப்பெருவிழா நடைபெறும் பத்து நாட்களிலும் சொற்பொழிவு உண்டு. அன்றியும், ஒவ்வொரு ஞாயிறு மாலையிலும் சொற்பொழிவு நிகழும். கிருத்திகை போன்ற சிறப்பு நாள்களிலும் சொற்பொழிவு உண்டு. இவ்வாறாக, ஆயிரக்கணக்கான சொற்பொழிவுகள் ஞானியார் அடிகளாரால் நிகழ்த்தப் பெற்றுப் பல்லோரைக் கல்வி அறிவு ஒழுக்கங்களில் சிறந்தவராக்கியுள்ளன.

சொற்பொழிவுக்குக் குறித்தநேரத்திற்குச் சிறிது முன்னதாகவே அடிகளார் வந்து அமர்ந்து விடுவார். மற்றவர்களால் காலத் தாழ்ப்புஏற்பட்டாலொழிய, அடிகளாரால் குறைநேராது. குறித்த நேரத்தில் சொற்பொழிவு தொடங்கப்பட்டுவிடும்.

# 6. இரு பொருள் - சொல்நயம்

இரண்டு பொருள்படப் பேசுவதைச் 'சிலேடை அணி' என வடமொழியில் கூறுவர். தமிழில் 'இரட்டுற மொழிதல்' என்பர். இந்தக் காலச் சொற்பொழிவாளர்களுள் கிருபானந்த வாரியாருக்கு இது கைவந்த கலையாகும். வாரியாருக்குப் பாடம் கற்பித்த ஞானியார் அடிகளாரும் இரட்டுற மொழிதலில் வல்லவர்.

**இரு கையும் பல கையும்**

திருவையாறு பரமசிவம் என்னும் துறவி ஒருவர் சிறிது காலம் புலிசை ஞானியார் அருளகத்தில் வந்து தங்கியிருந் தார். அவர் ஒருநாள் எண்ணெய் தேய்த்துத் தலை குளிக்க விரும்பினார். அதன்படி, பணியாளர், அவருக்காக ஒரு கையில் எண்ணெய் உள்ள கிண்ணமும் மற்றொரு கையில் யில் சிகைக் காய்த்தூளும் கொண்டு வந்தார். அதைக் கண்ட ஞானியார் அடிகளார் இருகை போதுமா? பலகை வேண்டும் என்றாராம். பலகை என்றால், அமர்ந்து எண் ணெய் தேய்த்துக் கொள்ளக் கீழே இடுவதற்கு மரப் பலகை - அதாவது மணை வேண்டும் என்பது பொருள்.

**நெடுமாலை**

திருவயிந்தரபுரத்தில், 'மார்கழித் திங்கள்' என்னும் பொருளியல் அடிகளார் ஒரு முறை சொற்பொழிவாற்றி னார். அவரை அழைத்துச் சென்ற அந்த ஊர் திருமால் கோயிலார் அடிகளாருக்கு நீண்ட மாலை ஒன்று அணிவித்த னர். உடனே அடிகளார் நான் நெடு மாலை அடைந்தேன் என்று கூறினார். நெடு மாலை என்பது நீண்ட பூமாலை என்னும் பொருளையும் நெடியோனாகிய திருமாலை என் னும் பொருளையும் தருகின்ற தன்றோ. இந்த இரு பொருள் நயத்தை அனைவரும் சுவைத்தனராம்.

**வெள்ளைப் பாதிரி**

திருப்பாதிரிப் புலியூரில் பாதிரி மரம் கோயில் மரம் (தல விருட்சம்) ஆகும். அதனாலேயே அந்த ஊருக்கு பாதிரிப் புலியூர் என்னும் பெயர் ஏற்பட்டது. அவ்வூர்க் கோயிலில் பழங்காலத்தில் இருந்த பெரிய பாதிரி மரம் பட்டுப் போயிற்று. அதைச் செப்புக் கவசத்தால் மூடி வைத்திருப்பதை இன்றும் காணலாம். திருக்கோயிலின்

மேற்குத் திருச்சுற்றில் (சுற்றுப்பிரகாரத்தில்) பாதிரி மரங்கள் இப்போதும் உள்ளன.

பாதிரிப்பூவில் சிவப்புப் பாதிரி, வெள்ளைப் பாதிரி என இருவகை உண்டு. சிவனுக்குச் சூட்டச் சிவப்புப் பாதிரி மலரைத் தான் பயன்படுத்த வேண்டும் என்பது மரபு. வெள்ளைப் பாதிரி மலரைச் சிவனுக்கு அணிவதில்லை. இந்தக் கருத்தை அடிப்படையாகக் கொண்டு ஞானியார் அடிகளார் 'சிவபூசனைக்கு வெள்ளைப் பாதிரி பயன்படுவதில்லை' என்று சொற்பொழிவில் கூறினார். இங்கே, வெள்ளைப் பாதிரி என்பது, வெள்ளைப் பாதிரி மலரைக் குறிப்பதன்றி, வெள்ளைக்காரக் கிறித்தவப் பாதிரி சிவ பூசனை செய்வதில்லை என்னும் குறிப்புப் பொருளையும் தருகின்ற தன்றோ. இந்த இரு பொருள் **நயத்தை** மிகவும் மகிழ்ந்து சுவைத்தனர்.

**கார்க்கூர் – காற்கூறு**

அடிகளார் அன்பர்களின் வேண்டுகோட்கிணங்கிக் குடியேற்றம் (குடியாத்தம்) போந்து சிறப்பித்த காலை, அவ்வூர்க்கு அருகிலுள்ள 'கார்க்கூர்' என்னும் ஊரினராகிய பெருஞ் செல்வர் வந்து, தம் ஊருக்கு எழுந்தருளும் வண்ணம் அடிகளாரை வேண்டினர். இசைந்த அடிகளார் அவ்வூருக்கு ஒரு நாள் இரவு 8 மணிக்குச் சென்றார். ஆங்குள்ள ஒரு புதிய கட்டடத்தில் அடிகளாரைத் தங்கச் செய்தனர். நள்ளிரவு 2 மணிக்கு அடிகளார் சிறுநீர் கழிக்கப் பின்புறம் சென்றார். அங்கே, குறடும் அதன் அடித் தளமும் வெண்சுதை பூசப்பட்டிருந்ததால், குறடு என்றும் அடித்தளம் என்றும் வேறுபாடு அறியாமல், அடிகளார் குறடு என்று எண்ணி அடித்தளத்தில் காலை ஊன்றினார். அதனால் நிலைமாறிக் கீழே விழுந்துவிட்டார். கணுக் காலில் முறிவு ஏற்பட்டு விட்டது. பிறகு அன்பர்கள் அறிந்து

வேண்டிய முதல் உதவி மருத்துவம் புரிந்தனர். அடிகளார் அன்பர்களை நோக்கி, கார்க்கூருக்கு வந்ததால் 'காற்கூறு' நேர்ந்து விட்டது என நயம் பெறக் கூறினார். இங்கே 'காற்கூறு' என்பது, காற்கு ஊறு - அதாவது - காலுக்கு இடையூறு' ஏற்பட்டு விட்டது என்னும் பொருளைத் தருவதை அறியலாம். 'கார்க்கூர்' என்பது கார்க்கு ஊர் காருக்கு (மேகத்திற்கு) மேகம் மழை பொழிதற்கு ஏற்ற ஊர் என்னும் பொருளைத் தருவதையும் அடிகளார் குறிப்பிட்டார்.

**குறட்டை விடுதல்**

ஒரு சமயம் அடிகளார்க்குத் துடையில் கட்டி வந்தது. அறுவை மருத்துவம் நடந்தது. புலிசை பு.ர. சுவாமிநாத முதலியாரும் அவர் மனைவி இராசேசுவரி அம்மையாரும் – ஏன் - அக்குடும்பத்தார் அனைவரும் அடிகளாரின் அருகு இருந்து மருத்துவப்பணிவிடை செய்தனர். இராசேசுவரி அம்மையார், மருத்துவர் கூறிய அளவுப்படி அவ்வப் போது மருந்து கொடுத்து வந்தார். ஒரு நாள் இரவு மருந்து தரவில்லை. மறு நாள் காலை அடிகளார் அம்மை யாரை நோக்கி, இரவு மருந்து கொடுக்க வில்லையே' என்றாராம், அதற்கு அம்மையார் அடிகளாரை நோக்கி, 'நீங்கள் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தீர்கள் – எழுப்ப வேண்டாம் என்று எண்ணி மருந்து தரவில்லை என்றார். அதற்கு அடிகளார் நான் குறட்டை விட்டுத் தூங்க வில்லையே - குறட்டின் மேல்தானே படுத்துத் தூங்கினேன் என்றாராம். கேட்டவர்கள் அனைவரும் இந்த நகைச்சுவை விருந்தைச் சுவைத்தனர்.

**சண்முகா – சண்முகம்**

யான் திருவையாற்று அரசர் கல்லூரியில் வித்துவான் பட்டத்திற்குப் படித்தேன். திருவையாறு செல்வதற்கு

முன்பே, அடிகளார், ஒரு பிள்ளையார் சதுர்த்தி நாளன்று தொடங்கிக் 'கிரந்த மொழி' கற்றுத் தந்தார். மற்றும் ஞானியார் அருளகத்தில், நன்னூல், யாப்பருங்கலக் காரிகை, பிரபுலிங்க லீலையின் முற்பகுதி, பழமலை யந்தாதி, நால்வர் நான் மணி மாலை, சோண சைல மாலை முதலிய நூல்களைப் பாடம் கேட்டு விட்டேன். என் ஒரு வகுப்பு மாணாக்கர்கட்குப்(class mate)பிரபுலிங்க லீலை என்னும்நூலைத் த.வே. உமாமகேசுவரம் பிள்ளை யும் நன்னூல் என்னும் நூலை ஞானியார் அடிகளாரும் இலவசமாக வாங்கித் தந்தனர்.

திருவையாற்றில் வித்துவான் படிப்பு 1936 சூலை முதல் 1940 மார்ச்சு வரை நான்காண்டுக் காலம் எடுத்து கொண்டது. எனது 15,16,17,18 ஆகிய நான்காண்டு அகவைக் (வயதுக்) காலத்தில் வித்துவான் படித்து முடிந்தேன்.

சொந்த ஊர் வண்டிப் பாளையம். ஒரு முறை விடுமுறை கழிந்ததும் திருவையாற்றுக்குப் புறப்பட்டேன். யான் சிறிய பையன். திருப்பாதிரிப்புலியூர்ப் புகைவண்டி நிலையத்திற்குப் புகைவண்டி நள்ளிரவு 1-40 மணிக்கு வரும். அதில் ஏறிச் சென்றால் விடியலில் தஞ்சை அடையலாம். அங்கிருந்து பேருந்தில் திருவையாறு செல்ல வேண்டும். இந்நிலையில், நள்ளிரவு 1-40 மணிக்கு வண்டியைப் பிடிக்க வேண்டுமெனில் வண்டிப் பாளையத் திலிருந்து தனியாகக் கண்விழித்துக் கொண்டு உரிய நேரத்தில் வண்டியைப் பிடிப்பது கடினம்.

அதனால் யானும் எனக்குத் துணையாக என் தந்தை யாரும் இரவு 10 மணிக்கே ஞானியார் அருளகம் வந்து படுத்துக்கொண்டோம். அருளகத்தின் முற்பகுதியில் உள்ள பெரிய சொற்பொழிவுக் கூடத்தின் தென்புறம் அடிகள்ளார்

படுத்துக்கொண்டார். யானும் என் தந்தையாரும் வடபுறம் படுத்துக் கொண்டோம். இரவு ஒரு மணிக்காவது விழித்துக் கொண்டால்தான் விரைவில் புகைவண்டி நிலையம் போய்ப் பயணச் சீட்டு வாங்கிக் காத்துக்கொண்டிருக்க லாம். நிலையம் அருகில்தான் உள்ளது.

இரவு ஒரு மணியளவில் அடிகளார் சண்முகா - சண்முகா என்று ஒலி எழுப்பினார், பின்னர் சண்முகம் - சண்முகம் என்று ஒலியெழுப்பி யிருக்கின்றார். உடனே என் தந்தையார் என்னை எழுப்பிவிட்டார். அடிகளாரிடம் விடைபெறச் சென்றபோது, "நான் எழுப்பாவிடின் நீங்கள் விழித்திருக்கமாட்டீர்கள் போலும்' என்று அடிகளார் அடிக்கடி 'சண்முகா - சண்முகா' என்று சொல்வது வழக்கம். என் தந்தையார் அதைக் குறிப்பிட்டு, அடிகளாரை நோக்கி 'சுவாமிகள் சண்முகா - சண்முகம் என்ற போது நான் விழித்துக் கொண்டு தான் இருந்தேன், நீங்கள் முரு கனைச் 'சண்முகா' என விளிப்பதாக எண்ணி வாளா இருந் தேன்' என்று கூறினார். அதற்கு அடிகளார், யான் அந்தச் சண்முகத்தையும்தான் அழைத்தேன் -இந்தச் சண்முகத்தை யும்தான் அழைத்தேன்' என்று புன்முறுவலுடன் கூறினார். சண்முகம் என்பதிலும் அடிகளார் சொல்விளையாட்டு செய்தார். எனக்குத் தொல்காப்பியம் - பொருளதிகாரம் - நச்சினார்க்கினியர் உரை நூலை அடிகளார் தந்து நீயே வைத்துக்கொண்டு படி என்று அருளினார். நாங்கள் திரு வடிகளில் விழுந்து வணங்கித் திருநீறும் விடையும் பெற்றுச் சென்றோம்.

**இருந்தாரானார்**

திருப்பாதிரிப் புலியூர் அருளகத்தில் அடிகளார் ஒரு நாள் அன்பர்கட்குப் பாடம் நடத்திக் கொண்டிருந்த பொழுது, கரும் புள்ளியிட்ட கடிதம் ஒன்று வந்தது. அடிக

ளார் பிரித்துப் படித்தார். கரும்புள்ளி இருந்ததால் இறப்புச் சேதியாய் இருக்கலாம் - யாரோ - எவரோ என அன்பர்கள் உள்ளம் துடித்துக்கொண்டிருந்தனர். கடிதத்தைப் படித்து முடித்த அடிகளார், அன்பர்களை நோக்கி 'சோழ வந்தான் அரசஞ் - சண்முகனார் இருந்தாரானார். என்று கூறினார். உடனே அன்பர்கள், 'இறந்தாரானார்'', என்று கூறுவதற்குப் பதில், வாய் தவறிப் பிழையாக 'இருந்தாரானார்' என்று கூறிவிட்டார் என எண்ணி ஒருவர்க் கொருவர் மெதுவாகச் சொல்லிக் கொண்டனராம். இதைக் குறிப்பால் அறிந்த அடிகளார், அரசஞ் சண்முகனார் முன்னொரு காலம் இருந்தார் என்று கூறக் கூடிய நிலையை அடைந்து விட்டார் என்று கூறினார். பின்னரே அன்பர்கள் நிலைமையை அறிந்து, அடிகளாரின் சொல்பொருள் நயத்தை வியந்தனராம்.

**வருவாய்**

அடிகளாரின் மற்றொரு வகைச் சொல் நயத்தைக் காண்பாம். சொற்பொழிவின் இறுதியில் அடிகளார்

''உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே'' -

என்னும் கந்தர் அனுபூதிப் பாடலைக் கூறுவார். 'முதலில் இவ்வாறு கூறியதும், பின்னர், உருவாய் அருவாய் வருவாய் - உளதாய் இலதாய் வருவாய் - மருவாய் (மணமாய்) மலராய் வருவாய் - மணியாய் ஒளியாய் வருவாய் - கருவாய் உருவாய் வருவாய் - கதியாய் விதியாய் வருவாய் - என இரட்டை இரட்டையாய்ப் பிரித்துக் கூறி, இறுதியில் குருவாய் வருவாய்' என்று பாடிக்காட்டுவார்கள். கேட்கும் அன்பர்கள் உணர்ச்சிவசப்படுவர்.

இவ்வாறு அடிகளாரின் இருபொருள் - சொல் நயங் களைச் சொல்லிக் கொண்டே போகலாம். அதற்கு அளவு ஏது? ஏன் - இன்னும் இரண்டு பார்ப்போமே!:

**சட்டியும் அகப்பையும்**

அடிகளார் வெளியூர்ச் செலவு மேற்கொண்டிருந்த காலத்தில் அன்பர்களின் வேண்டுகோட்கு இணங்கி ஒரு சிற்றூரில் தங்கி அருளுரை நல்கினார்கள். அவ்வூரில் உள்ள செல்வர் ஒருவர்க்குக் குழந்தைப் பேறுவாய்க்கவில்லை. அடிகளாரிடம் இது தெரிவிக்கப்பட்டது. அறிந்த அடிக ளார் 'சட்டியில் இருந்தால் தானே அகப்பையில் வரும்' என்னும் பழமொழியைக் கூறினார்கள். கேட்ட மக்கள் திடுக்கிட்டனர். அவருக்கு ஆண்மையிருந்தால் தானே குழந்தை பிறக்கும்; அவர் மனைவிக்கு மலடு இல்லாப் பெண்மை இருந்தால்தானே குழந்தை பிறக்கும் - என்ற பொருளில் இழித்துத் தாழ்த்திக் கூறியதாகப் பலரும் முதலில் எண்ணினர்;

பின்னர் அடிகளார், அவர்களின் எண்ணத்தை யறிந்து பின்வரும் விளக்கம் தந்தார்: 'சட்டி என்பது சஷ்டி; அகம் என்பது வயிறு - அகப்பை என்பது வயிற்றில் உள்ள கருப்பை. எனவே, சஷ்டி விரதம் இருந்தால் வயிற்றுக் கருப்பையில் குழந்தை தங்கிப் பிறக்கும் - என்ற விளக் கத்தை அடிகளார் அறிவித்ததும், அனைவரும் வியந்து மகிழ்ந்து போற்றினர். பிள்ளையில்லாதவர்கள் சஷ்டி விரதம் இருந்த பின் பிள்ளைப்பேறு பெற்றதாகச் சொல்லப் படுகிறது. என்னே அடிகளாரின் இருபொருள் - சொல் நயம்!

**மடமும் மடமும்**

ஞானியார் அடிகளார் தமிழ்நாட்டு மடங்களைக் குறித்து ஒரு வகையான. சொல்நய விளையாட்டு புரிவார்

''தமிழ் நாட்டில் உள்ள மடங்கள் தமிழ் மடங்கள் அல்ல-அவை சமசுகிருத மடங்களாகும்'' என்று அடிகளார் கூறுவதுண்டு. இதற்கு அடிகளார் விளக்கமும் தருவார். அதாவது:

தமிழில் உள்ள 'மடம்' என்னும் சொல்லுக்கு இளமை பேதைமை, அழகு, மென்மை, இணக்கம் என்னும் பொருள்கள் உள. எனவே, மடம் என்னும் தமிழ்ச் சொல், துறவிகளின் இருப்பிடத்தைக் குறிப்பதில்லை. சமசுகிருதத்தில்

ட்

தில் உள்ள 'மடம்' என்னும் சொல்லுக்குத் துறவிகள் வாழும் இடம், சத்திரம், சாவடி முதலிய பொருள்கள் உண்டு. எனவே, துறவிகள் வாழும் மடம் தமிழ்மடம் அன்று சமசுகிருத மடமாகும் என அடிகளார் கேட்பவர் வியக்கும் வண்ணம் சொல்விலையாட்டின்பம் நல்குவார். அடிகளாரின் சொல்வன்மையின் திறனே திறன்!

# 7. அடிகளாரின் தமிழ்ப் பணி

துறவியர் சமயப் பணி செய்வதில் வியப்பில்லை. மடாலயங்களில் - ஆதினங்களில் உள்ள துறவியர்கட்குச் சமயப் பணி செய்வது கட்டாயக் கடமையாகும். ஆனால், அனைவரும் தாய்மொழி வளர்ச்சிப் பணி அஞ்சாமல் - கசக்காமல் - வெறுக்காமல் செய்கிறார்களா என்பதே கேள்வி.

தமிழ் என்று சொன்னாலே அஞ்சியும் அருவருத்தும் ஒதுங்கிக் கொள்ளும் தமிழ்ப் பெரியார்கள் பலர் தமிழ் நாட்டில் உள்ளனர். அவர்கள், தமிழ் - தமிழ் என்று சொல்பவர்களைப் பகைவர் போல் கருதித் தம்மோடு சேர்ப்பதில்லை. 'தமிழ்' என்று சொல்பவர்க்கு நன்மை செய்யாதது மட்டுமன்று - தீமையும் செய்கின்றனர் சிலர்.

ஆனால் ஞானியார் அடிகளார் மேற்குறிக்கப் பெற்ற வர்களிலிருந்து விதி விலக்காயிருந்தார். முதலில் தூய தமிழில் – கொச்சையில்லாத இலக்கணத் தமிழில் பேச வேண்டும் என்று ஓர் இயக்கம் தொடங்கி அதை நடை முறையில் அடிகளார் செயல்படுத்தி வந்தார். இதைக் கண்டு மற்றவர்களும் அடிகளாரிடம் தூய தமிழில் பேசி வந்தனர் - வெளியிலும் பேசலானார். இஃது ஒரு தமிழ்ப் பணி.

தமிழ் நூல்களை நிரம்பப் படித்து, அவற்றைப் பலர்க் கும் கற்பித்துப் பெரும் புலவர்களாக்கியது மற்றொரு தமிழ்ப்பணி.

தமிழின் பெருமையைச் செல்லும் இடங்களிலெல்லாம் எடுத்து இயம்பியது அடுத்ததொரு தமிழ்ப்பணி. செய்யாறு பாநுகவி மாணவர் கழகத்தில் அடிகளார் தமிழ்மொழியின் பெருமையை மிகவும் விரிவாக விளக்கிய செய்தி இந்நூலில் வேறோரிடத்தில் காணலாம். அந்தக் காலத்தில் அடிக ளாரைப் போல ஆரியமும் ஆங்கிலமும் கற்றவர்கள் செய் யாத பணி இது.

அடிகளார் தாமே தமிழ்க் கல்வி நிறுவனம் தொடங்கி நடத்தியதல்லாமல், தமது முயற்சியால் தமது தூண்டு தலால், மதுரையில் நான்காம் தமிழ்ச் சங்கம் அமையச் செய்தது மாபெருந் தமிழ்த் தொண்டாகும்.

தமிழ்கற்பதும் தமிழில் பேசுவதும் தாழ்வென்றும், தமக்குத் தமிழ்பேசத் தெரியாது என்று சொல்வதைப் பெருமை என்றும் கருதிய கோடரிக் காம்புகள் மிகுதியாக இருந்த காலத்தில், அடிகளார் இவ்வாறு தமிழ் இயக்கம் தொடங்கி நடத்தியது மிகவும் போற்றத்தக்கதாகும்.

அடிகளாரின் தமிழ்ப் பணி பற்றி இந்நூலில் தனித் தலைப்பு இட்டு எழுத வேண்டிய கட்டாயங்கூடத் தேவை

யில்லை. இந்நூல் முழுதும் அடிகளாரின் தமிழ்ப் பணியைப் பலபட விரித்து விளக்குவதாகும். அவர்கள் தோற்றிய கழகங்களே, அடிகளாரின் தமிழ்ப்பணியைப் பறைசாற்றும்.

அடிகளாரின் தமிழ்ப் பற்றுக்கு மற்றொரு இமாலயச் சான்று உண்டு. 1938-ஆம் ஆண்டு தமிழ் நாட்டில் இந்தி கட்டாயப் பாடமாக்கப்பட்டபோது, அடிகளார் இந்தியை எதிர்த்து அறிக்கை வெளியிட்டார்கள். அந்த அறிக்கையை யானே பல இடங்களில் - பல சுவர்களில் ஒட்டியுள்ளேன்.

அடிகளாரின் தமிழ்ப் பணி - பற்று பற்றி இன்னும் ஒன்று சொல்ல வேண்டும். அஃதாவது:-

**அரசர் கல்லூரி**

ஒரு காலத்தில் தமிழ்க் கல்விக்கு எனத்தமிழ்க் கல்லூரி இருந்ததில்லை. தஞ்சையைச் சார்ந்த திருவையாற்றில் வடமொழிக் கல்லூரி என்னும் பெயருடன் வடமொழிக் கல்லூரி ஒன்று இருந்தது. அது, தஞ்சையை ஆண்ட சரபோசி மன்னரால் நிறுவப்பட்டது. பிற்காலத்தில் அது தஞ்சை மாவட்ட ஆண்மைக் கழகத்தால் (District Board) மேற்பார்வையிட்டு நடத்தப்பெற்றது. அடிகளார் திருவை யாற்றிற்குச் சென்றபோது, அடிகளாரின் வடமொழிப் புலமையையும் அறிந்த அக்கல்லூரியினர், அடிகளாரின் வடமொழிப் புலமையைப் பாராட்டி வடமொழியிலேயே எழுதி ஒரு வரவேற்புரை வழங்கினர். அக்கல்லூரியைப் பற்றிய செய்திகளை யெல்லாம் அடிகளார் அறிந்து கொண்டனர்.

புலிசை திரும்பியதும், வடமொழி மட்டும் கற்பிக்கும் அந்தக் கல்லூரியில் தமிழையும் கற்பிக்கச் செய்யவேண்டும் என்ற எண்ணம் பீரிட்டு எழுந்தது. எண்ணத்திற்கு வடிவம் கொடுக்க அடிகளார் விரும்பினார். அடிகளார்பால்

மிக்க அன்புடையவர் உமாமகேசுரம்பிள்ளை. அவர் தஞ்சை மாவட்டக் கழகத் துணைத் தலைவராயிருந்தார். அவரை அடிகளார் தம் இருப்பிடத்திற்கு அழைத்து இது பற்றி உரையாடினார். அக்கல்லூரி தொடர்பான அறக் கட்டளையை ஆராயச் சொன்னார். அப்போது அம் மாவட்டக் கழகத்தின் தலைவராயிருந்தவர் சர்.ஏ டி. பன்னீர்செல்வம், Bar-at-Law, என்பவர். உமாமகேசுவரம் பிள்ளை பன்னீர்செல்வத்தைக் கலந்து பழைய அறக் கட்டளைச் செப்புப் பட்டயத்தைப்படி எடுத்துக்கொண்டு பன்னீர் செல்வத்தையும் உடன் அழைத்துக்கொண்டு. புலிசை ஞானியார் அருளகம் வந்தார். அந்த அறக் கட்டளை பொதுவாகக் கல்வி வளர்ச்சிக்கு உரியது என்றே எழுதப்பட்டிருந்தது. எனவே, தமிழையும் கற்பிக்கலாம் என அடிகளாரின் முன்னிலையில் தீர்மானிக்கப்பட்டது. இரு வரும் தஞ்சை சென்றபின், அக்கல்லூரியில் தமிழ் வித்து வான் கல்வியும் கற்பிக்க ஏற்பாடு செய்தார்கள், வட மொழிக் கல்லூரி என்னும் பெயரை மாற்றிப் பொதுவாக 'அரசர் கல்லூரி, (Raja's colloge) என்னும் பெயர் சூட்டி னார்கள். அக்கல்லூரியில் பயின்ற தமிழ்ப் புலவர்கள் பதினாயிரக் கணக்கானவர் என்று கூறலாம். ஞானியார் அடிகளாரின் முயற்சியால் ஒரு தமிழ்க் கல்லூரி ஏற் பட்டதைப் பலரும் அறிந்து பாராட்டினார்கள்.

அடிகளாரின் தமிழ்ப் பணி பற்றி இன்னும் என்ன சொல்ல வேண்டும்!

# 8. அடிகளாரின் படைப்புகள்

ஞானியார் அடிகளார் பெரிய நூல் ஏதும் இயற்ற வில்லை. பாடம் சொல்வதிலும் சொற்பொழிவாற்றுவதிலுமே தம் காலம் முழுமையும் செலவிட்டதால், நூல் எழுத நேரம் இல்லாது போய்விட்டது.

சிலர் அடிகளாரை நோக்கி, 'நீங்கள் ஏன் நூல் எதுவும் எழுதவில்லை' என்று வினவியதற்கு, 'பெரியோர்கள் எழுதி வைத்துப் போயிருக்கும் நூல்களைப் படிக்கவே போதுமான மக்கள் இல்லை - இந்தநிலையில் யான்வேறு நூல் எழுத வேண்டுமா?' - என வினா எதிர் வினா விடுத்தாராம்.

இக்காலத்தில் சொற்பொழிவுகளைச் சுருக்கெழுத்து செய்தும், நாடாப் பதிவு செய்தும் பின்னர் நூல்களாக அச்சிடுவது போன்ற வாய்ப்பு அக்காலத்தில் இல்லை போலும். இருந்தும் யாரும் அதில் கருத்து செலுத்த வில்லை போலும். இவ்வாறு அன்று செய்திருந்தால், அடிகளாரின் பெயரில் நூற்றுக் கணக்கான நூல்கள் வெளிவந்திருக்கும்.

இத்தகைய பணியும் சிலசமயம் குறைந்த அளவில் நடைபெற்றுள்ளது. திருவோத்தூர் பாநுகவி மாணவர் கழகத்தின் 12-ஆம் ஆண்டு விழாவில் அடிகளார் தலைமை தாங்கிப் பேசிய கருத்துகளின் கருத்தைப் புலவர் த. உலகநாதன் எழுதி, 'தமிழணங்கு' என்னும் இதழுக்கு அனுப்பி வெளியிடச் செய்தார். அச் சொற்பொழிவுச் சுருக்கத்தை முன்னர் ஓரிடத்தில் கண்டோம்.

அடிகளாரிடம் பாடம் கேட்ட க.ர. ஆதிலட்சுமி அம்மையார், கந்தர் அநுபூதி திருப்போரூர்ச் சந்நிதி

முறை என்னும் நூலுக்கு அடிகளார் கூறிய குறிப்புக்களைச் சேர்த்துக் 'கந்தர் அநுபூதி' என்னும் நூலை வெளியிட்டுள்ளார்.

அடிகளார் ஆண்டு தோறும், புலிசையில் கந்தர் சஷ்டி விழா செய்யும் ஆறு நாட்களிலும் சொற்பொழி வாற்றுவார்கள். அந்தச் சொற்பொழிவுகளை முத்து. இராசாக் கண்ணனார் குறிப்பு எடுத்து, கந்தர் 'சஷ்டிச் சொற்பொழிவுகள்' என்னும் பெயரில் நூலாக வெளியிட்டுள்ளார்.

ஈரோடு பெண்கள் உயர்நிலைப் பள்ளியில் அடிகளார் 'அன்பு' என்னும் தலைப்பில் ஆற்றிய சொற்பொழிவு கட்டுரையுருவம் பெற்றுக் 'குடியரசு' இதழில் வெளி வந்தது. இவ்வாறு, அவ்வப்போது சில சொற்பொழிவுகள் சில இதழ்களில் வெளிவந்துள்ளன.

பாடல் இயற்றும் புலமையும் அடிகளார்க்கு உண்டு. அவ்வப்போது சில தனிப் பாடல்கள் எழுதியது உண்டு. அவற்றுள் ஒன்றையாவது இவண் காண்பாம்.

வெ. ஆதிசேஷ முதலியார் என்பவர், சென்னையில் உள்ள தம் 'நால்வர் அருள்' என்னும் இடத்திற்கு அடிக ளாரை அழைத்துப் போற்றி வணங்கிப் பல சொற்பொழிவு கள் செய்யவைத்தார். அவ்விடத்தினின்றும் அகன்றதும் அடிகளார் அவருக்கு நன்றி தெரிவித்துப் பின்வரும் பாடலை எழுதியனுப்பினார்:

> ''நல்லாதி சேடப்பேர் நண்ப இது காண்க
> எல்லா நலனும் எய்துக – பொல்லாத
> சூரர் தடிந்து சுரருக் கருள்புரிந்தோன்
> பேரருளைப் பெற்றநலத் தால்''

என்பது அப்பாடல். அடிகளார் 'சைவ ஒழுக்கம்' என்னும்

நூல் ஒன்று தொகுத்து வெளியிட்டமை முன் ஓர் இடத்தில் தெரிவிக்கப்பட்டுள்ளது. ஐந்தாம் பட்டத்தவ ராகிய ஞானியர் அடிகளார், இரண்டாம் பட்டத்து ஆசான்மேல் ஞான தேசிக மாலை' எனும் சிறுநூல் ஒன்று இயற்றியுள்ளார். அதிலிருந்து ஒரு பாடல் வருமாறு:-

''நின்னருள் துணையால் நீங்கினர் வறுமை
நீங்கினர் துன்பநோய் பலவும்.
நின்னருள் துணையால் எய்தினர் செல்வம்
நேயமும் எய்தினர் பலரும்.
நின்னருள் கண்டு நீங்கும் அஞ்ஞானம்
நின்னருள் ஞானமே நல்கும்.
தன்னிகர் பங்கு முயற்கருள் புலிசைச்
சண்முக ஞானதே சிகனே''-

என்பது அப்பாடல். அடுத்து அடிகளார் இயற்றிய ''குரு துதி'' என்னும் சிறு நூலிலிருந்து மாதிரிக்கு ஒரு பாடல் காண்பாம்.

**குருதுதி** (வெண்பா)

''உன்னருள் இல்லையேல் உண்ணும் உணவுண்டோ
உன்னருள் இல்லையேல் ஓதலெங்கே – உன்னருள்
இவ்வளவும் செய்வித்தும் ஏழை யுணர்ந்திலனே
பவ்வநேர் தேசிகநீ பார்''.

அடுத்து, அடிகளார் இயற்றிய 'திலகவதி அம்மையார் துதி' என்னும் சிறு நூலிலிருந்து மாதிரிக்கு ஒரு பாடல் நோக்குவோம்.

**திலகவதி அம்மையார் துதி**

(எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

''கதிதனை அடைய வனந்தனை அடைவர்
கடலொடு கலந்துமேம் பட்ட

நதிதனை யடைவர் மலையினை அடைவர்
நானிலம் வலம்வரு வார்கள்
விதியிது என்னைப் பலபல செய்வர்
விளங்கநான் இவையெலாம் செய்யேன்
அதிகைவாழ் திலக வதிப்பெயர் அம்மை
அடைவனே நீகதி யாக''—

அடிகளாரின் செய்யுள் யாக்கும் திறனுக்கு இப்பாடல்களே போதுமான சான்றுக ளாகும்.

மற்றும், அடிகளார், திருப்பாதிரிப் புலியூர்ப் புராணம், திருப்பாதிரிப் புலியூர்த் தோத்திரக்கொத்து, அற்புதத் திருவந்தாதி முதலிய நூல்களை அச்சில் பதிப்பித்த பதிப்பாசிரியராகவும் விளங்கியுள்ளார்.

**கந்தர் சஷ்டிச் சொற்பொழிவுகள்**

ஞானியார் அடிகளாரின் ஒரு வரிசைச் சொற்பொழிவுகள் முத்து. இராசாக் கண்ணனாரால் நூல் வடிவம் பெற்ற 'கந்தர் சஷ்டிச் சொற்பொழிவுகள்' என்னும் நூல் பற்றி ஒரு சிறிது காண்போம்;

1941 -ஆம் ஆண்டு ஐப்பசித் திங்கள் கந்தர் சஷ்டி நாட்களில் அடிகளார் ஆற்றிய ஐந்து சொற்பொழிவுகளின் தொகுப்பு இது. அடிகளாரின் ஒப்புதலுடன் இராசாக் கண்ணனார் நூல் வடிவம் தந்தார். இந்நூலின் முகப்பில் அடிகளாரின் ஒப்புதல் அச்சிடப்பட்டுள்ளது. அது வருக:-

உ
சிவமயம்

சிவ சண்முக மெய்ஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க.
திருக் கைலாய பரம்பரை, திருக்கோவலூ ராதீனம்,

ஸ்ரீமத் ஞானியார் மடாலயம்
சந்நிதி வீதி
திருப்பாதிரிப் புலியூர்

''நாங்கள் (அடிகளார்) விசு ஐப்பசியில் கந்தர்

சஷ்டித் திருவிழாவில், மடாலயத்தில், ஐந்து நாட்களிலும் செய்த சொற்பொழிவுகளைக் கேட்ட திரு. இராசாக் கண்ணு முதலியார் சொற்பொழிவுகளைச் செய்யும் வேளையிலேயே எழுதி வந்தனர். அவற்றை அச்சிடல் வேண்டும் எனக் கருதினர். அச்சிட்டவற்றைப் பார்த்தோம். நாங்கள் பேசினவையே பெரும்பாலும் ஒத்திருக்க எழுதப் பட்டிருக்கின்றன. இம்முயற்சி யொரு நல்ல முயற்சியே; பலர்க்கும் பயன்படலாம் என எண்ணுகின்றோம். இவரது நன்முயற்சி மேன்மேலும் ஓங்குக. இவரும் நலம் பல பெற்று வாழ்க.

(தற்போ திருப்பு) இங்ஙனம்
திருவண்ணாமலை கைஒப்பம்
7-12-'41. ஞானியார் மடாலயம்

இச் சொற்பொழிவு நூலின் சிறப்பை, முது பெரும் புலவராய்த் திகழ்ந்த ந.மு. வேங்கடசாமி நாட்டார் இந் நூலுக்கு அளித்துள்ள அணிந்துரையாகிய கருத்துரையைக் கொண்டு அறியலாம். அது வருக:-

**கருத்துரை**

கரந்தைப் புலவர் கல்லூரியின் தலைவராகிய நாவலர் பண்டித திரு ந.மு.வேங்கடசாமி நாட்டாரவர்கள் எழுதியது.

தமிழ் நாட்டிலே கல்வியிலும் சொல்வன்மையிலும் மக்களை நல்வழிப்படுத்தும் தவநெறி யொழுக்கத்திலும் இஞ்ஞான்று தலைசிறந்து விளங்கும் பெரியார் திருப் பாதிரிப் புலியூர் திரு ஞானியார் மடத்தின் தலைவராகிய மறைத்திரு. ஞானியாரடிகள் என்பதனை அனைவரும் அறிவர். ஏறக் குறைய அரை நூற்றாண்டின் மேலாக நாடெங்கணும் உலாப்போந்து தமது பொருள் நிறைந்த சொல்மாரிகளால் மக்கள் உள்ளத்தைக் குளிர்வித்து வரும்

அவ்வருள் ஞானக் கொண்டலுக்கு உலகம் ஆற்றத் தக்க கைம்மாறும் உளது கொல்? நூற்றுக் கணக்கான தலைப்புக் களில் அடிகள் ஆற்றியுள்ள சொற்பொழிவுகளெல்லாம் எழுத்துரு வெய்தி நூல் வடிவில் வெளியிடப் பெறுமேல், அவை தமிழின் ஒப்பற்ற உரைநடை இலக்கியங்களாகத் திகழும் என்பது ஒருதலை. பல ஆண்டுகளாக மெய்யன்பர் பலரால் எதிர்பார்க்கப் பெற்றது இப்பணி...

எடுத்துக் கொண்ட பொருளை வகுத்தும் விரித்தும் விளக்குதல், அவற்றிற்குத் தென்மொழி வடமொழிகளி லுள்ள உயரிய நூல்களிலிருந்து இன்றியமையா மேற்கோள் காட்டுதல், பலரும் அறியும் உவமைகளால் பொருளை விளங்கவைத்தல், உலக நடையுடன் சிறந்த நீதிகளை உளங்கொளச் செய்தல், சாத்திர நுணுக்கங்களை வரலாற் றோடு இயைவித்துத் தெளிவுறுத்தல், இடையிடையே எழுத்து - சொல் - பொருள் இலக்கண அமைதிகளும் குறிப்புப் பொருள் - அணி முதலியனவும் காட்டிச் செல்லுதல், மொழிப் பொருட் காரணம் தெரிவித்தல் - என்று இன்னோரன்ன சிறப்புக்கள் கற்போர் உள்ளத்தில் பசுமரத் தாணிபோல் பதியுமாறு இவற்றின்கண் அமைந் துள்ளன. செய்யுட்கட்கு உரை விரிக்கும் அடிகளின் போற்றலை, 'தோற்றம்' என்னும் கட்டுரைக்கண் 'மறை களின் முடிவால்' என்னும் செய்யுட்கு எழுதிய விரிவுரையே நன்கு புலப்படுத்தும்.

எனவே, இவற்றைக் கற்போர் இலக்கிய அறிவே யன்றி, இலக்கணப் பயிற்சி, உலகியலறிவு, தத்துவ உணர்வு, கடவுள் மாட்டன்பு முதலிய பல வகை நலங் களும் பெறுவர் என்பது உண்மை - உண்மை.

கரந்தை, ந.மு. வேங்கடசாமி நாட்டார்
18-12-1941.

இவ்வளவு சிறப்புடைய இச்சொற்பொழிவு நூலின் முதல் ஒரு பக்கச் செய்திகளை மட்டும் மாதிரிக்காக இனிக் காண்பாம்;

**க. தோற்றம்**

**காலா தீதன்:**

"மெய்யன்பர்களே!

கிடைத்தற் கரிய மனிதப் பிறவியை எடுத்துள்ள நாம் காலத்துக்குட் பட்டிருக்கின்றோம். காலம் என்பது ஒரு தத்துவம். சிவாகமங்களில் கூறியாங்கு, அது, மாயையில் - அசுத்த மாயையில் தோன்றுகின்றது. தத்துவங்கள் மூவகையின. அவை, ஆத்துமதத்துவம் - வித்தியா தத்துவம் - சிவதத்துவம் எனப்படும். அவை முறையே 24 ஆம்-7 ஆம்-5 ஆம் மூன்றும் முப்பத்தாறு என்க. இம் முப்பத்தாறு தத்துவங்களுக்கும் மக்களாகிய நாம் அடங்கிக்கிடக் கின்றோம். இவற்றைக் கடந்து நிற்பவன் கடவுள். இத் தத்துவங்கள் அறிவற்றன. நாம் அற்ப அறிவினை யுடையோம்; ஆதலின் இவற்றிற்குக் கட்டுப்பட்டு வாழ்கின்றோம். முற்றறிவினனாகிய முழுமுதற் கடவுள் பொதுவாக முப்பத்தாறு தத்துவங்களுக்கும், சிறப்பாகக் காலத்திற்கும் அப்பால் இருக்கின்றான், அவன் பெயர்களில் ஒன்று, கால காலன் என்பது. அத்தொடருக்கு இருவகைப் பொருள்கள் உள: சாத்திர விற்பத்தி(நூற்பொருள்) - சரித்திர விற்பத்தி (வரலாற்றுப் பொருள்) என. முன்னதின்படி காலம் என்ற தத்துவத்தைக் கடந்தவன் என்க. பின்னதின்படி எமனுக்குப் பகைவன் என்க. 'இக்கருத்தினை வலியுறுத்தும் மற்றொரு பெயர் 'காலாதீதன்' (காலங் கடந்தவன்) என்பது.

நாம் செய்ய வேண்டுவது காலத்தை யொட்டிக் காலத்தை வெல்வதே. கண்ணுடைய வள்ளலாரால் இயற்றப்பட்ட ஒழிவிலொடுக்கத்தில், 'தத்துவக் கழற்றி'

என்பது ஒரு பகுதி. அதன் பொருள் தத்துவத்தைக் கழற்றித் தள்ளுதல் வேண்டும் என்பதே. பிரபுலிங்க லீலையிலும் சிவப்பிரகாசர், மயங்குவதையே இயற்கையாகப் பெற்ற தத்துவங்களையெல்லாம் நீக்கவேண்டும் என்பார் – "தத்துவம் முற்றும் மயங்குவன தள்ளி" என்றனர்.

இக் காலத்தை நாம் வெல்வ தெப்படி? இறைவன் இரக்கம் இயையின் நாம் வெல்லுதல் கூடும். "என்னை இப்பவத்தில் சேரா எடுத்து" என்பது அருணந்தி சிவாசாரியாரது சிவஞான சித்தியார்.

இது அடியார் சொற்பொழிவின் தொடக்கப் பகுதியாகும்.

# 9. மாணாக்கர் பட்டாளம்

ஞானியார் அடிகளாரிடம் புலிசை அருளகத்திலேயே பாடங் கேட்டவர்கள் நூற்றுக்கணக்கானவர்கள். அவர் சென்று தங்கிய ஊர்களில் எல்லாம் பாடங்கேட்டவர்கள் பற்பலராவார். அனைவர் பெயர்களையும் திரட்டிச் சொல்லுதல் அரிது. வெளியூர்களில் பாடம் கேட்டவர்களை எல்லாம் அறிய முடியாது என்பது மட்டு மன்று; உள்ளூரில் பாடம் கேட்ட நூற்றுக் கணக்கானவர்களையும் இனங் கண்டு இன்னார் – இன்னார் என்று குறிப்பிட இயலாது. ஞானியார் சுவாமிகள் என்னும் ஆழ்ந்து பரந்த நீர் நிலையில் நீர் பருகியும் நீராடியும் பயன் பெற்றோர் ஒரு சிலரை மட்டுமே ஈண்டு குறிப்பிட இயலும்.

திருமுருக கிருபானந்த வாரியார் ஒரு சொற்பொழிவில் தாம் புலிசை ஞானியார் அடிகளாரிடம் பாடம் கேட்டிருப்பதாகக் கூறினார். சென்னை சட்ட மன்றத் தலைவரா

யிருந்த செய்யாறு புலவர் கா. கோவிந்தனும் ஒரு சொற்பொழிவில் தாம் ஞானியாரிடம் பாடம் கேட்டுள்ளதாக அறிவித்தார்.

காஞ்சி க. வச்சிரவேல் முதலியாரும் இத்தகையவரே என் இளமைக் காலத்தில் பெண்மணி ஒருவர் புலிசை அருளகத்தில் பாடங் கேட்டுப் புலவரானார்; அவர் பெயர் நினைவில்லை. கிறித்துவக் கன்னிமார்கள் சிலர் வந்து இலக்கணப் பாடம் கேட்டுள்ளனர். மாவட்டத் துணை ஆட்சியாளராக (டெபுடி கலெக்டர்) இருந்த அரங்கசாமி முதலியாரின் மனைவியாராகிய க.ர. ஆதிலட்சுமி அம்மையார், அடிகளாரிடம், கந்தரனுபூதி, திருப்போரூர்ச் சந்நிதி முறை முதலிய நூல்களைப் பாடம் கேட்டுள்ளார். அடிகளார் கூறிய குறிப்புரைகளுடன் கந்தரனுபூதியையும் திருப்போரூர்ச்சந்நிதிமுறையையும் வெளியிட்டுள்ளார்கள்.

மற்றும், புலிசையைச் சேர்ந்த இரத்தினவேல்பிள்ளை, இராசேசுவரம் பிள்ளை, பால சுப்பிரமணிய முதலியார், பு.ர. சுவாமிநாத முதலியார், அரங்கைய பத்தர், பு.வே. தேவராச முதலியார், சந்நிதி வீதி திருநாவுக்கரசு நாயகர், முதலியோரும், கிழக்கு மருதூர் சி. நாராயண சாமி நாயுடுவும், நெல்லிக்குப்பம் பாலசுந்தர நயினாரும் வண்டிப் பாளையத்தைச் சேர்ந்த சாமிநாத முதலியார், தோணி கந்தசாமி முதலியார், உருத்திர சாமி ஐயா முதலியோரும், இன்னும் யான் அறியாத பற்பலரும் புலிசை அருளகத்திலேயே பாடம் கேட்டவராவர்.

அடிகளாரின் புலிசை அருளகத்தில் பாடம் கேட்டு, உயர்நிலைப் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் பல்கலைக் கழகங்களிலும் பணி ஆற்றிய - ஆற்றிக் கொண்டிருக்கின்ற புலவர் பெருமக்களின் பெயர்களையும் பணியிட ஊர்களின் பெயர்களையும் யான் அறிந்த வரையும் கீழே தருகிறேன்:

திருவாளர்கள் - ப.கந்தசாமி ஐயா - திருச்சிராப்பள்ளி, ந. ஆறுமுக முதலியார் - விழுப்புரம், அ. நடேச முதலியார் - அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அ. தண்டபாணி முதலியார் - சங்கம், க. முருகேச முதலியார் - அரியலூர், முத்து. இராசாக் கண்ணனார். சென்னை, இரா. பழநியாண்டி முதலியார் - கூடலூர், சங்கர ஐயர் - கடலூர், சக்கரபாணி நாயகர் - சிந்தாதிரிப் பேட்டை, சுந்தர, சண்முகனார் - புதுச்சேரி, ஆ. சிவலிங்கனார் - மயிலம், க. செந்தில்நாயகம் - திருச்சி, மா. தண்டபாணி - பெரம்பூர், சு. முத்தையன் - நெல்லிக்குப்பம் பா.செந்தில் நாயகம் - நெல்லிக்குப்பம், க.பா. வேல்முருகச் செட்டியார் - திருக்கோவலூர், அ முருகையன் - சிங்கப்பூர், க. சம்பந்தனார் - கூடலூர், ந. தண்டபாணி - கூடலூர் ந. கருணானந்தனார் - திருப்பாதிரிப் புலியூர், ந. ஆறுமுகம் - குன்றத்தூர், ந. திருநாவுக்கரசு - உளுந்தூர்பேட்டை பா. ஏகாம்பரம் - செங்கல்பட்டு, ப. திருநாவுக்கரசு - கும்பகோணம், வை. இரத்தினசபாபதி - சென்னைப் பல்கலை, துரை. ஆறுமுகம் பிள்ளை - மஞ்சக் குப்பம், அ. வைத்திய நாதன் - விழுப்புரம் முதலியோராவார்.

இவர்களேயன்றி, பெருமழைப் பேச்சாளர் மணம் பூண்டி ம. ரா குமாரசாமிப் பிள்ளை அடிகளாரின் தலை மாணாக்கராவார். இவர் அடிகளார்க்குத் தொண்டுகள் பல புரிந்தும் கழகங்கள் பல கண்டும் சொற்பொழிவுகள் பல ஆற்றியும் அடிகளாரின் பெருமைகளைக் குறிப் பிட்டுப் பெருமை சேர்த்தவர். பி.எஸ். வடிவேல் பிள்ளை முதலானோரும் இத்தகையவர்களே. வண்டிப் பாளையம் உருத்திரசாமி ஐயா அவர்களும் தலைமாணாக்கருள் ஒருவராகக் குறிப்பிடத் தக்கவராவார்.

# 10. வருகை புரிந்த ஊர்கள்

ஞானியார் அடிகளார் தம் வாழ்நாளில் வழிபாட்டிற் காகவும் சொற்பொழிவிற்காகவும் வருகை புரிந்த (சென்று வந்த) ஊர்களின் பட்டியலை நோக்கின் அடிகளாரின் பெருஞ்சிறப்பு விளக்கும். அந்தப் பட்டியல் வருமாறு:-

திருவதிகை, திருமுதுகுன்றம் (விருத்தாசலம்) பெண்ணாகடம், சிதம்பரம், திருநாரையூர், காட்டு மன்னார் கோயில், ஓமாம்புலியூர், கானாட்டு முள்ளூர், சீர்காழி, சிவபுரி, வைத்தீசுவரன் கோயில், திருமயிலாடு துறை, வடமட்டம், வேத மடம், திருநல்லம், திருவீழி மிழலை, திரு மருகல், திருமலை ராயன் பட்டினம் திருத் தெளிச்சேரி, காரைக்கால், திருநள்ளாறு, மஞ்சக் கொல்லை, திருவாரூர், வேதாரணியம் (திருமறைக்காடு), குடவாசல், திருவாஞ்சியம், (தஞ்சை மாவட்டக்) குற்றாலம், திருவிடை மருதூர், திருநாகேசுரம், திரு புவனம், குடந்தை (கும்பகோணம்), திருக்கோட்டையூர், தாதம் பேட்டை பழூர், இன்னம்பர், தஞ்சாவூர், கருந் தட்டான்குடி, திருக்கண்டியூர், திருவையாறு, திருநெய்த் தானம், திருவேதிகுடி, திருப்பூந் துருத்தி, திருக்காட்டுப் பள்ளி, அடைஞ்சூர், இருங்காடு, திருச்சிராப்பள்ளி, கற்குடி, பூவாளூர், லால்குடி, உறையூர், திருப்பாச்சிலாச்சிரமம், திருவானைக்கா, குளித்தலை, அரசன்குடி, தென்னூர், புதுக்கோட்டை, பலவான்குடி, வைரவன் கோயில், குன்றக் குடி, மேலைச் சிவபுரி, கீழைச் சிவபுரி, கோனாப் பட்டு, சொக்கலிங்கபுரம், இராமச் சந்திரபுரம், அரிமழம், காரைக் குடி, தேவகோட்டை, திருக்கானப்பேர், தொண்டி, இராமநாதபுரம், இராமேசுவரம், உத்தரகோச மங்கை, சாயர்குடி, தூத்துக்குடி, திருச்செந்தூர், குலசேகரப் பட்டினம், உடன் குடி, ஆற்றூர், ஆறுமுக மண்டலம்

திருவெள்ளூர், திருநெல்வேலி, திருப்புடை மருதூர், அம்பா சமுத்திரம், கல்லிடைக் குறிச்சி, விக்கிரம சிங்கபுரம், திருநல்லூர்ப் பெருமணம். திருவேட்டக்குடி, திலதைப்பதி, கோடிக்கரை,கோட்டூர், திருக்காறாயில்,குடவாயில், அச்சுத மங்கலம், கோட்டாறு, பெருவளம், வடசேரி, வடுவீச்சுரம், களக்காடு, கடையம், தென்காசி, (நெல்லை மாவட்டக்) குற்றாலம், தென் இலஞ்சி, புளியன்குடி, சங்கர நாராய ணன் கோயில், கழுகுமலை, சாத்தூர், விருதுப்பட்டி, மதுரை, திருப்பரங்குன்றம், விராலி மலை, பழனி - திரு வாவினன் குடி, வைகல் மாடக்கோயில், செஞ்சி, கள்ளக் குறிச்சி, சின்ன சேலம், (பக்கத்து) ஆற்றூர், சேந்த மங்கலம், ஈரோடு, அவிநாசி, பேரூர், கோவை, திருவெண் ணெய் நல்லூர், கண்டாச்சிபுரம் (கண்டராதித்த புரம்), திருநாவலூர், திருவாமூர், திருக்கோவலூர். அறையணி நல்லூர், மணம் பூண்டி, திருவண்ணாமலை, செய்யாறு, வேலூர், திருவோத்தூர், ஆரணி, குடியேற்றம் (குடியாத் தம்), ஆம்பூர்,உத்திர மேரூர், செங்கல்பட்டு, காஞ்சிபுரம், சென்னை, கோவூர், காவித்தண்டலம், புதுச்சேரி, கூடலூர், நெல்லிக்குப்பம், வண்டிப் பாளையம், முருகேச நகர் (புரூக்ஸ் பேட்டை)திருவயிந்திரபுரம், மஞ்சக் குப்பம், வடலூர் - இன்ன பிற - இன்ன பிறவாம். தென் குரங் காடு துறை, கஞ்சனூர், குடந்தைக் காரோணம்.

தென் குரங்காடுதுறை, கஞ்சனூர், குடந்தைக் காரோணம், தென்குடித் திட்டை, திருவாலம் பொழில், திருமூக்கீச்சுரம், திருநெடுங்களம், வாலியம்பட்டி, சங்கம், போரூர், கொடுங்குன்றம், திருப்பெருந்துறை, திரு வாடானை, திருப்புனவாயில். சுசீந்தரம், திருகருகாவூர், வடமகாதேவமங்கலம், சூளை, தியாகராயநகர், மயிலாப் பூர்-இன்ன பிற-இன்னபிறவாம்.

# 11. வெள்ளணி விழாக்கள்

வெள்ளணி விழா என்பது பிறந்த நாள் விழாவைக் குறிக்கும். நாண் மங்கலம் (நாள் மங்கலம்) என்றும் இதனைக் கூறுவது உண்டு.

**மணிவிழா**

ஞானியார் அடிகளாரின் அறுபதாண்டு நிறைவு மணி விழாவும் அறுபத்தோராவது பிறந்தநாள் விழாவும் திருமுக (ஸ்ரீ முக) ஆண்டு வைகாசி மூல(1933-மே) நாளில் சிறப்புற நடைபெற்றன. மகாமகோ பாத்தியாய பண்டித மணி மு.கதிரேசச் செட்டியார் தலைமை தாங்கினார். வழக்கமான பேரறிஞர்களும் பெரும்புலவர்களும் கலந்து கொண்டு சொற்பொழிவாற்றி அடிகளாரை வாழ்த்தியும் அடிகளாரின் வாழ்த்தைப் பெற்றும் மகிழ்வு எய்தினர். அறிவு ஞாயிறாம் அடிகளார், அவ்விழாவின்போது, தம் அருளகத்திலேயே ஒரு கல்விக் கூடம் திறந்து தமிழ்க்கல்விக் கதிர் எங்கும் பரவ ஏற்பாடு செய்தார். பள்ளியின் வளர்ச்சிக்காகப் பத்தாயிரம் உருபா முதல் பொருளும் வைத்தார். அப்பள்ளியில் நூற்றுக்கணக்கான மாணாக்கர் கள் சேர்ந்து பயின்று புலமை பெற்றார்கள். அவர்களுள் அடியேனும் (சு.ச.) ஒருவன்.

மற்றும், அவ்விழாவில், கரந்தைத் தமிழ்ச் சங்கம் கண்டு தலைமை தாங்கி நடத்திப் பல கல்வி நிறுவனங் களும் தோற்றுவித்த த.வே. உமாமகேசுவரம் பிள்ளை யின் தமிழ் வளர்ச்சியைப் பாராட்டி அவருக்கு அடிகளார் 'செந்தமிழ்ப் புரவலர்' என்னும் சீர்மிகு பட்டம் வழங்கிச் சிறப்பித்தார், விழாவின் நினைவாக, தமிழ் வளர்க்கும் சில இதழ்களின் (பத்திரிகைகளின்) வளர்ச்சிக்காகப் பொருளுத வியும் புரிந்தார் அடிகளார். தாம் தொடங்கிய கல்விச்

சாலைக்கு உருத்திரசாமி ஐயா அவர்களைத் தலைமை ஆசானாக அமர்த்தித் தமிழ்ப் புலவர் பட்டம் பெறுதற்கு உறுதுணையாகப் பலர்க்குத் தமிழ்க் கல்வி கற்பிக்கச் செய் தார் அடிகளார். அங்கே அரும்பி மலர்ந்து வெளியூர்களில் மணம் வீசிக்கொண்டிருக்கும் புலவர் பெருமக்கள் பல ராவர்.

## நூற்றாண்டு விழா

17-5-1873 ஆம் நாள் பிறந்த ஞானியார் அடிகளார் 69 - ஆம் அகவையில் ஊனுடல் துறந்தார். அதன்பின், அவர் பிறந்து நூறாண்டு நிறைந்த நாளாகிய - பிரமாதீச ஆண்டு - வைகாசி - 7 - மூல நாளில் - அதாவது - 20-5 -1973 ஆம் நாளில் அடிகளாரின் நூற்றாண்டு விழாக் கொண்டாட, அடிகளாரின் அன்பர்களாலும் மாணாக்கர் களாலும் 'நூற்றாண்டு விழாக்குழு' அமைக்கப் பெற்றது.

சென்னை முத்து இராசாக் கண்ணனார், விழுப்புரம் ந. ஆறுமுக முதலியார், வண்டிப் பாளையம் அ. நடேச முதலியார், சிதம்பரம் க. வெள்ளைவாரணனார், கிழக்கு மருதூர் கி. நாராயணசாமி நாயுடு, புலிசை க. வேல் முருகன், கூடலூர் இரா. பழநியாண்டி முதலியார், மயிலம் ஆ. சிவலிங்கனார், புதுச்சேரி சுந்தர. சண்முகனார் கூடலூர் க. சம்பந்தனார், வண்டிப் பாளையம் ந. தண்ட பாணி, புலிசை ந. கருணானந்தனார், குடந்தை திருநாவுக் கரசு, நெல்லிக்குப்பம் பா. செந்தில் நாயகம், புலிசை வள்ளி விலாஸ் உரிமையாளர் குடும்பத்தினர், சிதம்பரம் பு.ர. சுவாமிநாத முதலியார், புலிசை ஞானியார் அருள கத்தைச் சேர்ந்தவர்கள் - முதலியோர் நூற்றாண்டு விழாக் குழுவில் பங்கு கொண்டு பணி புரிந்தனர்.

நூற்றாண்டு விழாவை ஒரு வாரம் நடத்துவதென்றும், விழா நினைவாக ஒரு தமிழ்க் கல்லூரி அமைப்பது

என்றும் முடிவு செய்யப்பெற்றது. செயலாற்றப் பொருள் வேண்டுமே. பல ஊர்கட்குச் சென்று பொருளுதவி பெறப் பட்டது. நான் மட்டும் (சுந்தரசண்முகம்) புதுச்சேரியில் சுமார் ஐயாயிரம் உருபா பெற்றுத்தந்தேன். விழா சிறப் புற நடைபெறத் தொடங்கியது.

திருமுருக கிருபானந்த வாரியார், குன்றக்குடி அடிக ளார், நீதிபதி எஸ். மகராசன், வ.சுப. மாணிக்கம், டாக்டர் ந. சஞ்சீவி, டாக்டர் சி. பாலசுப்பிரமணியம், புலவர் க. கோவிந்தன் முதலிய அறிஞர் பெருமக்கள் பலர் தலைமை தாங்கியும் சொற்பொழிவாற்றியும் விழாவைச் சிறப்பித்தனர்.

விழாவின் ஒரு கூறாக, ஞானியாரின் மாணாக்கர் ஒருவர் இயற்றிய ஒரு நூலின் வெளியீட்டு விழாவும் நடத் துவதெனத் தீர்மானிக்கப்பட்டபடி யான் (சுந்தரசண்முகம்) இயற்றிய ''தமிழ்நூல் தொகுப்புக்கலை'' என்னும் நூல் வெளியிடப்பட்டது. மற்றும் புலவர் க. வேல்முருகன் எழுதிய ஞானியார் வரலாற்றுக் குறிப்பு நூலும் அச்சிட்டு வழங்கப் பெற்றது.

சிவத்திரு ஞானியார் செந்தமிழ்க் கல்லூரி அமைப்புக் குழு என்னும் ஒரு குழு அமைக்கப்பெற்றது. கல்லூரி தொடங்கப் பெற்றது. அதன் முதல்வராகப் பேராசிரியர் முத்து. இராசாக் கண்ணனாரும், பேராசிரியராக ஆ. சிவலிங்கனாரும் அமர்த்தப் பெற்றனர். அந்தக் கல்லூரிக் குழு இன்றும் இருக்கிறது. ஆனால் கல்லூரி இன்று இல்லை. சென்னைப் பல்கலைக் கழகத்தின் புலவர் கல்லூரி தொடர்பான விதிமுறை மாற்றத்தினாலும் போதிய பொருள் இன்மையாலும் கல்லூரி நடைபெற வில்லை. சில ஆண்டுகள் இயங்கியதோடு கல்லூரி மூடப் பட்டது.

ஞானியார் அடிகளின் பிறந்தநாள் விழா நூற்றாண்டு விழாவோடு நின்றுவிட வில்லை. தொடர்ந்து இன்று வரையும் ஆண்டு தோறும் பிறந்தநாள் விழா பல சொற்பொழிவுகளுடன் சிறப்பாகக் கொண்டாடப் பெறுகிறது. 1985-ஆம் ஆண்டு நடைபெற்ற ஞானியார் அடிகளாரின் பிறந்த நாள் விழாவில், எனது (சுந்தரசண்முகத்தின்) 'கெடில வளம்' என்னும் நூல் வெளியிடப் பெற்றது; எனக்கு 'ஆராய்ச்சி அறிஞர்' என்ற பட்டமும் பதக்கமும் பாராட்டுரையும் வழங்கப் பெற்றன. இனியும் ஆண்டு தோறும் அடிகளாரின் வெள்ளணி விழா தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருக்கும்.

# 12. பொன்விழா

பொன்விழா என்றால் ஐம்பது ஆண்டு நிறைவு விழாவைக் குறிக்கும். முதலில் அறுபதாண்டு, நிறைவாகிய மணி விழாக் குறிப்பிட்டு விட்டு, பின்னர் ஐம்பது ஆண்டு நிறைவாகிய பொன் விழாவைக் குறிப்பிடலாமா-எனப் பலரும் எண்ணக் கூடும். இது, இங்கே, அடிகளார் பிறந்து ஐம்பது ஆண்டு நிறைந்த பொன் விழாவைக் குறிப்பிட வில்லை. அடிகளார் துறவு கொண்டு அருளாட்சி ஏற்று ஐம்பது ஆண்டு நிறைந்த பொன் விழாவைக் குறிப்பதாகும்.

அடிகளார் 29-11-1889 ஆம் நாள் அருட்குரவராகப் பட்டம் ஏற்றார். அதற்கு ஐம்பதாம் ஆண்டாகிய 1939 ஆம் ஆண்டின் நவம்பர் 18, 19 ஆம் நாள்களில் ஞானியார் அருளகத்திலேயே பொன் விழா நடத்த, அன்பர்களும் மாணாக்கர்களும் கூடி ஏற்பாடு செய்தனர்.

முதல் நாள் காலை அடிகளாரை இறைவனாகவே கற்பனை செய்து கொண்டு, அன்பர்களும் மாணாக்கர் களும் அடிகளாரைத் திருமுழுக்கு ஆட்டிப் பூசனையும் புரிந்து வழிபட்டனர். 'முருகன் திருவிளையாடல்' என்னும் தலைப்பில் அடிகளார் சொல்லமிழ்து பொழிந்தார்.

மாலையில் விழாக் கூட்டம் தொடங்கியது. இலக்கியத் திறனாய்வு செய்வதில் வல்லவரும் 'இரசிகமணி' என்னும் பட்டம் பெற்றவரும் டி.கே.சி. எனச் சுருக்கமாகச் பெயர் வழங்கப் பெறுபவரும் ஆகிய டி.கே. சிதம்பரநாத முதலியார் தலைமையில் கூட்டம் நடைபெற்றது, அறிஞர் பலர் சொற்பெருக்காற்றினர். டி.கே.சி. வழங்கிய புகழொலி அரங்கம் முழுதும் நிறைந்து ததும்பியது. வெளியூர்களிலிருந்து வந்த பாராட்டுரைகளும் வாழ்த் துரைகளும் குன்றெனக் குவிந்திருந்தன.

இரண்டாம் நாள் காலை பன்மொழிப் புலவர் தெ.பொ. மீனாட்சி சுந்தரம் பிள்ளை தலைமை தாங்க, சொற்பொழிவுகள் பெருக்கெடுத்தன. விழாவில். 'தோத்தி ரக் கொத்து', அடிகளாரின் குறிப்புரையுடன் கூடிய 'கந்த ரனுபூதி' என்னும் நூல்கள் வெளியிடப் பெற்றன. மற்றும், சேலம் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியராய் விளங்கிய ஆந்திரக் காசியப அந்தணர் என்பவர் அடிகளார்மீது இயற்றிய "ஆசான் ஆற்றுப் படை" என்னும் நூல் அரங்கேற்றம் செய்யப் பெற்றது, அடிக ளாரின் பெருமையை அந்நூலில் பரக்கக் காணலாம்.

மாலையில் பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாரின் தலைமையில் விழா நடைபெற்றது. பெரும் புலவர்களாகிய ந.மு. வேங்கடசாமி நாட்டார், ச.சச்சிதானந்தம் பிள்ளை முதலியோர் சொற்கொடை நல்கினர். விழாவின் தொடர் பாக, சைவமும் தமிழும் வளர்க்கும் சில இதழ்களுக்கு (பத்திரிகைகட்டு) நன் கொடைகள் அனுப்பப் பெற்றன.

மிகுந்த மழையினால் போக்கு வரவு தடைபட்டதால் இன்றியமையாத பெரியோர்கள் பலர் நேரில் வந்து விழா வில் கலந்துகொள்ள முடியாமையால் வாழ்த்துத் தந்தி களும் கடிதங்களும் அனுப்பியிருந்தனர். அவர்களுள், ஈ.வே. இராமசாமி, பி.டி. இராசன், த.வே: உமாமகேசு வரனார், திவான் பகதூர் டி.எம் நாராயணசாமி பிள்ளை, யாழ்ப்பாணம் நடேசப்பிள்ளை முதலியோர் குறிப்பிடத் தக்கவராவார்கள்.

இப்பொன்விழா தொடர்பான வாழ்ந்துப் பாக்களும் பாராட்டுக் கட்டுரைகளும் பல இதழ்களில் வெளிவந்து 'தமிழ் கூறும் நல்லுலகிற்கு அடிகளாரின் பெருமையைப் பரப்பின. இவற்றுள், சென்னைத் துணை மாவட்ட ஆட்சித் தலைவராயிருந்த கே. கோதண்டபாணி பிள்ளை, கல்கி' ரா. கிருஷ்ணமூர்த்தி முதலியோரின் பாராட்டுக் கட்டுரைகள் மிகவும் குறிப்பிடத் தக்கவை. கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி ஆனந்த விகடன் இதழில் பல பக்கங்கள் பாராட்டி எழுதி இருந்தார். பேராசிரியர் முத்து. இராசாக் கண்ணனார் 'சித்தாந்தம்' இதழில், விழாபற்றிய குறிப்புரை வெளியிட்டார். கூடலூரில் உயர் பதவி ஏற்றிருந்த சு. நடராசன் என்பவர் 'தமிழ் அணங்கு' என்னும் இதழில் எழுதி அந்த இதழுக்குப் பெருமை சேர்த்தார். அவற்றின் சுருக்கம் வருமாறு:-

**சித்தாந்தம்:**

சென்னை, டிப்டி கலெக்டர், ராவ் சாகிப், கே. கோதண்டபாணி பிள்ளையவர்கள் எழுதிய கட்டுரை.

**ஞானியார்:**

"இச்சிறு சொற்பெரும் பொருட் பெயர் தாங்கிய அடிகளைத் தமிழ்நாடு நன்குணரும். இவர் இயற்றும் தமிழ்த்தொண்டினைப் போற்றுவோர் பலர். இவர்

புலமையைப் புகழும் புலவர் பலர். இவர் நல்லுரை கேட்டு நலமுறுவார் பலர். சிறிதேனும் இப்பெரியார்பாற் கண்டன சில எழுதலுற்றேன்.

இச் சிற்றுரையை நீங்கள் உணரத் தொடங்குமுன் உங்களை ஒன்று வினவ விரும்புகின்றேன். இச்சிற்றுரையின் தலைப்பையே வினாவாக்கிக் கொள்வீர்களாக. ஞானி - யார்? இக்காலத்தில் நம் நாட்டில் ஞானம் உடையவர் யார்?யார் உளர்? வீடு பயக்கும் உணர்வினையுடையார் அல்லது தருவார் யார், யார் உளர்? அன்பு நெறியிலும் அறிவு நெறியிலும் திளைப்பவர் யாவர் உளர்? எங்கெங் குத்தேடினும் அடிகளன்றி யாருளர் காண்போம். ''சான்ற கொள்கைச் சாயா யாக்கை ஆன்றடங் கறிஞர்'' அடிக ளன்றி யாருளர்? தேர்ந்து அறிந்து தெரிவிப்பீராக! .. இவர் புதுமையை அறவே நீக்கிப்பழமையிற் பழுத்த பழை யர் போலும்! இவர்பால், புதியன புகுந்தார் போற்றும் உரையும் செயலும் காண்பது எங்ஙனம் என ஐயுற்றேன். ஐயம் தெளியுமாறு தேடி நின்றேன். சிறிது பொழுதில் இப்பெருமான் ஒரு சொற்பொழிவாற்றுவர் எனக் கூறினர் சிலர். அடிகளின் சொல்லுரை கேட்டுத் துணிதலே நலம் எனத் துணிந்திருந்தேன்.

சொல்மழை தொடங்கிற்று. முதுநீர் நிலையிற் புதுநீர் சேர்ந்தது. புரண்டெழுந்தது வெள்ளம். அன்பு நெறியை அளாவிற்று. அறிவு நெறியும் புக்கது. அலைகள் சுமந்தன அறிவும் செறிவும். கலையின் நிறைவு நுரையின் மிதந்தது. சுவையும் கனிவும் சுழித்திருத்தன. வெள்ளத்துள் ஆழ்ந் தேன் யாண் டொளித்ததோ என் ஐயம்! என்னை மறந். தேன் - மிதந்தேன். இறுதியில் தன் நினைவு சிறிது முளைத் தது. என்னுடனிருந்தார் எண்ணிலார், என்னாயிரென உற்றுநோக்கினேன். என்னிலும் மிதந்தனர் ஏனையோர்,

என்னே சொல்வன்மை! என்னே சொல் வளம்! தூற்றவே வந்தோர் தாமே தொழுதனர் - அன்பரானார்.

என்ன புண்ணியம் செய்தனர் இவரிடம் கற்கும் இளஞ்சிறார்! ஒரு நாள் இச்சிறுவர்களைச் சோதிக்க நேர்ந்தது. என்னே இவர்தம் கல்வியின் தெளிவும் தேர்ச்சியும்! மாணவர் மாற்றம் காட்டும் மருவிய ஆசான் மாட்சி. அடிகள் வெகுளாது விரையாது ஐயந் தீர அறிவுக் கேற்ப உள்ளத் தூன்ற உரைத்து உரைத்துப் பால் மணம் மாறாப் பாலர் தமையும் பாவலராக்கினர். இந்நல்லாசிரியர் சொல் நல்லுரை கேட்கின் புல்லும் புகலும் இலக்கணம்; கல்லும் சொல்லும் கவி. இப்பேராசிரியர்பாற் கற்றபின் மற்றொருவர் வாய்க் கேட்க நூலுளதோ? மன முளதோ?

நாட்டின் நலத்தால் நல்லோர் தோன்றுவர். அடிகளின் நாடெது? அதன் நலம் யாது? அவர் நாடு நடுநாடு என்ப 'நடு நாடு' என்பது ஏனைய நாட்டின் இடையுள நாடு என்பர். 'நடு' என்னும் சொல் ஈண்டு வினைத்தொகை2 சைவத்தையும் தமிழையும் நட்ட (நிலை நாட்டிய) நாடு; அடிகள் இவற்றை இன்று நடுகின்ற நாடு; இனி நடும் நாடுமாம். அன்பு நெறியிற் சென்றார் இருவர் (அப்பர், சுந்தரர்) இங்குத் தோன்றினர். அறிவு நெறியிற் சென்றார் இருவர் (மெய் கண்டார், அருணந்தி சிவாசாரியார்)இங்கு உதித்தனர். அந்நால்வரும் ஒருவராகி, ஞானியார் பெயரே

'மெய் கண்டார்' என்னும் பெயரில் உள்ள 'மெய்' என்பது 'மெய்ஞ்ஞான' என்பதில் உள்ளது. அருணந்தி சிவாசாரியார்' என்னும் பெயரில் உள்ள 'சிவாசாரியார்' என்பது, அடிகளாரின் 'சிவாசாரியார்' என்னும் பெயரிலும் உள்ளது.

பூண்டு 'நலந்தர இங்குத் தோன்றியுள்ளார். அந்நால்வரிற் பின்னுள் இருவர் அடிகள் பெயரினும் புகுந்தனர்.

அடிகள் பெயரினைச் சிறிது கருதுவீர்களாக. - 'மெய்ஞ் ஞான சிவாசாரியார்'. அடிகளுக்கும் அன்பு நெறியினும் அறிவு நெறியில் அவா அதிகம் போலும்.

அன்று ஓர் அம்மை (திலக வதியார்) கெடிலக்கரை யில் அழுது அழுது தந்தார் நம் ஆளுடை அரசை. இன்று அவ்வாற்றின் எதிர்கரை நின்று நம் தமிழ் அன்னையும் தவம் பல செய்து தந்தனள் ஒரு தனி இளங்குழவியை. இது தவ வேடம் பூண்டு தனியரசு செய்யக்காண்மின்.

ஐயன்மீர், எளியேன் கூறியன புனைந்துரை எனச் சிறிதும் ஐயுறற்க. ஐயம் உளதெனில் நேரிற் செல்க. உண்மையை உணர்க. அடிகளின் பொன் விழா அண் மைத்து. அடிகளைக் காணுதல் அரிதன்று. காணுதற்கு உரிய காலம் இடம் ஆதிய வரையறையில. யாவராயினும் கற்போர் உளரேல் அடிகள் கண் துயிலும் கொள்ளார். அவருடன் பல நாள் பழகுதல் வேண்டா. அடிகளை ஒரு காற் காணின், ஒருகால் அவர் உரை கேட்பின், *'அன்ப ராகுந ரன்றிமன்பதை உலகில் மற்றையர் இலரே'.

இது கோதண்டபாணி பிள்ளையின் 'கட்டுரை. பிள்ளை தமிழ் இலக்கிய இலக்கண அறிவு மிக்கவர் என்பது இக் கட்டுரையால் புலனாகிறது. அவரது உரை மிகவும் ஏற்கத் தக்கது.

**ஆனந்த விகடன்**

'ஆனந்த விகடன்' இதழில் எழுதி வந்த கல்கி, ரா. கிருஷ்ண மூர்த்தி, பின்னர் 'கல்கி' என்னும் பெயரு டைய இதழின் ஆசிரியரானார். அதற்கு முன் அவர், ஞானியார் அடிகளாரின் பொன் விழாக் கண்டு ஆனந்த விகடன் இதழில் எழுதிய கட்டுரையின் சுருக்கம் வருமாறு:-

* நால்வர் நான்மணி மாலை — 4--13

**சைவ சித்தாந்தமும் ஞானியார் சுவாமிகளும்**

"...... இப்படி விதி விலக்காயுள்ள சமயப் பெரியார் களுக்குச் சிறந்த உதாரணமாக இன்று தமிழ் நாட்டில் ஒருவரைக் குறிப்பிட வேண்டுமானால், திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீ ஞானியார் சுவாமிகளைத்தான் குறிப்பிடவேண்டும்.

சுவாமிகளின் உருவத் தோற்றத்தைப் பார்த்ததுமே, 'இதோ ஒரு பெரியார் இருக்கிறார்' என்னும் உணர்ச்சி நமக்கு உண்டாகும். அவருடைய வாய்மொழிகளைக் கேட்டு, அவருடைய வாழ்க்கை முறையையும் கவனித்தோ மானால், அவருடைய பெருமை மேலும் மேலும் நமக்குப் புலனாகும். 'அன்பே சிவமாய் அமர்ந்திருக்கும் பெரியார் இவரல்லவா' என்று எண்ணி எண்ணி வியப்போம். ....... சைவ சமயத்தின் தத்துவ ஆராய்ச்சியில் கரை கண்டவர்கள் தங்கள் வாழ்க்கையில் அச்சமய போதனையை அனுஷ்டிப்ப தில்லை. சைவ வாழ்க்கை முறையைக் கைப்பற்றிப் பருகும் பக்தர்களுக்கும் சைவ சமய தத்துவங்கள் தெரிந்திருப்ப தில்லை. தத்துவமும் தெரிந்து வாழ்க்கையிலும் சைவர்க ளாயிருப்பவர்களுக்கு, அந்த உண்மைகளைச் சகலரும் அறிந்து கொள்ளும்படியாக எடுத்துச் சொல்வதற்கு வேண்டிய வாக்கு வன்மை இருப்பதில்லை. இந்த மூன்று விதமான பெருமைகளையும் உடையவர் ஸ்ரீ ஞானியார் சுவாமிகள். அவர் சமயத்தின் தத்துவங்களை நன்கு அறிந்தவர்; வாழ்க்கையில் அச்சமய போதனைக் கிணங்கி நடப்பவர். சைவசமயத்தின் தத்துவங்களையும் போதனை களையும் பற்றி அபார வாக்குவன்மையுடன் பிரசங்கம் செய்யக் கூடியவர்.

'சோனா மாரியாகப் பொழிவார்'—'கடல்மடை திறந் தாற்போல் பேசுவார்' என்பதெல்லாம் சுவாமிகள் விஷ யத்தில் உபசார மொழிகள் அல்ல. ஐந்து வருஷத்

துக்கு முன்பு அவர்கள் பட்டினத்து அடிகளைப் பற்றிச் செய்த பிரசங்கத்தை நான் கேட்டேன். அதில் அவர் கூறிய விஷயங்கள் இன்னும் என்மனதை விட்டு அகலாமல் இருக்கின்றன. சில பேர் பிரசங்கமாரி பொழிவார்கள். அவர்கள் என்ன சொன்னார்கள் என்பது மட்டும் கேட்பவர்களுக்குத் தெரியாது. 'பெரியவர் அபாரமாய்ப் பேசினார்; ஆனால் அவ்வளவு பெரிய விஷயங்கள் நமக்கெல்லாம் புரியுமா?' என்று சொல்லிக் கொண்டு போவார்கள். ஆனால் சுவாமிகள் பேச்சு இப்படியல்ல. அவர்கள் பிரசங்கத்தைப் படித்தவர்கள் ரசிப்பார்கள்; பாமரர்களும் விஷயம் இன்னதென்று தெரிந்து கொள்வார்கள். மணி மணியாக முத்து முத்தாகச் சுவாமிகள் வாயிலிருந்து வரும் வார்த்தைகள் நம்மனதில் என்றும் அழியாதவாறு பதிந்துவிடும். எப்படிப்பட்ட சிக்கலான சமய உண்மையையும் சிக்கறுத்துச் சொல்வார்கள்.

'உள்ளத்தில் உண்மையொளி உண்டாயின்
வாக்கினிலே ஒளி யுண்டாகும்' (பாரதியார்)

என்னும் கவியின் வாக்கைச் சுவாமிகளின் சொற்பொழிவுகள் மெய்ப்படுத்தும்.

ஸ்ரீ ஞானியார் சுவாமிகள் திருப்பாதிரிப் புலியூர் மடாதிபதியாகி இந்த மாதத்தோடு ஐம்பது வருஷங்கள் பூர்த்தியாகின்றன. இந்த ஐம்பது வருஷ காலத்தில் சுவாமிகள் ஆயிரக் கணக்கான சமயப் பிரசங்கங்கள் செய்திருப்பார்கள். லட்சக் கணக்கான ஜனங்களுக்குச் சைவ சமயத்தின் உண்மைகளை எடுத்துப் போதித்திருப்பார்கள். எவ்வளவோ பேருடைய வாழ்க்கையைத் தமது உபதேசங்களால் புனிதப்படுத்தி யிருப்பார்கள்.

சுவாமிகள் சமயப் பணி செய்வதுடன் தமிழ்ப் பணியும் செய்து வருகிறார்கள். எத்தனையோ பேருக்குத்

தமிழ் அன்பையும் தமிழ் அறிவையும் ஊட்டியிருக்கிறார் கள். அரசாங்க உதவியின்றி ஒரு தமிழ்க் கல்லூரியும் நடத்தி வருகிறார்கள். .......... சுவாமிகளின் தமிழன்பு, தமிழ்ச் சுவையின் அனுபவ உணர்ச்சியை அடிப்படை யாகக் கொண்டது. ........ ஸ்ரீ ஞானியார் சுவாமிகளின் ஆழ்ந்த தமிழன்பில் குறுகிய சமயப்பற்று குறுக்கிடுவது கிடையாது. உண்மைக் கவிதைக்கும் வெறும் செய்யுளுக் கும் அவர்கள் நன்றாக வித்தியாசம் அறிந்தவர்கள். ஏதெதற்கு எந்த அளவில் மதிப்புக் கொடுக்க வேண்டுமோ அவ்வளவுதான் கொடுப்பார்கள். ........ ஸ்ரீ ஞானியார் சுவாமிகள் 'வீரசைவர்' ஆன போதிலும் மற்ற மதங் களைக் குறைத்துச் சொல்லும் வீரப் பிரதாபங்களை அவர்களிடம் காண முடியாது. சர்வமத சமரச ஞான முடைய உண்மை ஞானியார் அவர். 'வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலை பெற்ற வித்தகச் சித்தர் கணத்தைச் சேர்ந்த பெரியார் என்றும் சொல்லவேண்டும்.

ஸ்ரீ ஞானியார் சுவாமிகள் பட்டத்துக்கு வந்த ஐம்ப தாவது வருஷ பூர்த்திக் கொண்டாட்டத்தைச் சென்ற 18-19உ களில், சுவாமிகளின் சீடர்களும் தமிழன்பர்களும் சேர்ந்து சிறப்பாகக் கொண்டாடினார்கள். முறையே அறுபதாவது, எழுபதாவது, எண்பதாவது வருஷ பூர்த்திக் கொண்டாட்டங்களையும் நடத்துவதற்குத் தமிழ் மக்கள் கொடுத்து வைத்திருக்க வேண்டுமென்று விரும்புகிறேன். இறைவன் அருள் புரியவேண்டும்'-

இது கல்கியின் ஆனந்த விகடன் கட்டுரைச் சுருக்கம். அடிகளாரின் உண்மைப் பெருமையைக் கல்கி மனந் திறந்து பாராட்டிப் புகழ்ந்துள்ளார். இறுதியில் அவர் அறுபது - எழுபது எண்பது கொண்டாடத் தமிழ் மக்கள் கொடுத்துவைத்திருக்க வேண்டும் - இறைவன் அருள்

புரிய வேண்டும் - என்று விரும்பியிருப்பது ஏமாற்றமாய்ப் போயிற்று.

அடுத்து, 'தமிழணங்கு' என்னும் இதழில், ச. நடராசன் (Superintendent, S.A. Co-operative Central Bank Cuddalore)என்பவர் எழுதியுள்ள கட்டுரையின் மிகவும் சுருங்கிய சுருக்கம் வருமாறு:-

**தமிழணங்கு**
**நல்லாசிரியர்**

"மறைத்திரு ஞானியாரடிகளின் பெருமையை என்ன வென்று ஆராய்வது இக்கட்டுரையின் கருத்தன்று. யாது பற்றி எனின், அவரது நூலறிவும் நுண்ணுணர்வும் மெய்ஞ் ஞானமும் இன்ன தன்மையன என அளவிட்டறிந்தார் யாவரும் இலர். அங்ஙன மிருப்ப, ஒன்றுக்கும் பற்றாத எளியேன் போன்றா னொருவன் அவர் பெருமையை ஆராய முயல்வது, அந்தகன் ஒருவன் இயற்கையின் வனப்பை யெல்லாம் ஆராயப் புகுவது போலாம். ஆயின், அவரது புனித வாழ்க்கையி னின்று மக்கள் அனைவரும் - கற்றாரும் மற்றாரும் - கற்றுக் கொள்ள வேண்டிய படிப் பினைகள் யாவை என்பதை மட்டும் ஈண்டுக் கருதுவோம்:

ஞானியாரடிகளை நினைத்தவுடன் அவரது மலர்ந்த முகமும் அவர் அகத்திருந்து எழும் இனிய சொல்லும் நம்முன் தோன்றுகின்றன. அடுக்கிய இடுக்கண் கோடி உற்று உள்ளம் வெதும்பி வாழ்க்கையில் மனச் சலிப்பு உற்ற ஒருவனும் அவரது திருமுன் சென்று, அவர் உள்ளத் திருந்து அன்பு பெருக்கெடுத்து ஊறும் கனி மொழியைக் கேட்பானாயின், அவன் நலிவு நீங்கிப் புத்துயிர் பெற்றுத் திரும்புவான் என்பதை அவரோடு ஒரு சிறிது கூடிப்பழகிய எவரும் அறிவர் ..... எல்லா உயிர்கள் மேலும் எவன் கருணை பூண்டு ஒழுகுகின்றானோ அவனே அந்தணன்

எனத் தமிழ் மாமறை கூறும். அத்தகைய அந்தணர் தொகை உலகெங்கும் பரவுதல் வேண்டும். அவரது உள்ளத்தினின்றும் பெருகும் குளிர்ச்சியே தற்போது ஏற் பட்டுள்ள கொதிப்பை ஆற்றி மன்பதையை உய்விக்கும். இத்தகைய தக்காரின் மிக்காராய்த் தலைசிறந்து விளங்கி யவர் நம் ஞானியார் அடிகள் அன்றோ!

''எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்பது அறிவு'' -(திருக்குறள் - 424)

என அறிவுக்கு விளக்கவுரை கூறினார் ஆசிரியர் திருவள்ளு வனார்.... .... ஒருவன் உள்ளத்தெழும் சொற்களும் அவன் அவற்றைச் சொல்லும் முறைமையுமே அவனு டைய கல்வி, கேள்வி ஆகியவற்றை அறிவதற்கு உரைகல் என்பதை யாவரும் அறிவர். ஆரியமும் செந்தமிழும் ஐயம் திரிபற முழுதுணர்ந்து வேதம், ஆகமம், சாத்திரம், இலக்கியம் இலக்கணம் முதலிய விழுமிய நூற்பொருள்களை அறிவு நுணுகி ஆழ்ந்து ஆராய்ந்து அறிந்து, அங்ஙனம் ஆராய்ந்தனவற்றைப் பிறர் உவக்கும் வகையால் நுண் பொருளும் எளிதில் விளங்கும் வண்ணம், பொலிவு தோன்ற முகமலர்ந்து இனியவாகச் சொல்லி, சைவ சமய உண்மைகளையும் திருநெறித் தமிழின் மாண்புகளையும் தமிழ் நாடெங்கணும் பரவச் செய்து, மக்கள் உள்ளங் களைக் கவர்ந்து கொண்ட பெருமை நம் ஞானியாரடி களுக்கே உரிய தொன்றன்றோ! மெய்யாசிரியருக்கு நூல் கள் வகுத்த பண்புகள் எல்லாம் அவரிடம் மிளிர்ந்திருப் பதை, அவரது சொற்பொழிவை ஒருசில நிமிஷங்கள் கேட்டவனும் கண்டிடுவான் என்பதில் ஐய முண்டோ?

... ''இக்காலத்து ஆசிரியன்மார்க்கு, எவ்வாற்றானும் மெய்யாசிரியராகத் திகழும் நம் தேசிக மூர்த்திகளின் வாழ்க்கை உலகிற்கு நன்னெறி உணர்த்துவதாகுக.''

இது ச. நடராசனின் கட்டுரைச் சுருக்கம். இன்னும் பொன் விழாத் தொடர்பாகப் பல இதழ்களில் செய்திகள் வெளிவந்துள்ளன. பாராட்டுப் பாடல்களும் பல வந்துள் ளன. அவற்றையெல்லாம் விரிப்பிற் பெருகும்.

# 13. இறுதி - முப்பெரு மலையூர்ப் பொழிவுகள்

1941 நவம்பர் - கார்த்திகைத் திங்களில் திருவண்ணா மலையில் விளக்கு (தீப)விழா தொடங்கியது. அவ்வூர் ந.சி. முனிசாமி முதலியார் அடிகளாரை அவ்வூருக்கு எழுந்தருளச் செய்து சொற்பொழிவுக்கு ஏற்பாடு செய் தார். முற்பகல்களில் அடிகளார் தங்கியிருந்த கட்டடத் தில் அன்பர்களின் கூட்டம் நிறைந்திருக்கும். அடிகளாரின் உரையாடல்களே சொற்பொழிவுகள்போல் சிறந்திருக்கும் மாலைக் காலத்தில், சத்திவிலாச சபையில் அடிகளாரின் தலைமை உரையும் அறிஞர் பலரின் சொற்பொழிவுகளும் சபையைச் சிறப்பிக்கும்.

திருவண்ணாமலை நகரில் வழக்கறிஞர் நாராயண சாமி முதலியார், ஆசிரியர் பெருமாள் முதலியார் ஆகி யோரின் வேண்டுகோளை மதித்து நகராட்சி உயர் நிலைப் பள்ளிக்குப் போந்து சொற்பொழிவாற்றித் 'தமிழ்ச் சங்கம்' ஒன்றையும் அடிகளார் தம் கையால் தொடங்கி வைத் தார். அன்று தமிழ்மொழியின் சிறப்பு விரிவாக விளக்கப் பெற்றது.

அண்ணாமலையை அடுத்து, திருச்சிராப்பள்ளி மலையை அடையும் வாய்ப்பு ஏற்பட்டது. சென்னையைத் தலைமை

இடமாகக் கொண்ட சைவ சித்தாந்த மகா சமாசத்தினர், சமாசத்தின் முப்பத்தாறாம் ஆண்டு மாநாட்டைத் திருச்சிராப்பள்ளியில் நடத்தத் தீர்மானித்து. தலைமை ஏற்று நடத்தித்தர அடிகளாரை வேண்டினர். திருவண்ணாமலையிலிருந்து திருக்கோவலூரில் வந்து தங்கியிருந்த அடிகளார் திரிசிராப்பள்ளிக்குப் புறப்பட்டுச் செல்லலானார். வழியில் உள்ள பெண்ணாகடம் முதலிய பல ஊர்களில் அன்பர்களின் வேண்டுகோட்கு இணங்கிச்சொற்பொழிவு அருளிக் கொண்டே சென்று திரிசிரபுரம் எய்தினர். அன்பர்களின் வரவேற்புச் சிறப்புக்கு அளவே இல்லை.

1941 டிசம்பர் 25 ஆம்நாள் முதல் மூன்று நாட்கள் அடிகளாரின் தலைமையில் மாநாடு நடைபெற்றுப் புகழ் எய்தியது. அறிஞர்கள் சொற்பொழிவுகட்குக் குறைவா என்ன? அடிகளாரின் உரை முடி மணியாய்ப் பொலிந்து விளங்கியது. மலைக்கோட்டை - தாயுமான சுவாமி திருக் கோயில் அரங்கம் விழாவால் பொலிவுற்றது.

அடுத்து திருச்சி மலைக்கோட்டைத் தெருவிலுள்ள சித்தாந்த சபையின் விழாவிலும் கலந்து கொண்டு சிறப்பித்தார் அடிகளார்.

இது 1941-மார்கழியில் நடைபெற்றது. 1942-மார்கழியில், திருச்சி தனுர்மாதத் திருப்புகழ் கோஷ்டியின் ஆண்டு விழாச் சொற்பொழிவிற்காக யான் சென்று அதே மலைக் கோட்டை - தாயுமான சுவாமித் திருக்கோயில் அரங்கத்தில், திருப்பராய்த்துறை சித்பவானந்த அடிகளின் தலைமையில் முருகன் என்னும் தலைப்பில் சொற்பொழிவாற்றிக் கொண்டிருந்தபோது, தற்செயலாய்த் தலைநிமிர்த்தி எதிர்ச் சுவரைக் கண்டபோது, அதிலே ஞானியார் அடிகளாரின் படம் மாலையிட்டு மாட்டப்பட்டிருந்ததைக் கண்டு கண் கலங்கினேன். இது நிற்க.—

அடிகளார் திருச்சியில் இருந்த அப்போது ச. அரங்க நாத முதலியாரும் க.ர. ஆதிலட்சுமி அம்மையாரும் திருச்சியில் இருந்தனர். அவர்கள் தம் மகள் காமாட்சிக்குத் திருச்சியில் அடிகளாரின் முன்னிலையில் திருமணம் நடத்த வேண்டும் என வேண்டிக் கொண்டனர். அடிகளாரும் திருவுளங் கொண்டார். மற்றும், 'காமாட்சியம்மையார் திருமணம்' (காஞ்சி காமாட்சியம்மை திருமணம்) என்னும் கட்டுரை ஒன்று வரைந்து தந்து அச்சிடவும் ஏற்பாடு செய்தார்.

இடையிலே, காமாட்சியின் திருமணத்திற்கு முன்பு பழநி சென்று தைப்பூசத்தில் முருகனை வணங்கி வந்துவிடலாம் என்று கருதி அன்பர்களின் வேண்டுகோட்கு இணங்கப் பழநிமலை நோக்கிப் புறப்பட்டார் அடிகளார். திருவண்ணாமலையை அடுத்துத் திருச்சிராப்பள்ளி மலை, அதை அடுத்துப் பழநி மலைப் பயணம் நேரிட்டது.

19-1-1942 - திங்கட் கிழமை காலையில் அடிகளார் திருச்சியினின்றும் புறப்பட்டார்; மணப் பாறை வழியாகச் சென்று 23-1-1942 - வெள்ளிக்கிழமை பழநியைச் சேர்ந்தார். அன்பர்களின் வரவேற்பு ஆரவாரமாயிருந்தது; அவ கங்கைச் சமீன்தாரின் மாளிகையில் அடிகளாரை எழுந்தருளச் செய்தனர்.

பழநி சைவ சித்தாந்த சபையின் முதல் ஆண்டு விழாவிற்கு அடிகளார் தலைமை தாங்கி நடத்திக் கொடுத்தார். நாடோறும் விழாச் சொற்பொழிவும் ஆற்றி அன்பர்களை மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்த்தினார். 30-1-1942 ஆம் நாள் பழநி மலைமீது ஏறிப் பழநியாண்டவரை வழிபட்டார்.

மறுநாள் - 31-1-1942 - சனிக்கிழமை மாலை சாது சுவாமிகள் என்பவரின் வேண்டுகோளின் வண்ணம் 'சிவ

ராச யோகம்' என்னும் பொருள் பற்றி நீண்டதொரு - நீண்டதொரு - ஆமாம் நீண்டதொரு சொற்பொழிவு ஆற்றினார் அடிகள் இரவு 9-30 மணிக்குச் சொற்பொழிவு நிறை வெய்தியது. இது இறுதிச் சொற்பொழிவாயிருக் குமோ....?

அதன் பின்னர் அடிகளார் மலைமீது ஏறி பழநியாண்ட வரை வழிபட்டு இரவு பன்னிரண்டு மணி அளவில் கீழிறங் கித் தங்கும் விடுதியை அடைந்தார். விரைவில் திருச்சி சென்று காமாட்சியின் திருமணத்தை நடத்தித்தர வேண்டு மென எண்ணி, அன்று நள்ளிரவு மூன்று மணிக்கே புறப் படுதற்கு வேண்டிய ஆயத்தங்களைச் செய்தார். அன்றிரவு தூக்கமே இல்லை. அடிகளார் புறப்பட்டு விட்டார். திருக் கோயில் மேலாளர் எம். சோம சுந்தரம் பிள்ளையும் மற்ற அன்பர்களும். அந்த நள்ளிரவில் மேளதாள இயங் களுடன் பழநி நகரஎல்லை வரையும் வந்து வழியனுப்பிச் சென்றனர். அடிகளார் பழநி மலையை நோக்கினாற் போல் பல்லக்கில் அமர்ந்து பயணம் செய்வாராயினார் - ஆமாம் பயணமே செய்வாராயினார். பல்லக்கும் பொருள் கள் ஏற்றிய வண்டியும் முன்பின்னாகச் சென்று கொண்டி ருந்தன.

திங்களோ தை - நேரமோ வைகறை - குளிரோ மிகுதி. அடிகளார் மிகவும் நலிவுற்றார். கடையெழு வள்ளல்களுள் ஒருவரான 'ஆய்' என்பான் ஆண்ட 'ஆய்குடி' என்னும் ஊர் வழியாகச் சிவிகை சென்று கொண்டிருந்தது. பழநிக்கு 13 கி.மீ. தொலைவில் உள்ள சிந்திலவாடன்பட்டி என்னும் ஊரை நெருங்கிக் கொண்டிருந்தபோது, அடிகளார் நிலை தளர்ந்து பல்லக்கை நிறுத்தச் சொன்னார். வெந்நீர் சுட வைக்கப் பெற்றது. அடிகளார் காலைக் கடனை முடித்துச் சிறிது வெந்நீர் பருகிப் பல்லக்கில் அமர்ந்தார். உடல் நிலை

சரியில்லை எனத் திருச்சியில் உள்ள அரங்கசாமி முதலியாருக்குச் செய்தி அனுப்பச் செய்தார். நடேசன் என்பவர் அவ்வழியேவந்த ஒரு சிற்றுந்து மூலம் திருச்சிக்கு விரைந்தார். உடனிருந்தவர்களின் கண்கள் குளம் ஆயின.

பழநி அன்பர்கட்கும் செய்தி பறக்கவே, அவர்கள் மருத்துவர் (டாக்டர்) ஒருவரை அழைத்துக் கொண்டு ஓடோடி வந்தனர். மருத்துவர் அடிகளாரின் உடல் நிலையை ஆய்வு செய்தார். அவருடைய கண்களும் நனையத் தொடங்கியதைக் கண்ட அன்பர்கள், எவ்வாறு உள்ளது - எவ்வாறு உள்ளது எனப் பதறித் துடித்து வினாவினர். மருத்துவர் அளித்த பதில் இதோ:-

"Diabetic coma - Suddenly developed - no blood in his body at all - wonder how he was able to lecture for four hours daily for a whole week - so sorry - can't help - heart failure".

இதன் தமிழ் மொழி பெயர்ப்பு வருமாறு: 'நீரிழிவு நோய் திடீரென முற்றிவிட்டது. உடம்பில் சிறிதும் குருதியே இல்லாதிருந்தும், நாடோறும் நான்குமணி நேரம் எவ்வாறு தொடர்ந்து சொற்பொழிவாற்றினார் என்பது வியப்பாயுள்ளது. மிகவும் வருந்துகிறேன். இனி ஒன்றும் செய்ய இயலாது. இதயம் நின்றுவிட்டது (உயிர் இல்லை) - என்பதாகும்.

ஞானியார் அடிகளார் தம் சொற்பொழிவின் இறுதி யில் பின்வரும் பாடலையும் கூறுவது உண்டு:

"ஏழைக்கு இரங்குதெய்வம் என்றுன்பால் வந்தடைந்தேன்
ஏழைக்கு இரங்க இது தருணம் - ஊழை வென்ற
சீலமுனி வோர் போற்றும் தென்பழநி வெற்பில் உறை
நீல மயில்முருகா நீ"-

இந்தப் பாடலை இந்த மாதிரியில் ஒரு முறை கூறி விட்டுப் பின்னர் இறுதி யடியை முதலில் தொடங்கி,

"நீல மயில் முருகா நீ, ஏழைக்கு இரங்கு தெய்வம் என்று உன்பால் வந்து அடைந்தேன், ஏழைக்கு இது தருணம்" என்று சொல்லிக் காட்டுவார்கள். இந்தப் பாடலில் உள்ள வேண்டுகோள் படி, அடிகளார், நீல மயில் முருகனின் தென் பழநி வெற்பின் அருகே இறுதி எய்தியது குறிப்பிடத்தக்கது.

டாக்டர் கூறியதைக் கேட்டுக் கொண்டு அருகில் இருந்த அனைவர் உள்ளங்களும் உருகிக் கண்ணீராய் வெளிவந்தன. ஒட்டன் சத்திரம் வரையும் சிவிகையிலேயே திருமேனி கொண்டு செல்லப்பட்டது. எல்லா ஊர்கட்கும் தந்திகள் பறந்தன. அங்கிருந்து திருமேனி திருச்சிக்கு மோட்டாரில் கொண்டு செல்லப்பட்டது. எந்த மோட்டார் காருக்கும் கிடைக்காத பெருமைப் பேறு இந்த மோட்டார் காருக்கு மட்டும் கிடைத்தது. ஆதிலட்சுமி அம்மையார் முதலியோர் அழுது அரற்றினர். மோட்டார் தொடர்ந்தது. 1-2-1942 - ஞாயிறு இரவு சுமார் 11 மணிக்குத் திருமேனி திருப்பாதிரிப்புலியூர் அருளகத்தை அடைந்தது.

அன்றிரவும் மறுநாளும் கேள்வியுற்ற மக்களும் வெளியூர் அன்பர்களும் கூட்டம் கூட்டமாய்ச் சென்று திருமேனியை வழிபட்டு வருந்தித் துயர்க் கடலில் ஆழ்ந்தனர். அடிகளாரின் திருமேனி எப்போதும் போல் பட்டொளி வீசிப் பளபளத்துக் கொண்டிருந்தது.

2-2-1942-ஆம் நாள் காலை இயற்கையே துக்கத்தில் ஆழ்ந்திருப்பது போல் சூழ்நிலை. எங்கும் துக்கமே தனியாட்சி புரிந்துகொண்டிருந்தது. வந்த அன்பர்களை ஏற்றிக் கொண்டு வந்த வண்டிகள் சூழ்நிலையின் துயரத்தைப்

பொறுக்க முடியாதவைபோல் அங்கிருந்து நகர்ந்து கொண்டே இருந்தன.

திருமேனிக்குப் பல வகைப் பூசனைகளும் நடத்தப் பெற்றன. அடிகளார்க்குப் பெருந்துணையாய் இருந்து இறந்துபோன தாய் மாமனின் மகனும், திருச்சி தேசீய உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியராயிருந்தவரும் ஆகிய கந்தசாமி ஐயரவர்கட்கு ஆறாவது பட்டம் சூட்டப் பெற்றது. அடிகளார் எழுதி வைத்திருந்தபடி, சிவ சண்முக சத்தியஞான சிவாசாரிய சுவாமிகள் என்னும் பட்டப் பெயரும் சூட்டப்பெற்றது.

பின்னர்த் திருமேனி, திருப்பாதிரிப் புலியூருக்குத் தெற்கே ஒரு கி.மீ. தொலைவில் உள்ளதும் புலவர் பாளையம் என்னும் புனைபெயர் பெற்றதும் அப்பரடிகள் கரையேறிய இடமும் ஆகிய வண்டிப்பாளையம் என்னும் ஊரைச் சார்ந்துள்ள அடக்கத் (சமாதித்) தோட்டத்திற்கு அன்பர்களால் ஏந்திச் சிவிகையில் கொண்டு செல்லப் பட்டது. அங்கே குறிப்பிட்ட மணிநேரம் அடக்கக்கோயிலின் வாயிலில் திருமேனி வைக்கப்பட்டது. அன்பர்கள் பலர் இரங்கல் உரை ஆற்றத் தொடங்கினர்.

அப்போது யான் (சு.ச.) மயிலம் தமிழ்க் கல்லூரியில் விரிவுரையாளனாகப் பணிபுரிந்து கொண்டிருந்தேன். மயிலத்திற்கும் செய்தி அனுப்பப்பட்டது. கல்லூரிக்கு விடுமுறை விட்டாயிற்று. எனது தலைமையில் மாணவர் குழாம் வண்டிப்பாளையத்திற்குப் புறப்பட்டது. சென்னை செல்லும் புகைவண்டி மயிலம் நிலையத்தில் சிறிது நேரம் நிற்கும். நாங்கள் அனைவரும் நிலையத்திற்கு உரிய நேரத்தில் வரமுடியாமையால், நாங்கள் வருவதற்காக ஐந்து நிமிடமோ-பத்து நிமிடமோ (நினைவில்லை)-புகை வண்டி நிலையத் தலைவர் புகைவண்டியை நிறுத்தி

வைத்தார். எங்கள் குழு அடக்கத் தோட்டத்தை அடைந்தது. எங்களின் ஆற்றொணா அழுகையொலி இரங்கல் உரைச் சொற்பொழிவை நிறுத்தச் செய்தது. நாங்கள் சென்றபோது க. வெள்ளை வாரணனார் பேசிக் கொண்டிருந்தார். அவரை அடுத்து யான் பேசினேன்.

பின்பு திருமேனி அடக்கக் கோயிலுக்குள் எடுத்துச் செல்லப்பட்டது. கோயிலின் கருவறையில் இரண்டாம் பட்டத்து அடிகளின் அடக்கம் உள்ளது. எதிரே நந்தி இருக்க வேண்டிய இடத்தில் மூன்றாம் பட்டம் அடக்கம். மூத்தபிள்ளையார் இருக்கவேண்டிய தென்மேற்கு மூலை யில் நான்காம் பட்டம் அடக்கம். எனவே, முருகன் இருக்க வேண்டிய வடமேற்கு மூலையில் ஐந்தாம் பட்டத்து ஞானியார் அடிகளார் அடக்கம் செய்யப் பட்டார். மாலை நான்கு மணியளவில் இறுதி நிகழ்ச்சிகள் யாவும் நிறைவெய்தின. பெறுதற்கரிய கடவுள் மாமணியை ஆழ்கடலில் இழந்தாற்போன்று அன்பர்கள் வருந்தி அகல மனம் இன்றியே அவ்விடத்தினின்றும் அகன்றனர்.

11-2-1942-ஆம் நாள் முற்பகல் அடிகளாரின் அடக் கத்தின்மேல் உரிய மரபுப்படி சிவலிங்கம் அமைக்கப்பெற அடிகளார் முழுக் கடவுளாக ஆக்கப்பட்டார்.

அன்று மாலை ஆறாம் பட்டத்து அடிகளார் தலைமை யில் இரங்கல் கூட்டம் நிகழ்ந்தது. அறிஞர்கள் பலர் இரங்கல் உரையாற்றினர். சச்சிதானந்தம் பிள்ளை 'ஞான சூரியன் மறைந்துவிட்டார்—ஞான சூரியன் மறைந்து விட்டார்'—என்று புலம்பினார். அடுத்துப் பேசிய யான், ஞாயிறு மறைந்துவிடின் நம் நாட்டில் பன்னிரண்டு மணி நேரம் சென்றதும் மீண்டும் வந்துவிடும். அடுத்தடுத்த பட்டத்து அடிகளார்கள் முயன்றால் ஐந்தாம் பட்டத்து

அடிகளாரைவிட இரண்டு மடங்கு பெருமை பெறலாம் என்று கூறினேன். ஆனால், அப்போது மறைந்த ஞாயிறின் பேரொளிக்கு நிகர் ஏது?—எங்கே? இனியாயினும் அந்த ஞான ஞாயிறு மீண்டும் தோன்றுக!

# 14. பெற்ற பெருமைகள்

அடிகளார் பெற்ற பெருமைகள் பலவற்றில் சிலவற்றை இவண் காணலாம். அவருக்குப் பல ஊர்களிலும் பலவகை யோரிடத்திலும் மிகுந்த செல்வாக்கு இருந்தது. ஏழையர் முதல் மிகப்பெரிய செல்வர்வரை - இளையோர் முதல் முதியோர் வரை - எளியவர் முதல் பெரும் பதவியாளர் வரை அடிகளாரைப் போற்றி வணங்கினர்.

**பழமலை**

உள்ளூரிலும் சரி - வெளியூர்களிலும் சரி - அடிக ளாரைக் காணவருபவர்கள் பலவகைப் பழங்கள், மாலை கள் முதலியன கொண்டு வந்து அடிகளாரின் திருவடிகளில் வைத்து நெடுஞ்சாண் கிடையாய்க் கீழே விழுந்து வணங்கி எழுவர். பழங்கள் மலை - மலையாய்க் குவிந்துவிடும். எவர்காலிலும் விழுந்தறியாத் திரு.வி.க. அடிகளார் திருவடி களில் மட்டும் விழுந்து வணங்கினார்.

இன்னின்னார் வீட்டிற்கு இன்னின்ன பழங்கள் இத் தனை இத்தனை கொடுக்க வேண்டும் என ஒரு தாளில் குறிப்பு போட்டு என்னிடமும் மற்ற மாணாக்கரிடமும் அடிகளார் அளிப்பார். நாங்கள் சுமந்து கொண்டு தெருத் தெருவாய்ச் சுற்றிக் கொடுத்து வருவோம். அடிகளார் வெளியூர்களில் இருக்கும் போதும் இவ்வாறு அங்கங்கே பழமலைகள் உருவாகிவிடும். அடிகளார் புகை வண்டி

மூலமாகப் பழக்கூடைகளைப் புலிசைக்குப் பங்குக் குறிப்புடன் அனுப்பி விடுவார். அப்போதும் நாங்கள் இலவசப் பழவணிகர்களாக மாறிவிடுவோம். எங்கட்கும் நிரம்பப் பங்கு உண்டு. இந்தப் பணியை நாங்கள் மிகவும் பெருமையாக எண்ணிக் கொள்வோம்.

அடிகளாரைக் காணவருபவர்கள் மிகுந்த அடக்க ஒடுக்கத்துடன் எதிரில் அமர்ந்து உரைகளைக் கேட்பர். தாங்கள் ஏதாவது கூறுவதாயின், கைகட்டியும் அல்லது வாய் பொத்தியும் மெதுவாகக் கூறுவர்.

**பரிசுகள்**

அடிகளார்க்குப் பலர் பல்வேறு சிறப்புப் பரிசுகள் தந்துள்ளனர். புதுவைச் செங்குந்த மரபினர், அடிகளார் பூசனை புரியும் முருகன் திருமேனிக்கு வெள்ளித் திருவாசிகை செய்தளித்தனர். கொங்கு நாட்டுச் சேந்தமங்கல ஆண்டு விழாவில், பொன் உறை(கவசம்) வேய்ந்த உருத்திராட்ச மாலை அன்பர்களால் அளிக்கப் பெற்றது. முருகேச நகர் பழனியாண்டி முதலியாரும் புதுக்குப்பம் முத்துசாமி நாயுடுவும் சேர்ந்து, அடிகளாரின் மார்பில் தொங்கும் தங்கச் செச்சை செய்து அளித்தனர்.

கரந்தைத் தமிழ்ச் சங்கத்தார் வெள்ளி விழாவின் போது, எளிதில் சுமந்து செல்லக் கூடிய சிவிகை ஒன்று செய்தளித்தனர். வடமங்கலம் சமீன்தார் பெரிய சிவிகை ஒன்று செய்து கொடுத்தார்.

அடிகளார் தென் தமிழ் நாட்டுச் செலவின்போது கோட்டாறு என்னும் ஊரில் ஒரு நாள் தங்கினார். அடிகளார் சொற்பொழிவில் தேனில் விழுந்த வண்டென மயங்கி அன்பு செலுத்திய கோட்டாறு வேலாயுத முதலியார் என்பவர், சிறந்த ஓவியர்களைக் கொண்டு அடிகளாரின் திருவுருவத்தைப் புல விதமாக எழுதச் செய்து படங்க

ளாக்கி அடிகளாரிடம் காணிக்கையாகத் தந்தார். அந்தப் படங்கள் திருக்கோவலூரிலும் திருப்பாதிரிப்புலியூரிலும் உள்ள அடிகளாரின் அருளகங்களில் இப்போதும் காட்சி யளித்துக் கொண்டுள்ளன.

அடிகளார் சென்னை சொற்பொழிவுகளை முடித்துக் கொண்டு சென்னையினின்றும் புறப்படுகையில், சென்னை-கோகலே மண்டபத்தில் அடிகளார்க்கு ஒரு பாராட்டு விழா ஏற்பாடு செய்யப் பெற்றது. அவ்விழாவில், ஆர்க் காட்டு இரட்டையர்களுள் ஒருவரும் பற்பல பெரிய பதவி களை வகித்தவருமாகிய ஏ, இராமசாமி முதலியார் அடி களைப் பாராட்டி ஆங்கிலத்தில் ஒரு சொற்பெருக்கு ஆற்றினார். பிரிவோம்பல் இதழ் (பிரிவுபசாரப் பத்திரம்) ஒன்றும் அடிகளார்க்கு அளிக்கப் பெற்றது.

**நாடிமுத்துப் பிள்ளை**

ஆ. சிவலிங்கம், க. செந்தில் நாயகம், மா. தண்ட பாணி, சு. சண்முகம் (சுந்தர சண்முகம்) என்னும் நால்வ ரும் புலிசை ஞானியார் அருளகத்தில் கல்வி கற்றபின், திருவையாறு - அரசர் கல்லூரியில் சேர்ந்து படிப்பதற்காக 1936 சூலையில் சென்றனர். திருவையாறு சென்றனர்.

இவர்கட்குள் செந்தில் நாயகம் தவிர, மற்ற மூவர்க்கும் போதிய அகவை இல்லை எனக் கூறிச் சேர்த்துக் கொள்ள மறுத்தனர். இவர்களை அழைத்துச் சென்ற வீட்டுப் பெரியவர்கள், சேர்க்கமாட்டேன் என்கிறார்கள். வாங்க - ஊருக்குப் போகலாம் என்றழைத்தனர். ஓரிடத்தில் கொட்டி வைத் திருந்த மணலில் விளையாடிக் கொண் டிருந்த இந்த இளைஞர்களுள் சு.சண்முகம் என்பவன் தவிர மற்ற இருவரும் புறப்பட்டனர். சு. சண்முகம் மட்டும் 'கல்லூரியில் சேர்க்காவிடின் காவிரியில் விழுந்து செத்து விடுவேன்' என்று அடம்பிடித்தான். இதையறிந்த கல்லூரி முதல்வர், மூவரையும் பெயர் எழுதாமல் வகுப்

பில் அமரவைத்து, பின்னர் சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு எழுதித் தக்க ஒப்புதல் பெற்றுச் சேர்த்துக் கொண்டார். சு.சண்முகம் என்பவன் அடியேனே.

கல்லூரி மாணவர்கட்கு இலவசமான உண்டியும் உறையுளும் உண்டு. மாணவர்களின் எண்ணிக்கைக்கு எல்லை உண்டு. மேற் கொண்டு எங்கட்கு இடம் இன்மையால் யாங்கள் நால்வரும் வெளியில் உண்டு உறைந்து வகுப்பிற்குச் சென்று வந்தோம். இந்த நிலையில், இலவச விடுதியில் எங்கட்கு இடம் கிடைக்கச் செய்யுமாறு ஞானியார் அடிகளார்க்கு நான் எழுதினேன். இலவசச் சோறு தான் - ஆனால் அது அரசுச் செலவு - அதனால் வெட்கப்பட வேண்டியதில்லை.

ஒரு நாள் ஞானியார் அடிகளாரிடமிருந்து என் பெயருக்கு ஒரு கடிதம் வந்தது. பிரித்துப் பார்த்தேன். திரு நீற்றுப் பொட்டலமும் உடன் இருந்தது. திரு நீறு, அணிந்து கொண்டோம் அக்கடிதத்திற்குள் மற்றொரு கடிதம் அடங்கிய உறை ஒன்று இருந்தது. அதன்மேலே திருவாளர் நாடிமுத்துப்பிள்ளை - தஞ்சாவூர் என்று எழுதிருந்தது. என்னை விளித்து எழுதிய கடிதத்தில், நாடிமுத்துப் பிள்ளைக்கு நான் (அடிகளார்) எழுதியுள்ள கடிதத்தை நீங்கள் நால்வரும் எடுத்துச் சென்று தஞ்சையில் அவரிடம் கூறின் உங்கட்கு இடம் கிடைக்கும் - என்று அடிகளார் எழுதியிருந்தார். அன்றே நாங்கள் நால்வரும் கடிதத்தை எடுத்துக்கொண்டு நாடிமுத்துப் பிள்ளையைக் காணத் தஞ்சை சென்றோம்.

நாடிமுத்துப் பிள்ளை மாபெருஞ் செல்வமும் செல்வாக்கும் உடையவர். அப்போது மாவட்ட ஆட்சிக் குழுத்தலைவராய் (District Board President) இருந்த அந்தக் காலத்தில் அது பெரிய பதவி. தஞ்சை மாவட்டம் முழுவு

தற்கும் தலைவர் போன்ற அரசுப்பதவி. திருவையாறு அரசக் கல்லூரியைக் கவனித்துக் கொள்வது அந்த மாவட்டக் குழுவே. அரசர் கல்லூரியில் இடம் கிடைக்கச் செய்யும் பொறுப்பும் அந்தக் குழுவினுடையதே. எனவே, குழுத்தலைவர் நாடிமுத்துப்பிள்ளை விரும்பின் எங்கட்கு இடம் கிடைக்கச் செய்யலாம். எனக்குச் சரியாக நினைவில்லை - உண்மையோ பொய்யோ - பர்மாவிலோ அல்லது இந்தோ சைனாவிலோ, ஒரு தெருவில் உள்ள வீடுகள் அனைத்தும் நாடிமுத்துப் பிள்ளையினுடையது - என்று சொல்லக் கேட்ட நினைவு உள்ளது.

மாலை 4 மணிக்குக் கல்லூரி விட்டதும் நாங்கள் நால்வரும் நடந்தே தஞ்சையிலுள்ள மாவட்டக் குழு (District Board) அலுவலகம் அடைந்தோம்.இரவு 8 மணி இருக்கும். நாடிமுத்துப் பிள்ளையைப் பெரிய கும்பல் சூழ்ந்து கொண்டிருந்தது. அந்தக் கும்பலில் நான் புகுந்து அடிகளார் அனுப்பிய மடலைப் பிள்ளையிடம் தந்தேன். அவர் பிரித்துப் பார்த்தார். உள்ளேயிருந்த பொட்டலத்திற்குள் இருந்த திருநீற்றை அன்புடனும் அடக்கத்துடனும் எடுத்து நெற்றி நிறைய அணிந்துகொண்டார். பின்பு கடிதத்தைப் பார்த்தார். பிறகு எங்களை நோக்கி, 'நீங்கள் கல்லூரிக்குப் போகலாம் - உங்கட்கு இடம் கிடைக்கும்' என்று கூறினார். நாங்கள் மகிழ்ச்சியுடன் திரும்பினோம்.

அடிகளாரின் கடிதத்தில், 'எங்கள் மடாலயத்திலிருந்து மாணாக்கர் நால்வர் திருவையாற்று அரசர் கல்லூரிக்கு வந்துள்ளனர்; அவர்கட்கு விடுதியில் இடம் கிடைக்கச் செய்யவேண்டும்' என்று எழுதப்பட்டிருந்ததே தவிர, நால்வரின் பெயர்கள் குறிப்பிடப்பட வில்லை. அதனால், நாடி முத்துப் பிள்ளை, கல்லூரி விடுதிக் காப்பாளருக்கு 'திருப்பாதிரிப் புலியூரிலிருந்து மாணாக்கர் நால்வர்

வந்துள்ளனரே - அவர்களின் பெயர்களை எழுதியனுப்புக' என்று கடிதம் எழுதி அனுப்பினர். காப்பாளர் எங்கள் நால்வர் பெயரையும் கேட்டு எழுதியனுப்பினார். பின்னர், எங்கள் பெயர்களைக் குறிப்பிட்டு முறைப்படி நாடிமுத்துப் பிள்ளை ஆணை அனுப்பினார். நாங்கள் உணவு விடுதியில் சேர்த்துக் கொள்ளப் பெற்றோம். இதைக் கொண்டு' ஞானியார் அடிகளார்க்கு இருந்த சிறப்புப் பெருமைச் செல்வாக்கை அறியலாமன்றோ?

**சென்னைப் பல்கலை**

இது போன்றிருந்த மற்றொரு செல்வாக்கையும் இவண் காண்பாம். முத்து. இராசாக் கண்ணனார் என்பவர் கடலூரைச் சேர்ந்த வண்டிப் பாளையத்தினர். புலிசை ஞானியாரிடத்தில் தமிழ் பயின்று வித்துவான் பட்டம் பெற்றவர்; பின்பு, B.O.L. (Hons) பட்டம் பெற்றார். தமிழ் நாட்டில் பல அரசுக் கல்லூரிகளில் தமிழ்த்துறைத் தலைவராயும் முதல்வராயும் பணியாற்றினார். இறுதியில், சென்னையில் குறளகத்தில் உள்ள - தமிழ்நாடு அரசின் தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநராயிருந்து ஓய்வு பெற்றார். அவர், ஞானியார் அடிகளாரைப் பாராட்டி எழுதியுள்ள கட்டுரை ஒன்றில், அடிகளாரால் தாம் பெற்ற நன்மையொன்றைக் குறிப்பிட்டு அடிகளாரின் சிறப்புச் செல்வாக்குப் பெருமையைக் குறிப்பிட்டுள்ளார். அந்தப்பகுதி அவர் எழுதியுள்ளபடியே வருமாறு:

**முற்றுணர்வினர்**

"...... திருவையாற்றுக் கல்லூரியும் அண்ணாமலைப் பல்கலைக் கழகமும் வித்துவான் தேர்வில் தேரும் எண்ணமுடையாருக்கு நிலைக்களங்களாக விளங்குகின்றன. அடியேன் அடிகளார் திருமுன் இருந்து கற்கத் தொடங்கிய நாள்தொட்டு அவர்கள் முன்னரிருந்து கற்றலைத் தவிரக் கல்லூரியில் சேர்ந்து படித்தலை விரும்பாதவனானேன்.

நாள் ஆக ஆக இவ்வெண்ணம் வளர்ந்ததே யன்றிக் குறைந்ததன்று.

வித்துவான் தேர்வுக்குத் தனித்துச் (Private) செல்வோருக்கு ஆண்டுகள் இருபத்தைந்து நிறைந்திருத்தல் வேண்டும் என்பது சென்னைப் பல்கலைக் கழகச் சட்டமாகும். முதலில் தேர்வுக்குரியவற்றைக் கற்று முடிந்த காலத்தில் அடியேன் பதினெண் யாண்டுகளே நிறைந்திருந்தேன். முற்குறித்த சட்டப்படித் தேர்விற்குச் செல்லும் தகுதி, வயதால் எனக்கில்லை. ஆயினும், ஆண்டு குறைவினையுடையாரையும் பல்கலைக் கழகத்தார் விரும்பின் சட்டத்தைச் சிறிது தளர்த்தித் (Exempt) தேர்விற்குச் செல்லுமாறு செய்யலாம் என்ற உண்மை அறியப்பட்டது.

அக்காலத்து அடியேனுடன் மற்றொரு மாணவியாரும் அடிகளிடத்துத் தமிழ் கற்றுக்கொண்டிருந்தனர். அன்னார்க்கும் ஆண்டுத் தொல்லை குறுக்கிட்டது. ஆதலின் நாங்கள் இருவரும் அவ்வைந்து வெண்பொற் காசுகளைச் செலுத்தித் தேர்வுக்கு உரியவர்களாக ஆக்கப்படல் வேண்டுமென்று பல்கலைக் கழகத்தாரைக் கேட்டுக் கொண்டோம். 1934 ஆம் ஆண்டு செப்டம்பர் திங்களில் இது நடந்தது.

நவம்பர் மாதம் (ஐந்தாம் நாள் என்று நினைவு) காலை வழக்கம் போல் 9.30 மணியளவிற்கு மடாலயத்திற்குச் சென்றேன். முன்னருள்ள மண்டபத்தில் திரு. உருத்திரசாமி ஐயரவர்கள் இருந்தனர். என்னுடன் பயின்ற மாணவியாரும் அங்கிருந்தனர். என்னைக் கண்ட ஐயரவர்கள், 'உனக்கு வரவில்லை—இவர்களுக்கு வந்துவிட்டது' என்றனர். யான் ஒன்றும் அறியாதவனாய்ச் சிறிதுஎண்ணி நின்றேன். அந்த மாணவியார் தேர்விற்குச் செல்லலாம் என்று பல்கலைக் கழகத்தார் அனுப்பிய முடிவினை ஐயர் என்கையில் தந்தனர். உண்மை நன்றாக விளங்கிற்று.

என்னை மறந்து சில வினாடிகள் நின்றேன். மிக்க ஆவலுடன் தேர்வுக்கென்று படித்துக்கொண்டிருந்த எனக்கு அச்செய்தி பெரியதோர் ஏமாற்றத்தைத் தந்தது. அடக்கமுடியாததோர் பெருஞ் சினம் பல்கலைக் கழகத்தார் மேல் பொங்கி எழுந்தது. எனக்குச் சபிக்கும் ஆற்றல் இருந்தால் ..?

சினம் அடங்கவில்லை. உட்கட்டிலிருக்கும் அடிகளாரைச் சென்று வணங்குவதையும் மறந்திருந்த நான் சிறிது நல்ல அறிவு வர உள்ளே விரைந்து சென்றேன். தம்மை நோக்கி வந்த என் உள்ளத்தைத் தம் அறிவுக் கண் கொண்டு ஆழ்ந்து நோக்கினர். யான் பேச முடியாத நிலையினனாய் 'ஓ' என்று கதறியழுதுவிட்டேன். என் துன்பத்தைக் கண்ட அடிகள், "இராஜா! அழாதே. அவர்களுடன் நீயும் தேர்விலிருந்து எழுதலாம்" என்றார்.

நீரால் அவிந்த நெருப்பென அடியேன் உள்ளக் கொதிப்பு உடனே ஆறியது. ஏன்? அவ்வாண்டிலேயே அடிகள் எவ்வாறேனும் நம்மைத் தேர்விற்குச் செல்லும் வண்ணம் செய்வார்கள் என்றே பிள்ளை மதியால் பேதையேன் எண்ணினேன்.

1936-இல் உயர்திரு கா. நமச்சிவாய முதலியாரவர்களைத் திருமடத்திற்கு அழைத்த அடிகளார், "இவ் விளைஞன் வித்துவான் தேர்விற்குத் தனித்துச் (Private) செல்ல விழைகின்றான். தங்கள் உதவி மிகவும் வேண்டற்பாலது" என்றனர். அவ்வளவே - அவர் அடியேனைச் சென்னைக்கு அழைத்து வந்தனர். பலரிடம் சென்று வந்தனர்.

பின் தேர்விற்கு வெண்பொற் காசுகள் கட்டப்பட்டன. முன் குறித்த மாணவியாரும் அடியேனும் அவ்வியாண்டில் ஐயாற்றுக் கல்லூரியிலேயே எழுத நேர்ந்தோம். ஒரே

மண்டபத்தில் தேர்வினை எழுதினோம் என்று மட்டும் குறிப்பதற்கில்லை. நூறு அளவில் தேர்விற்கென்று ஆண் கள் இருந்த அம்மண்டபத்தில் அடியேனுக்கு ஆண்கள் இடையில் இருந்தெழுத வாய்ப்பில்லை. தனித்த இடங்க ளாக மூன்று குறிக்கப்பட, அவற்றுள் நடுவில் அடியேன் இருந்தெழுத, அடியேனுக்கு வலப்பக்கத்தே அம்மாணவி யாரும் இருந்து எழுதுமாறு நேர்ந்தது.

இந்நிகழ்ச்சியை எண்ணும் போது, அடிகளாரின் முற் றறிவின் பெருமையை எண்ணி வியத்த லல்லது வேறு என்ன செய்யக் கடவேன்!''

என்பது இராசாக் கண்ணனாரின் கட்டுரைப் பகுதி. அடிகளாரின் செல்வாக்குப் பெருமை இதனாலும் அறியப் படும். அடிகளார் ஒரு முறை எனக்காகவும் ஒரு பரிந்துரை செய்துள்ளார்.

யான் திருவையாற்று அரசர் கல்லூரியில் பயின்று வித்துவான் தேர்வில் வெற்றி பெற்ற மறு திங்களே, மயிலம் சிவத்திரு சிவஞான பாலைய சுவாமிகளின் தமிழ்க் கல்லூரியில் விரிவுரையாளர் பணி எனக்குக் கிடைத்தது. பணியில் வந்து சேருமாறு சிவத்திரு சிவஞானபாலைய அடிகளார் எனக்கு ஆணை (order of appointment) அனுப்பினார். ஆணையைப் பெற்ற நான், ஞானியார் அடிகளாரைக் கண்டு வணங்கி வாழ்த்து பெற்றுச் செல்ல விழைந்தேன். அப்போது அடிகளார் திருவதிகையில் எழுந் தருளியிருந்தார். யான் திருவதிகை சென்று கடிதத்தைக் காண்பித்து வாழ்த்து வேண்டி வணங்கினேன். அடிகளார் வாழ்த்தித் திருநீறு அளித்ததோடு, மயிலம் கல்லூரி முதல் வருக்கு எனக்காக ஒரு பரிந்துரைக் கடிதமும் எழுதியளித் தார்.'சண்முகத்தைப் பேணிக்காக்கவும்' என்பது பரிந்துரை யின் சுருக்கக் கருத்து. மயிலத்தில் வேலை கிடைத்தது

புலிசை அடிகளாரின் தொடர்பினாலேயாகும். மற்றும் அடிகளார், என்னுடன் கற்ற க. செந்தில் நாயகம் என்ப வருக்கு, இப்போது வேங்கடேசுவராப் பல்கலைக் கழகம் என்னும் பெயரில் மலர்ந்து மணம் வீசிக் கொண்டிருக்கும் நிறுவனம் அரும்பாக இருந்த திருப்பதிக் கல்லூரியில் இடம் கிடைக்கச் செய்தார். அடிகளாரின் பெருமையே பெருமை!.

**தெய்வ விழாக் கோலம்**

அடிகளார் சிவிகை இவர்ந்து செல்வது வழக்கம். சுமந்து செல்பவரின் ஓய்வுக்காக வழியில் இடையிடையே சிற்றூர் களில் சிவிகையை நிறுத்தித் தங்குவார். எதிர்பாராத இந்தத் திடீர் வாய்ப்பைப் பெற்ற அண்டை - பக்கத்து ஊரார்கள் ஓடிவந்து அடிகளாரை வழிபட்டுச் சிறப்பு செய்வார்கள். அடிகளார் அவர்கட்குத் திருநீறும் அருளுரை யும் வழங்கி வாழ்த்துவார். பின்னர் அடிகளார் புறப் பட்டதும் அந்த மக்கள் நெடுந்தொலைவு உடன் வந்து வழியனுப்பிவைப்பார்கள். அடிகளார் வருகைக்காகச் சில ஊர்கள் தெய்வவிழாக் கோலம் கொள்ளும். வாழை, கமுகு மரங்கள் கட்டப்படும். மாவிலைத் தோரணங்கள் தொங்கும். நிறைகுடச் (பூரணகும்பம்) சிறப்புடன் இன்னி யங்கள் முழங்க அடிகளாரை மக்கள் வரவேற்பர். ஒவ் வொரு வீட்டு வாயிலிலும் தேங்காய், பழம், வெற்றிலை, கற்பூரம் அடங்கிய தட்டுகளுடன் மக்கள் வந்து, தெய்வத் திருமேனி ஊர்வலம் வரும்போது படையல் செய்வதுபோல் செய்து சிறப்பிப்பார்கள். இக்காட்சி கண் கொள்ளாக் காட்சியாய் இன்புறுத்தும். இத்தகைய ஊர்வலம் எங்கு - என்று - யாருக்கு நடைபெறும் என்பதை அறிய முடியுமா?

**அறங்காவல் தலைமை**

திருப்பாதிரிப் புலியூர்ப் பாடலேசுரர் சிவன்கோயில் அறங்காவல் தலைமைப் (தர்ம கர்த்தாப்) பதவி 1936ஆம்

ஆண்டு அன்பர்களால் அடிகளார்க்குத் தரப்பெற்றது. கடலில் போடப்பட்ட அப்பரடிகள் கரையேறி வந்ததும் முதலில் வழிபட்ட இடமும் இந்தத் திருப்பதியே யாகும்.

அடிகளார் தலைமைப் பொறுப்பைத் திறம்பெற நடத்தினார். மாணாக்கர்களின் துணையும் அன்பர்களின் துணையும் அடிகளார்க்கு இருந்ததால், எல்லாச் செயல் களையும் ஒழுங்குறச் செய்ய முடிந்தது. அடிகளார் வைகாசிப் பெருவிழா (பிரம்மோற்சவம்) அழைப்பிதழ் வெளியிட்டார். அதில், சங்க இலக்கியங்கள் – திருமுறைகள் ஆகியவற்றில் விழா பற்றியுள்ள சில குறிப்புகளும் இடம் பெற்றிருந்தன. விழா அழைப்பிதழ்கட்கு இதனை ஒருமுன் மாதிரி எனக் கூறலாம். அடிகளாரின் ஆட்சிக் காலத்தில் தான் மின் விளக்குகளும் பூந்தோட்டமும் அமைக்கப் பட்டன. விழாக்களில் சொற்பொழிவுகட்கும் ஏற்பாடு செய்யப்பெற்றது. திருக்கோயில் மேலாட்சிக்கு அடிக ளாரின் ஆட்சி, ஒரு முன் மாதிரி ஆட்சியாகச் சிறப்புற அமைந்திருந்தது.

இரண்டு ஆண்டு காலம் ஓடியிருக்கலாம். கோயில் களைக் கண்காணிக்கும் அரசப் பதவியாளர் (அதிகாரி) ஒருவர் முன் அறிவிப்பு இன்றி அடிகளாரிடம் வந்து கோயில் கணக்குகளைக் கேட்டார். கோயிலுக்குச் சென்று மேலாளரைக் (மானேஜரைக்) கேட்கின், அவர் கணக்கு காண்பிப்பார் என்று அடிகளார் கூறினார். 'நான் உங்களை யல்லவா கேட்கிறேன். நீங்கள் அல்லவா கணக் கைத் தருவித்து எனக்குக் காண்பிக்க வேண்டும் என அந்த அரசு அலுவலர் சினந்து முழக்க மிட்டார். பின்னர் அடிக ளார், 'உங்கட் கெல்லாம் அடிபணிய வேண்டிய நிலையில் எங்களை இறைவன் வைத்திருக்க வில்லை' என்று கூறி அப்போதே பதவி விலகல்கடிதம் எழுதித் தந்து விட்டார்.

ஆங்கிலம் கற்ற - சமயப் பற்றோ அன்பு முறையோ இல்லாத அந்த அலுவலர் கோயிலுக்குச் சென்று கணக்கு களைப் பார்வையிட்டு ஒழுங்குற இருப்பதை அறிந்து வியந்தார். அவருக்கு அடிகளார் பெருமை முன்பின் தெரி யாது. பலரும் அடிகளாரின் சிறப்பை அவரிடம் எடுத்து மொழிந்தனர்.

அறிந்துகொண்ட அவர் மீண்டும் அடிகளாரை அணுகி வருத்தம் தெரிவித்தார். பதவி விலகல் கடிதத்தைத் திரும்பப் பெற்றுக் கொண்டு, நீங்களே மீண்டும் அறங் காவல் தலைமைப் பொறுப்பை ஏற்றுக்கொள்ள வேண்டும் என மன்றாடினார். பதவி விலகல் கடிதம் தந்தபின் மீண்டும் ஏற்றுக் கொள்ளுதல் அழகாகாது என்று கூறி அடிகளார் மறுத்து விட்டார். அலுவலர் வருத்தத்துடன் திரும்பிச் சென்றார்.

**வாரியார் சொற்பொழிவு**

அடிகளார் அறங்காவல் தலைமைப் பொறுப்பு ஏற்றி ருந்த காலத்தில், மாலையில் திருக்கோயிலில் சொற் பொழிவு நடத்த ஏற்பாடு செய்தது மட்டுமன்று; கடவுள் திருமேனி ஊர் சுற்றிவரும் போதும், பின்னால், திருமுறை இசை நிகழ்ச்சியும் சொற்பொழிவு நிகழ்ச்சியும் நடை பெற்றுவர ஏற்பாடு செய்யப்பெற்றது. எம்.எம். தண்ட பாணி தேசிகரின் குழுவினர், தெருத்தோறும் ஆங்காங்கு நின்று தமிழ் இசை அமிழ்தத்தைத் ததும்பச் செய்து சென்றுகொண்டிருந்தனர். அக்குழுவிற்குப் பின்னால், திரு முருக கிருபானந்த வாரியார் ஆங்காங்கு நின்று இசையுட னும் நடிப்புடனும் சொற்பொழிவு செய்து எதிர்காலத்தில் தாம் முத்தமிழ் வித்தகராக ஆகப் போவதற்கு அடி கோலிக் கொண்டு சென்றார்.

ஞானியார் அடிகளாரின் அருளகத்தை அணுகியதும்

வாரியார் அங்கு நின்று சொற்பொழிவு செய்யத் தொடங்கினார். வாரியார் ஞானியாரிடம் பாடம் கேட்டவர். ஞானியார் அருளக வாயிலில் நின்று கொண்டு புன்முறுவலுடன் சொற்பொழிவைக் கேட்டுக் கொண்டிருந்தார். யானும் பக்கத்தில் நின்று பார்த்துக் கொண்டிருந்தேன்.

முக்காடிட்ட பெண் ஒருவர் ஏதோ சொல்வதுபோல் வாரியார் தாமும் தலையில் முக்காடு போட்டுக்கொண்டு ஏதோ சொல்லி நடித்தார். அடிகளார் உட்பட அனைவரிடமிருந்தும் புன்முறுவல்கள் பூத்து மலர்ந்தன. அங்கே அப்போது வாரியார் கூறிய சுவையான கருத்து ஒன்று வருமாறு:-

"புலால் உண்பவர்கள் மரக்கறி உண்பவர்களை நோக்கி, நீங்கள் கத்தரிக்காயை வெட்டிச் சாப்பிடுகிறீர்களே – அது மட்டும் உயிர்க் கொலையல்லவா? மரம் – செடி – கொடி – புல் – பூண்டு ஆகிய அனைத்திற்கும் உயிர் உண்டு – எனவே, மரக்கறி உண்பவர்களும் உயிர்க் கொலை செய்பவர்களாகவே கருதப்படுவர் என்று நீங்கள் கூறுகின்றீர்கள். ஆனால், ஆட்டை வெட்டினால், அது 'மே-மே' என்று கத்துகிறது – கதறுகிறது – துடிக்கிறது. கத்திரிக்காயை வெட்டினால் அது அவ்வாறெல்லாம் செய்வதில்லை. ஒருவேளை உங்கள் வீட்டுக் கத்தரிக்காய் அவ்வாறு கத்திக் கதறித் துடிக்கின்றதோ என்னவோ – ஆனால் எங்கள் வீட்டுக் கத்தரிக்காய் நறுக்கும்போது அமைதியாகவே இருக்கிறது"- என்ற ஒரு கருத்தைச் சுவைபடக் கூறினார்.

இவ்வாறெல்லாம் அடிகளார் அறங்காவல் தலைமைப் பொறுப்பு ஏற்றிருந்த நேரத்தில் நடக்கச் செய்து பொது மக்களிடையே பெரும் புகழ் பெற்றார்.

1924-டிசம்பர் – புலிசையில் நடைபெற்ற சமாச மாநாட்டில் அடிகளார்க்குப் பொற்கவசம் இட்ட ஊற்று

எழுதுகோல் (பவுண்டன் பேனா) ஒன்றை அடிகளார்க்கு அளித்த பெருமை செய்து பெருமை பெற்றனர் சமாசத்தினர்.

**பணி விடைகள்**

அடிகளார்க்குப் பணி விடைகள் செய்ய அன்பர்கள் போட்டி போட்டுக் கொண்டு செல்வர்; அடிகளார் இட்ட வேலையைச் செய்வதைத் தம் பிறவிப் பயனாகக் கருதுவர். அந்தக் காலத்தில் மின் விசிறி அருளகத்தில் போடப்பட வில்லை. அடிகளார் மணிக் கணக்கில் தொடர்ந்து பாடம் நடத்தும் போதும் சொற்பொழி வாற்றும் போதும், யாராவது ஒருவர் மாறி மாறி அடிகளார்க்கு விசிறி விசிறிக் கொண்டிருப்பர். இதைப் பெரியவர்கள் செய்வதன்றி, இளைஞர்களாயிருந்த என் போன்றவரும் செய்வர். யான் எத்தனையோ முறை விசிறியிருக்கிறேன். ஒரு நாள் ஓர் இளைஞன் எங்கேயோ பார்த்துக் கொண்டு அடிகளாரின் உடம்பில் விசிறி உராயச் செய்துவிட்டான். அதிலிருந்து அவனை விசிற விடுவதில்லை.

ஒரு முறை அடிகளார் அஞ்சலகம்(தபால் அலுவலகம்) சென்று அஞ்சல் தலைகள் (ஸ்டாம்ப்) வாங்கி வரும்படி என்னை அனுப்பினார். யான், ஒரு தோள் இருதோள் களாகவும் இருதோள்கள் நான்கு தோள்களாகவும் பூரித்துப் பெருமிதத்துடன் சென்று வாங்கி வந்து கொடுத் தேன்.

**பழநியார் வழியனுப்பியமை**

அடிகளார் இறுதியில் பழநியைவிட்டுப் புறப்பட்ட போது தைத் திங்கள் – பூச நாள் – இரவு மூன்று மணியா கும். தைத் திங்கள் குளிருக்குச் சொல்லவா வேண்டும்? இங்கே, 'தைஇத்திங்கள் தண்ணிய தரினும்' (குறுந்தொகை – 196-4), 'தைஇத் தண்கயம்' (ஐங்குறுநூறு - 84-4), 'தை இத்திங்கள் தண்கயம்' (நற்றிணை – 80-7), 'தைஇத்

திங்கள் தண்கயம் போல' (புறநானூறு-70-6), 'தையும் மாசியும் வையகத்து உறங்கு' (ஔவையாரின் கொன்றை வேந்தன்) முதலிய செய்யுட்பகுதிகள் நினைவிற்கு வருகின்றன. தைத் திங்கள் அவ்வளவு தண்ணிய குளிர்ச்சி உடையதாம். அந்தத் தைத் திங்கள் குளிரில் இரவில் மூன்று மணிக்கு, ஜே.எம். சோமசுந்தரம் பிள்ளை முதலிய அன்பர்கள் பழநி நகர் எல்லை தாண்டும் வரையும் மேளதாள இயங்களுடன் வந்து அடிகளாரை வழியனுப்பினர் எனில், அடிகளாரின் பெருமைக்கு அளவே இல்லையன்றோ?

**அடக்கம் காணும் அவா**

ஞானியார் அடிகளார் 2.2.1942 ஆம் நாள் வண்டிப் பாளையம் தோட்டத்தில் அடக்கம் செய்யப்பட்டார். அவ்வடக்கத்தைக் கண்டு வணங்க வெளியூர் அன்பர்கள் பலரும் தமிழறிஞர்கள் பலரும் தொடர்ந்து வந்து கண்டு வணங்கிச் சென்றனர். இது தொடர்பாக யான் பட்டறிந்த இரண்டு நிகழ்ச்சிகள் வருமாறு:-

மயிலம் மடத்தின் மூல ஆதீனமான பொம்மைய பாளையம் என்னும் ஊரில் 1942 வைகாசியில் நடந்த ஒரு நிகழ்ச்சிக்குச் சென்னை டாக்டர் மா. இராசமாணிக்கனார் வந்திருந்தார். யானும் சென்றிருந்தேன். நிகழ்ச்சி முடிந்ததும், ஞானியார் அடிகளாரின் அடக்கத்தைக் காண வேண்டும் என இராசமாணிக்கனார் என்னிடம் கூறினார். யான் அவரை வண்டிப் பாளையம் அழைத்துச் சென்று அடிகளாரின் அடக்கத்தைக் காண்பித்தேன் அவர் அன்புடன் உருகி வணங்கினார்.

அதே 1942 கோடை விடுமுறையில் புதுச்சேரிக் கல்விக் கழகத்தின் ஆண்டு விழாச் சொற்பொழிவிற்காக டாக்டர் வ.சுப. மாணிக்கம் வந்தார். யானும் கலந்து

கொண்டேன். விழா முடிந்ததும், மறுநாள் காலை, ஞானியாரின் அடக்கத்தைக் காண வேண்டுமென மாணிக்க னார் விரும்பினார். யான் அவரை அழைத்துச் சென்று, திருப்பாதிரிப் புலியூர்ச் சிவன் கோயில் - ஞானியார் மடா லயம் - வண்டிப்பாளையத்திலுள்ள அடிகளாரின் அடக்கம் ஆகியவற்றைக் காண்பித்தேன். அவர் உள்ளம் உருகி வழிபட்டார்.

இராச மாணிக்கனாரும் மாணிக்கனாரும் அப்போது இளம் வயதினர். அந்த இளமையில், புலிசைக்கு நூறுகல் தொலைவிற்குமேல் உள்ள ஊர்களினராகிய இவர்கள் அடி களாரின் அடக்கத்தைக் காண விரும்பினரெனில், அடிகளார் எவ்வளவு பெருமைக்கு உரியவராயிருந்திருக்க வேண்டு மென்பது விளங்கும். மற்றும் அகவை முதிர்ந்த அ. வரத நஞ்சையப் பிள்ளை முதலியோரும் அடிகளாரின் அடக் கத்தைக் கண்டு அஞ்சலி செலுத்தினர்.

## 15. சிவிகையில் செல்லுதல்

ஒருமுறை புதுச்சேரிக் கலைமகள் கழக ஆண்டு விழா வில் ஞானியார் அடிகளார் தலைமை ஏற்றிருந்த பொழுது சிறப்புச் சொற்பொழிவாற்றிய திரு.வி. கலியாண சுந்தர னார், அடிகளார் சிவிகையில் மட்டும் செல்லுதல் பற்றித் தமது உரையிடையே பின்வருமாறு அடிகளாரிடம் வேண்டு கோள் விடுத்தார்:

"அடிகளார் மோட்டார் காரையோ - புகைவண்டி யையோ பயன்படுத்தாமல் சிவிகையில் மட்டுமே செல்லு தல் என்ற பழைய மரபைத் தொடர்ந்து கடைப்பிடித்து

வருவதால் எண்ணற்ற மக்கள் அடிகளாரின் சொல்லமிழ் தத்தை அருந்தும் வாய்ப்பு இல்லாதவராயுள்ளனர். என் போன்றோரும் சிலர் ஊர்மக்களும் அடிகளாரின் உரையை விரும்பிக் கேட்பது போலவே பல ஊர் மக்களும் கேட்டு மகிழ விரும்புவார்கள் அல்லவா?

அடிகளார் சிவிகையிலேயே செல்லுவதால், தொலை வில் உள்ள ஊர்கட்கெல்லாம் - வேண்டியபோதெல்லாம் விரைந்து செல்ல முடியவில்லையே! இன்னும் அடிகளார் சென்னைச்கு வரவே இல்லையே. அடிகளாரின் சொல் உணவை மாந்தித் திளைக்கச் சென்னை மக்கள் மிகவும் ஆவலாய் உள்ளனர். கப்பலில் செல்வதென்றால், தமிழர் கள் வாழும் வெளி நாடுகட்கும் செல்லலாமே. தொலை வில் வாழும் தமிழர்கட்கும் இந்த நல்ல வாய்ப்பு கிடைக்க வேண்டுமே. வெளிநாடுகட்குச் செல்லாவிடினும் உள்நாடு முழுவதற்குமாவது சென்று வரவேண்டும். 'பழைய மரபுப் படி சிவிகையை விடமுடியாது எனில்,' யாங்கள் பெரிய மோட்டார் கார் அமைத்து அதன்மேல் சிவிகையை வைக்க ஏற்பாடு செய்வோம். அடிகளார் சிவிகையில் அமர்ந்த படியே மோட்டார் வண்டி மூலம் இடம் விட்டு இடம் போகலாம். இந்த வேண்டுகோளை அருள்கூர்ந்து ஏற்றுக் கொள்ளல் வேண்டும்'' - என்று வேண்டுகோள் விடுத் தார்.

திரு வி.க. வின் வேண்டுகோளைக் கேட்ட அடிகளார் பின்வரும் கதையைக் கூறித் தமது இயலாமையைத் தெரி வித்தார்.

''ஒரு நாட்டில் வயது முதிர்ந்த அரசன் ஒருவன் ஆண்டு கொண்டிருந்தான். அவன் மகனுக்கு விரைவில் தான் அரசனாக வேண்டுமென்ற அவா மிக்கது. தந்தையோ விரைவில் தலையைக் கீழே போடுவதாகத் தோன்றவில்லை.

எனவே, தந்தையைக் கொன்றுவிட்டுத் தான் அரசனாக வேண்டும் என்று எண்ணி அதற்கு உரிய தக்க நேரத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.

இளவரசன் நிலை இவ்வாறிருக்க, அவ்வூரில் அழகு மிக்க விலை மாது ஒருத்தி இருந்தாள். ஆடல் பாடல்களில் வல்ல அவளைக் கண்டபின், ஒரு கடுந்துறவி, எப்படியாவது அவளை அடையவேண்டுமென்று விரும்பினார். அவளிடம் தம் வேட்கையைத் தெரிவித்தார். அவள் ஏற்றுக் கொண்டு அதற்கென ஒரு நாள் குறிப்பிட்டாள்.

இஃது இவ்வாறிருக்க, அவ்வூரில் உள்ள கிழ மன்னன் அந்த விலை மாது தன் அரண்மனையில் ஒரு நாள் ஆடல் விருந்து அளிக்கவேண்டுமென ஆணையிட்டான். அவ்வாறே குறிப்பிட்டநாளில் அவள் நடனம் ஆடிக்கொண்டிருந்தாள். அந்த ஆட்டத்தை இளவரசனும் பார்த்துக் கொண்டிருந் தான்; துறவியாரும் பார்த்துக் கொண்டிருந்தார்.

எவ்வளவு நேரம் ஆட வேண்டுமோ – அவ்வளவு நேரம் முடிய இன்னும் சிறிது நேரமே எஞ்சியிருந்தது. அதற்குள் அவள் ஆடி ஆடிச் சோர்ந்து போனாள். ஆட் டத்தை நிறுத்தி விடுவாள் போல் தோன்றிற்று. அவளுடைய ஆசிரியனாகிய நட்டுவன் அவளை நோக்கி, இவ்வளவு நேரம் நல்ல கெட்டிக்காரி என்ற பெயருடன் ஆடிக்கொண் டிருந்தாய். ஆட்டம் முடிய இன்னும் சிறிது நேரமே உள் ளது. இப்போது நிறுத்தி விடுவாயாயின், இவ்வளவு நேரம் ஆடியதால் ஏற்பட்ட நல்ல புகழ் கெட்டுவிடும். அதனால் நிலை மாறாமல் தொடர்வாயாக என்று எச்சரித்தான். அவளும் மேற்கொண்டு சிறிது நேரம் ஆடி, உற்ற நேரம் வந்ததும், நல்ல பெயருடன் ஆட்டத்தை முடித்தாள்.

இதைக் கேட்டும் பார்த்தும் இருந்த இளவரசன், இத் தனை ஆண்டுகளாகத் தந்தையுடன் ஒத்துழைத்து நல்ல

இளவரசன் என்னும் நற்பெயருடன் விளங்கி வருகிறோம். தந்தையாரின் ஆயுள் முடிய இன்னும் சிலஆண்டுகளே உள்ளன. எனவே அது வரையும் நல்ல பெயரோடு பொறுத்திருப்போம் எனத் தன் கொலை எண்ணத்தையும் திருத்தி மாற்றிக் கொண்டான்.

இளவரசனைப் போலவே, நிலைமையைக் கவனித்துக் கொண்டிருந்த துறவியார், நாம் இவ்வளவு காலம் உண்மையான நல்லொழுக்கத்தோடு தூய்மையான துறவியாக இருந்து வந்தோம். நாம் உயிருடன் இருக்கப் போவது இன்னும் சிறிதளவு காலமேயாகும். இப்போது போய்த் தீயொழுக்கம் புரிவோமாயின், இவ்வளவு காலமாக நமக்கு இருந்தநற்பெயர் அடியோடுகெட்டுவிடும். அதனால் பொதுமகளை மறந்து விடுவோம் என எண்ணத்தை மாற்றிக் கொண்டார்.

இதுபோலவே, நான் இத்தனையாண்டு காலம் 'மேனா' என வழங்கப்பெறும் சிவிகையிலேயே சென்று வந்தேன். இது எங்கள் ஆதீனத்தின் மரபு. யான் வாழப் போவதோ இன்னும் சில்லாண்டு காலமாகத்தான் இருக்கக்கூடும். இப்போது போய் மோட்டார் வண்டியைப் பயன்படுத்தினால் இவ்வளவு நாளாய்க் காத்து வந்த மரபுப் பெருமை கெட்டுவிடும். எனவே, எனக்கு உள்ள இன்னும் சிறிது காலத்தை யான் மேனாவில் சென்றே கழித்து விடுவேன்.

மற்றும், யான் சிவிகையில் செல்வதால் வழியில் உள்ள சிற்றூர்களையெல்லாம் பார்க்கவும் அங்கே தங்கிச் சொற்பொழிவு செய்யவும் அவ்வூர் மக்களின் விருப்பத்தை நிறைவேற்றவும் முடிகிற தன்றோ'' – என்று கூறி அடிகளார் திரு.வி.க. வின் வேண்டுகோளை நாகரிகமாக மறுத்தார்.

அடிகளார் கருத்தைத் திரு.வி.க. ஏற்றுக்கொண்டார். ''நகரமக்கள் என்னிடம் கேட்டுக்கொண்டதால் மோட்டார் வண்டியில் விரைந்து சென்று நகரங்களை அடைந்து சொற் பொழிவாற்றலாம் என்ற கருத்தில் யான் அடிகளாரிடம் வேண்டுகோள் விடுத்தேன். ஆனால், அடிகளார் கூறுகிற படி, இதனால் சிற்றூர் (கிராம) மக்களைப் புறக்கணிக்க நேரிடும் என்பது உண்மைதான். 'கிராமங்கள் திருந்தினால் தான் உலகம் திருந்தும்' என்னும் காந்தியடிகளின் கருத் துப்படி அடிகளாரின் கொள்கை ஒருவகையில் சரியானதே என்று கூறினார்.

அதன்பின் அடிகளார் சிவிகையிலேயே பலமுறை சென்று வந்தார்; தெற்கே இராமேசுரம் முதலிய ஊர்கட் கெல்லாம் போய்வந்தார்.

இது நடந்தது இற்றைக்கு (1989) ஐம்பது - அறுபது ஆண்டுகட்கு முன்னதாகும். அடிகளார் இப்போது இருந் திருப்பின், ஒருவேளை மோட்டார் வண்டியில் செலவு மேற் கொள்ள ஒத்துக்கொண்டிருப்பாரோ - என்னவோ - தெரிய வில்லை.

## 16. வாழ்க்கை நடைமுறைகள்

ஞானியார் அடிகளாரின் (அன்றாட) வாழ்க்கை நடைமுறையை இப்பகுதியில் காண்பாம்:

### அன்றாட வாழ்க்கை

அடிகளார் விடியல் ஐந்து மணிக்கெல்லாம் எழுந்து காலைக்கடன், நீராடல், கடவுள் பூசனை முதலியவற்றை முடித்துக்கொண்டு ஏழு மணிக்கெல்லாம் பாடம் சொல்ல

ஆயத்தமாகிவிடுவார். நாளேட்டினையும் படித்து முடிப்பார். மாணாக்கர்கள் முறையாக ஏழு மணிக்கெல்லாம் வந்து விடுவர். பாடம் முற்பகல் 11 மணி வரை தொடரும்.

பின்னர் மதிய உணவு கொண்டு சிறிது நேரம் ஓய்வு எடுத்துக் கொள்வார். மீண்டும் பிற்பகல் 2 மணிக்கெல்லாம் பாடம் நடைபெறும். மாலையில் வருபவர் - போபவருடன் உரையாடல் நிகழும். உரையாடலும் ஒரு பாடம்போல் - ஒரு சொற்பொழிவு போல் இருக்கும். மாலையில் சொற்பொழிவு தொடங்கப் பெற்று இரவு 9 மணிவரை நடைபெறும். சொற்பொழிவு இல்லாத நாட்களில் பாடம் இரவு 9மணிவரை நடைபெறும். காண வருபவர்களும் பாடத்தில் கலந்துகொள்வர்.

**விருந்து**

வெளியூர்களிலிருந்து வரும் அன்பர்களுக்கு மதியமும் இரவும் அடிகளார் தாமே உடனிருந்து விருந்தளிப்பார். சிறப்பு நாட்களில் பாயாசம் இடும் பணியை அடிகளாரே மேற்கொண்டதாக எனக்கு நினைவு இருக்கிறது. வருபவர்களை அடிகளார் அன்புடன் வரவேற்பதையும் விருந்தளிப்பதையும் பற்றிக் கோவை கிழார் தமது கட்டுரையில் எழுதியிருக்கும் செய்தி அப்படியே வருமாறு:

**அன்பும் உபசரணையும்**

"மக்கள் யார் வந்தாலும் அன்பு காட்டி இன்சொல் கூறி உபசரணையும் செய்வார்கள். செல்வர், பாமரர், முதியவர், இளைஞர், பெண்பாலர், ஆண்பாலர் - யார் வரினும் நெஞ்சம் ஆர்ந்த இன்சொல்லால் வரவேற்பார்கள். ஆகவே, ஒரு முறை கண்டோர்கள் மறுமுறையும் கண்டு அடிகளின் ஆசி பெறவேண்டு மென்றே எண்ணுவார்கள். வந்தவர்களை வெறும் வாய்ப் பேச்சால் உபசரிப்பதே அன்றி அன்னமும் இட்டு மகிழ்விப்பார்கள்.

தாமே இருந்து ஊட்டுவதை வேறு எந்த ஆதீனத்தில் காண முடியும்? ஒருமுறை நானும் என் நண்பர் ஒருவரும் திருப்பாதிரிப்புலியூர் சென்றிருந்தோம். முன் தகவல் கொடுக்கவில்லை. அடிகள் தாம் நடத்தும் பாட சாலையில் மாணவர்களைப் பரீட்சை செய்து கொண்டிருந்தார்கள். நாங்கள் அவ்வூர்ச் சத்திரத்தில் போய்த்தங்கினோம். எப் படியோ அதனைக் கேள்வியுற்ற அடிகள், எங்களுக்கு ஆள் அனுப்பித் தங்கள் ஆதீனத்துக்கு அழைத்துத் தாமே இருந்து விருந்தளித்தார்கள். மற்றொரு முறை திருவண்ணா மலையில் எங்களுக்குத் தாமே விருந்தளித்த ஓர் அன்புத் தோற்றத்தை என்ன என்று கூறலாம்! அதனை எக்கால மும் மறக்க முடியாது"-

என்பது கோவைகிழாரின் உரை. இவ்வாறு இன்னும் பலர் எழுதியுள்ளனர் - ஒன்று போதுமே. பல ஆண்டு கட்கு முன்கண்டவர்கள் வரினும், அவர்களை நினைவில் வைத்துக் கொண்டு வரவேற்பார்கள். ஒவ்வொருவரையும் தனித் தனியே நோக்கி நலம் விசாரிப்பர்கள். அடிகளாரின் நினைவாற்றலைப் பற்றிக் கோவைகிழார் தம் கட்டுரையில் அறிவித்திருப்பது வருமாறு:

**நினைவு:**

"அடிகளாரது தோற்றம் மிகவும் கம்பீரமானது அதனைக் கண்டு ஆனந்தித்தவர்கள் அவர்களது பதத் திற்கு ஏற்ற ஒரு தோற்றம் என்று எண்ணுவார்கள். ஒரு முறை பார்த்த பிறகு அத்தோற்றத்தை எக்காலமும் மறக்கமாட்டார்கள். அதுபோலவே, அடிகளாரும் ஏனை யோரை ஒரு முறை பார்த்த பின்பு எக்காலமும் மறக்கவே மாட்டார்கள். அவ்விதமான அபார சக்தி வேறெவரிடத்தும் பார்த்தல் அரிது. முதல் முறை அடிகளாரை அடியேன் கண்டது, கோவைக்கு அடுத்த திருப்பேரூர் மாசிமகத் திரு விழாவின்போது. அடிகள் என்னை அறிந்ததும் அப்போது தான். பிறகு பல ஆண்டுகளுக்குப் பின்பு, திருவதிகையில்

சமாசம் கூடினபோது, அடிகள் அந்த ஆண்டு சமாசப் பிரசுரத்தை (தலைமை உரையை) வெளியிட விரிவுரை நிகழ்த்திக்கொண்டிருந்தார்கள். அக்கூட்டத்திற்கு அடியேன் அருகிற் செல்லவே, அடிகள் கண்டவுடன் என்னை விளித்து அழைத்தார்கள். பல ஆண்டுகளுக்குப் பின் உருவம் சிறிது மாறி இருக்கவும், அடையாளம் கண்டுபிடித்தது சிறிது வியப்பாகவே இருந்தது. கூட்டத்திற்குப் பின் பேசியபோது பழைய நினைவு நன்றாக இருந்ததைக் கண்டு பெரும் வியப்புற்றேன். அடிகளாரது நினைவின் பெருமையை எவரும் அளக்க முடியாது''.

என்பது கோவை கிழாரின் கூற்று. அடிகளாரின் உலக அறிவு பற்றிக் கோவைகிழார் கூறியிருப்பதையும் காண் போமே!

**உலக அறிவு**

''ஆதீன கர்த்தர்கள் உலக அறிவில் தாழ்ந்திருப்பது சகஜம். ஆனால் அடிகளோ உலக ஞானம் மிகவும் படைத் தவர்கள். அதனை அவர்கள் பேச்சிலிருந்தே அறியலாம். நாட்டில் ஏற்பட்டு வரும் அரசியல், பொருளியல், சமய இயல், இயக்கங்கள் எல்லாவற்றையும் நன்கு அறிவார்கள். அரசியல் துறையில் ஈடுபட்ட பல பெரியார்கள் அடிகளிடம் வந்து யோசனை கேட்பதுண்டு, பல வழக்குகளையும் விசாரித்துத் தீர்த்து விடுவார்கள். பொதுமக்களுக்கு அடிக ளாரால் இந்தத் துறையில் ஏற்பட்ட பயன் மிகவும் அதிகம். ஆகவே அடிகளிடம் எல்லா மக்களுக்கும் அபரிமிதமான நம்பிக்கை உண்டு. ஆதீனகர்த்தர்களில் உலக வழக்கில் மிகுந்த தேர்ச்சியும் பெரும்பயன் அளிப்பும் கொண்டவர்கள் யார் உளர்?''

**வழக்குகள் மூன்று**

பொது மக்களின் வழக்குகளைத் தீர்த்துவைத்த

அடிகளார் மூன்று முறை நீதிமன்ற வழக்குகளை நேரிட் டுள்ளார்கள். அடிகளார் ஐந்தாம் பட்டம் எய்தியதும் மடத்தோடு தொடர்புடையவரா யிருந்த வேறொருவர் தமக்கே இந்தப்பட்டம் உரியது என்று நீதிமன்றத்தில் வழக்குத் தொடுத்தார். அந்த வழக்கில் அடிகளாரே வென்றார். இது முதல் வழக்கு.

இரண்டாவது வழக்கு:- முதல் பட்டத்து அடிகளார் ஆரணியில் மடமும் முருகன் கோயிலும் அமைத்து இருந் தார். இரண்டாம் பட்டத்து அடிகளார் காலத்திலிருந்து திருப்பாதிரிப் புலியூர் தங்கும் இடமாக இருந்ததால் ஆரணிக்கு அடிக்கடி சென்று கவனிக்க முடியவில்லை; எனவே, ஆரணியில் மடத்தில் தங்கி முருகனுக்குப் பூசனை செய்து கொண்டிருந்தவரின் பின் வந்தவர் மடமும் கோயிலும் தமக்கே உரியன எனப் பொய்யுரிமை கொண் டாடினார். இதனைஅறிந்த ஐந்தாம் பட்டத்து அடிகளார் வழக்கறிஞர் வாயிலாக வேலூர் நீதிமன்றத்தில் வழக்கிட்டு வெற்றிபெற்று மடத்தையும் கோயிலையும் மீட்டார்.

மூன்றாவது:-ஆரணி மடத்தைச் சார்ந்த ஒரு பகுதியில் ஒருவர் பஜனை மடம் நடத்தக் கெஞ்சி வேண்டி இடம் பெற்று நடத்தி வந்தார். பின்னர் அவர் அந்தப் பகுதி தமக்கே உரியதென வாதிட்டார். அப்போதும் அடிகளார் வழக்கறிஞர் வாயிலாக நீதி மன்றத்தில் வழக்குத்தொடுத்து வெற்றி பெற்று அந்த இடத்தை மீட்டார்.

துறவியா யிருப்பினும் பொய்ம்மை வளர இடம் தர லாகா தல்லவா?

**கட்டடத் திருப்பணி**

அடிகளாரின் திருக்கோவலூர் ஆதீனத்திற்கு, திருக் கோவலூர், அறையணி நல்லூர், திருப்பாதிரிப் புலியூர், ஆரணி, திருவண்ணாமலை, சிவகுன்றம், செஞ்சி, சத்திய

விசய நகரம் ஆகிய இடங்களிலும் அருளகங்கள் (மடாலயங்கள்) உண்டு.

அடிகளார் தமது சுற்றுப் பயணத்தின்போது, இந்த இந்த ஊர் அருளகங்களில் தங்கிப் பாடம் நடத்துவது, சொற்பொழிவு ஆற்றுதல் செய்வதோடு, அருளகக் கட்டடங்களைப் பழுது பார்த்துச் சீர்திருத்தும் திருப்பணியையும் மேற்கொள்வார். சிதைந்ததைப் பழுது பார்த்துத் திருத்துதல், சில பகுதிகளைப் பிரித்துப் புதிதாய் அமைத்தல், மதில் சுவர் எழுப்புதல், புதிய பகுதிகள் கட்டுதல் முதலியன நடைபெறும்.

ஆதீனத்திற்குக் கடலூர் மஞ்சக்குப்பத்தில் ஒரு கட்டடம் இருந்தது. அடிகளார் அங்கே சென்று தங்கி அதைச் சீர்செய்தார். பாடங்களும் சொற்பொழிவுகளும் உடன் நடைபெற்றன. அந்தக் காலம் கோடைக் காலம். எனக்குக் கல்லூரியில் தொடர்ந்து மூன்று திங்கள் கோடைவிடுமுறை உண்டு. அப்போது அடிகளார் 'பிரபுலிங்க லீலை' நடத்திக் கொண்டிருந்தார். நான் நாடோறும் தொடர்ந்து சென்று 'பிரபுலிங்கலீலை' பாடம் கேட்டேன். இத்தகைய வாய்ப்பு பலர்க்கும் கிடைப்பதுண்டு.

**விடுமுறை நாட்கள்**

அடிகளார் தம் அருளகத்தில் நடத்தி வந்த பள்ளியில் சனி - ஞாயிறு விடுமுறை கிடையாது. திங்கள் தோறும் அமாவாசை நாளிலும் மறுநாள் பாட்டிமையிலும், மற்றும் முழுநிலாப் பருவத்திலும், மறுநாள் பாட்டிமையிலும் விடுமுறை விடப்பட்டது. இது பழைய காலப் பழக்கமாகும். வெள்ளையர் வந்த பின்னரே சனி - ஞாயிறு விடுமுறை விடப்பட்டது.

**காண்படாத கருவூலம்**

அருளகத்தில் பொருள் (பணம்) வைத்திருக்கும் கருவூல அறை உண்டு. அந்த அறையில் பல்லாண்டுகளாக அடிகளாரின் கால்கள் பட்டதில்லை. அடிகளாரின் தாய் மாமன் பழநியாண்டி ஐயரும் அத்தை அமிர்தம் அம்மை யாருமே அருளகத்தின் வேலைகளை யெல்லாம் கவனித்து வந்தார்கள்; அடிகளாரைப் பெற்றோர் போலவே பேணிக் காத்தனர். அதனால், அடிகளார், வரவு செலவுக் கணக்கு வைப்பு, வேண்டிய பொருள்கள் வாங்குதல் முதலிய வேலைகளுள் எதுவும் இன்றி, (அதாவது குடும்பக் கவலை இல்லாதவர்கள் போல்) பாடம் நடத்துதல் - சொற் பொழிவு செய்தல் ஆகிய தமிழ்ப் பணியும் சமயப் பணியுமே கவனித்து வந்தார்கள். பணத்தைத் தொட்டுக் கையாள் வதற்காக அடிகளாரின் கால்கள் கருவூல அறைக்குச் செல்வதே இல்லை.

இந்நிலையில், அடிகளார் இறுதி எய்தற்கு மூன்று ஆண்டுகட்கு முன்பே மாமா காலமாகிவிட்டார். பின்பு தக்கவர் யாரும் உடன் இன்மையால் அடிகளாரே அருளக மேற்பார்வைப் பொறுப்பையும் கவனிக்க வேண்டிய தாயிற்று. அடிகளாரின் கால்கள் கருவூலத்திற்கும் சென்று வரத் தொடங்கின. அப்போது ஒரு நாள், கருவூலத்தில் இருந்த ஓர் ஆணி அடிகளாரின் ஒரு காலில் தைத்துப் புண்ணாக்கிவிட்டது. இவ்வளவு நாள் ஏன் வரவில்லை எனக் கருவூல அறை வஞ்சம் தீர்த்துக் கொண்டதுபோல் இது நிகழ்ந்துவிட்டது. அடிகளார்க்கு, மாமா மறைந்த மனப் புண்ணோடு,இந்தக் கால் புண் ஆறவும் பன்னாட்கள் தேவைப்பட்டன.

**ஏழை பங்காளன்**

அடிகளார் ஏழை மாணாக்கர் பால் மிக்க இரக்கம்

கொண்டிருந்தார். இப்போது 'சத்துணவுத் திட்டம்' என்கிறார்களே - அப்போதே, தரும பாடசாலையில் பயின்ற ஏழை மாணாக்கர் சிலர்க்கு உணவு அளித்து வந்தார்; செல்வர்களைக் கொண்டு, உடை, புத்தகம் முதலிய வழங்கச் செய்தார். இவ்வாறு இன்னும் பல வகைகளில் ஏழையரின் இன்னல் தீரப் பாடுபட்டார்.

அடிகளாரின் வாழ்க்கை நடைமுறைகள் பலராலும் போற்றப்பட்டு வந்தன.

# 17. சாதி-மதக் காழ்ப்பு இன்மை

வீர சைவத் துறவியாகிய ஞானியார் அடிகளார்க்குச் சாதி - மதக் காழ்ப்பு கிடையாது. வைணவர், சமணர், கிறித்தவர், இசுலாமியர் முதலிய அனைத்து மதத்தினர் பாலும் கசப்போ - வெறுப்போ இன்றி அனைவர்பாலும் அன்பு செலுத்தினார்.

எந்தச் சாதி - மதத்து மாணவர்க்கும் அவரவர் விரும்பும் நூலை அடிகளார் நடத்தினார். கிறித்தவக் கன்னிமார்களும், வைணவம் - கிறித்தவம் - சமணம் - இசுலாமியர் ஆகிய மதங்களைச் சேர்ந்த மாணவர்களும் அடிகளாரிடம் கல்வி பயின்றுள்ளனர்.

**திருவந்திரபுரம்**

அடிகளார், வைணவர்களின் வேண்டுகோட்கு இணங்கி, திருப்பாதிரிப்புலியூருக்கு மேற்கே 5 கி.மீ. தொலைவில் உள்ள திருவயிந்திரபுரம் என்னும் வைணவத் திருப்பதிக்குப் போந்து, 'மார்கழித் திங்கள்' என்னும் ஆண்டாளின் திருப்பாவைப்பாடலுக்கு வைணவ மரபு வழுவாமல் விளக்கம் கூறி அரியதொரு சொற்பெருக்கு

ஆற்றினார். அன்பர்களின் மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. அடிகளாரின் கழுத்தில் ஒரு நீண்ட மாலையை அணிவித்தனர். உடனே, அடிகளார், 'நான் நெடுமாலை அடைந்தேன்' என இருபொருள் (சிலேடை) தோன்றக் கூறினார். 'நெடு மாலை' என்பது நீண்ட பூ மாலையையும் குறிக்கிறது - நெடியோனாகிய திருமாலையும் குறிக்கிறதன்றோ?

### புதுவைக் கிறித்துவக் குடும்பம்

அடிகளார் புதுச்சேரிக் கலைமகள் கழகத்திற்கு ஒரு முறை சென்றிருந்தார். அப்போது, அவ்வூரில் பெருஞ் செல்வமும் பெருந் தன்மையும் உடையவரும் ரோமன் கத்தோலிக்கக் கிறித்துவ மதத்தைச் சார்ந்தவருமாகிய சின்னையா - ஞானப் பிரகாச முதலியார் அடிகளாரை அழைக்க அடிகளாரும் ஏற்றுக்கொண்டார். முதலியாரின் 'மங்களவாசம்' என்னும் மாளிகையில் அடிகளார் தங்கினார். பின்னர், முதலியாரின் விருப்பத்தின்படி வைணவம் சார்ந்த 'சீதா கல்யாணம்' என்னும் தலைப்பில் சொற்பொழிவாற்றினார். அப்போது பெற்ற பெருமைக்கு அளவே இலது.

### சாக்கியர்

அந்தக் காலத்தில், சைவ சித்தாந்த மகா சமாசத்தின் தலைவராயிருந்தவரும் சித்தாந்த சரபம் - அஷ்டாவதானம் என்னும் சிறப்புப் பட்டம் பெற்றிருந்தவரும் ஆகிய பூவை கலியாண சுந்தரமுதலியார் என்பவர், ஞானியார் கிறித்தவர் வீட்டில் போய்த் தங்குவதும் வைணவச் சார்புச் சொற்பொழிவுகள் செய்வதும் பொருத்தமல்ல என்று கண்டித்துப் போர்க் கொடி உயர்த்தினார். அன்பர்கள் மூலம் இதைக் கேள்வியுற்ற அடிகளார் பின்வருமாறு கூறினார்.

சாக்கிய நாயனார் என்பவர் அறுபத்து மூன்று சைவ நாயன்மார்களுள் ஒருவர். இவர் சமணர்க்கு இடையே வாழ்ந்து வந்தார்; ஆனால் சைவ மதப் பற்றுடையவர். இவர் சைவம் சார்வதை விரும்பாத சமணர்கள் இவரைக் கண்டித்தனர். எனவே, இவர், சமணர் மனம் மகிழும்படி, சிவன் திருமேனியைக் கல்லால் அடித்துக்கொண்டிருந்தார். அதாவது, ஒவ்வொரு கல்லையும் ஒவ்வொரு மலராக உள்ளத்தில் கற்பனை செய்துகொண்டு சிவனுக்கு மலர் வழிபாடு (அர்ச்சனை) செய்வதாக எண்ணிக் கொண்டு அவ்வாறு செய்தார். இவர் வெளிக்குச் சமணராய்த் தெரிந் தாலும் உள்ளத்தால் சைவராய் விளங்கினார். இதனைச் சேக்கிழாரின் பெரிய புராண நூலில் உள்ள

"எந்நிலையில் நின்றாலும் எக்கோலம் கொண்டாலும்
மன்னியசீர்ச் சங்கரன்தாள் மறவாமை பொருள் என்றே
துன்னிய வேடந்தன்னைத் துறவாதே தூய சிவம்
தன்னைமிகும் அன்பினால் மறவாமை தலை நிற்பார்"

என்னும் (3646) பாடலால் அறியலாம். ஞானியார் அடிக ளார், இந்த வரலாற்றைக் குறிப்பிட்டு, நாம் எந்த மனத் தினருடன் பழகினும் சைவப் பற்றுடையவராய் இருத்தல் போதுமானது என்று கூறினார். அன்பர்கள் கேட்டு ஆறு தல் உற்றனர். பின்னர்ப் பூவை.கலியாணசுந்தர முதலி யார், அதன் பிறகு வேலூரில் நடைபெற்ற சமாச மாநாட்டிற்கு வராதொழிந்தார்; சமாசத் தலைமைப் பதவியையும் துறந்தார்; என்னே இவரது மதக் காழ்ப்பு!

**நாவுக்கரசர்**

அடிகளார், ஒரு சமயம் தஞ்சை மாவட்டம் ஆடு துறைக்கு அடுத்த வடமட்டம் என்னும் பெயரும் உடைய வேதமடம் என்னும் இடம் சென்றார். வடமட்டம் சமீன்

தார் திருவேங்கடம் பிள்ளை அன்புடன் வரவேற்றார், வேதமடம் வாகீச பக்த பத சேகர சபை' என்னும் சபையின் முதல் ஆண்டு விழா 3-1-1919 முதல் மூன்றுநாள் அடிகளார் தலைமையில் நடைபெற்றது.

அவ்விழாவின் ஒரு கூறாக, சச்சிதானந்தம் பிள்ளை 'மாற்று மதம் புகுந்தவர் விரும்பினால் அவரை மீண்டும் சைவத்தில் சேர்த்துக் கொள்ளலாம்' - என்னும் ஒரு தீர்மானம் கொண்டு வந்தார். அது காலை, கும்பகோணம் புலவர் வேங்கட ராம ஐயர், 'அவர் மீண்டும் மாற்று மதம் புகக் கூடும் - அதனால் அவரைச் சேர்த்துக் கொள்ளலாகாது எனக் கண்டனத் தீர்மானம் கொண்டு வந்தார். இதைப் பலரும் ஆதரித்துப் பேசினர். பின்னர், திரு.வி. கலியாண சுந்தரனார், 'மாற்று மதம் புக்கவர் வரின் சைவத்தில் சேர்த்துக் கொள்ளலாம்; மீண்டும் ஒரு முறை அவர் மாற்று மதம் புக்குத் திரும்பிச் சைவத்திற்கு வரின் சேர்த்துக் கொள்ள வேண்டா' - என ஒரு திருத்தத் தீர்மானம் கொண்டு வந்தார். இது ஏற்றுக் கொள்ளப் பட்டது.

இந்தக் குழப்ப உரைகள் முடிந்தபின், அடிகளார் முடிவுரை கூறலானார்கள்: 'பெண்மணியாகிய திலகவதியம்மையார், மாற்று மதமாகிய சமணம் புக்கிருந்த தம் தம்பி நாவுக்கரசரை மீண்டும் சைவத்திற்குவரச் செய்தார்; சைவ உலகம் அதை ஏற்றுக்கொண்டு நாவுக்கரசரைப் போற்றுகிறது. ஆடவர்களாகிய நாமோ, மாற்று மதம் புக்கவரை மீண்டும் ஏற்றுக் கொள்வதா-இல்லையா - என ஆராய்ச்சி செய்து கொண்டுள்ளோம் - துணிந்து ஏற்றுக் கொள்ளும் உள்ள வலிமை நமக்கு இல்லை' - என்று அடிகளார் கூறியபோது, அனைவர் கண்களும் மகிழ்ச்சித் துளியைச் சிந்தின. அடிகளார் மதக் காழ்ப்பு அற்றவர் என்பதற்கு இது ஒரு சிறந்த சான்று அல்லவா?

அடிகளார் சிறப்பை அறிந்த சமீன்தார், தமது நினைவாக அடிகளார்க்கு அழகிய பெரிய சிவிகை ஒன்றைச் செய்து தந்தார். அதனை இப்போதும் புலிசை அருளகத்தில் காணலாம்.

## இரு மாதர்

ஒருமுறை திருக்கோவலூரில் அடிகளார் தலைமையில் 'தியாகி' இதழ் ஆசிரியர் இராம. சடகோப ஐயங்கார். 'இராமர் புருஷோத்தமர்' என்னும் பொருள் பற்றிச் சொற்பொழிவாற்றினார். அவர் தமது பொழிவில், இராமர் ஒரே சொல்லும் ஒரே வில்லும் ஒரே இல்லும் உடையவர்: ஒரே இல் (மனைவி) உடையவர் என்பதற்குச் சான்றாவது இலங்கை அசோக வனத்தில் சீதை இருந்தபோது, அங்கு வந்த அநுமனிடம்,

"வந்தெனைக் கரம் பற்றிய வைகல்வாய்
இந்த இப்பிறவிக்கு இரு மாதரைச்
சிந்தை யாலும் தொடேன் என்ற செவ்வரம்
தந்த வார்த்தை திருச்செவி சாற்றுவாய்"-

என்னும் உரையே யாகும்—என்று ஒரு கருத்துக் கூறினார். 'இரு மாதர்' என்பதற்கு இரண்டு பெண்கள் என்று பலரும் பொருள் கூறுவர். 'இரு மாதரைத் தொடேன்' என்பது உன்னைத் தவிர இரண்டாவது பெண்ணைத் தொடேன் என்ற கருத்தை உணர்த்த முடியாது. இரண்டு மாதர் என்பது வேறு, இரண்டாவதும ாதர் என்பது வேறு இந்தக் கருத்தை அடிப்படையாகக் கொண்டு, அடிகள் பின்வருமாறு முடிவுரையில் அறிவித்தார்:-

"ஆடவருள் சிறந்தவராகிய இராமர், இரண்டாவது பெண்ணைத் தொடேன் என்று கூறல் அவ்வளவு சிறப்பாகாது. அவர்மேல் சீதை ஐயங்கொண்டு, இரண்டாவது

பெண்ணை விரும்பேன் என்று கூறியதை நினைவு செய் என்று அநுமனிடம் கூறுவதும் இராமரது பெருமைக்கும் சீதையின் பண்புக்கும் பொருந்தாது. எனவே, இதன் உண்மையான பொருளைக் காணவேண்டும். திருமாலுக்குச் சீதேவி, பூதேவி, நீளாதேவி என மூன்று 'சக்திகள்' உண்டு. திருமால், மனித அவதாரங்கட்குள் இந்த இராம அவ தாரத்தில், சீதேவியாகிய சீதையை மட்டும் மண்ணுலகிற்கு வரச் செய்தார். பூதேவி, நீளாதேவி என்னும் இரு மாத ரையும் வரச் செய்யவில்லை. அதனால், அந்த இரு மாதரையும் நினையேன் என்று உள்பொருள் வைத்துக் கூறனார். எனவே, வேறு பெண்ணை விரும்பேன் என இராமர் கூறியதாகக் கொள்வது அவருடைய பெருமைக் குப் பொருந்தாது''-என்று அடிகளார் அரிய விளக்கம் தந்தார். செவிமடுத்த அன்பர்கள் தம் வயம் இழந்து மகிழ்ச்சி மேலிட்டனர்.

வீரசைவராகிய அடிகளார் பிறமத நூல்களையும் படித்து ஆராயாது இருந்திருப்பின் இத்தகைய சிறந்த கருத்துகளைக் கூற இயலுமா? எனவே, அடிகளாரின் மதக் காழ்ப்பு இல்லாப் பண்பு பெரிதும் பாராட்டத் தக்கது.

**திருவிளக்கு**

அடிகளாரிடம் சமயப் பகைமை இல்லை என்பதை, அடிகளாரின் சொற்பொழிவுகளைக் கேட்ட பின்பு, 'திரு விளக்கு' என்னும் திங்கள் வெளியீடு, 1939 – சூன் – பிரமாதி – வைகாசி வெளியீட்டில் பின்வரும் கட்டுரையை வெளியிட்டது.

**'சென்னையில் ஞானியார் சுவாமிகள்'**

''திருக்கோவலூர் ஆதீனம் – திருப்பாதிரிப் புலியூர் மடாலயத் தலைவர் உயர்திருவாளர் ஞானியார் சுவாமிகள்

சென்னையை யடுத்த கோவூர் சிவாலயத்தில் நடை பெற்ற திருவிழாவை முன்னிட்டுச் சென்ற திங்கள் இறுதி யில் அவண் போந்து, பத்து நாட்கள் கேட்பவர் செவியும் உள்ளமும் மகிழச் சொற்பொழிவாற்றினார்.

பல அன்பர்கள் வேண்டுகோளுக்கு இணங்கி, அவர் இப்போது மயிலாப்பூரில் வந்திருப்பதாக அறிகிறோம். பல ஆண்டுகளாகப் போதிய உணவும் உரமும் இல்லாமையால், சென்னைத் தமிழர்கள் உள்ளத்தில் வாடிக்கிடந்த 'தமிழ்ப்பயிர்' ஞானியார் அவர்களின் சொன் மாரியினால் மீண்டும் தழைத்தோங்கும் என்று நம்பு கிறோம். ஆம்; 'சைவப்பயிர்' என்னாது வேண்டுமென்றே தான் 'தமிழ்ப்பயிர்' என்று சொன்னோம். ஞானியார் ஒரு சைவ மடத் தலைவராயிருந்த போதிலும், அவரு டைய சொற்பொழிவுகளில் சமயப் பகைமை காண்பது அரிது. அவருடைய பேருரைகள் எல்லாச் சமயிகளும் உவந்து கேட்கக் கூடியதாயிருக்கும். சுருங்கச் சொன்னால், அவைகளில் தமிழ் மணமே மிகுந்து கமழும்.

ஞானியார் காலத்திலேயே உயிர் வாழ்ந்திருக்கும் பேறு பெற்ற நாம், அவருடைய சொற்பொழிவுகளைக் கேட்காமல் அசட்டையாயிருந்தால், அது நம் வாழ்க்கை யில் பயன்படுத்திக் கொள்ளாமல் இழந்துவிட்ட சிறந்த தருணங்களில் ஒன்றாகும். பின்னால் அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டி வரும்.

ஞானியார் சுவாமிகள் தமிழ் நாட்டிற்குக் கிடைத்தற் கரிய ஒரு பொக்கிஷமாகும். அதைப் போற்றி வளர்த்துப் பயன்படுத்திக் கொள்வது தமிழர் கடமை. "என்னால் அழியாப் பதம் தந்தாய், யான் அது அறியாது கெட்டேன்" என்று பிறகு வருத்தப்படுவதில் பயன் இல்லை".-

என்பது 'திரு விளக்கு' இதழில் வந்த உண்மையான பாராட்டுரையாகும்.

சைவச் சொற்பொழிவு செய்யினும், வேறு சமயப் பகைமை கலவாததால், அதைச் சைவச் சொற்பொழிவு என்று சொல்வதனினும், தமிழ் மணம் கமழும் சொற் பொழிவு என்று கூறுதலே பொருந்தும் என்பது திருவிளக்கு இதழ் ஆசிரியரின் கருத்து.

**கிறித்தவத் துறவியர்**

கிறித்தவத் துறவியாகிய (Rev. Father) ஏசுதாஸ் என் பவரும், மரியதாஸ் என்னும் கிறித்தவரும் அடிகளாரிடம் 'சிவஞான போதம்' என்னும் நூல் பாடம் கேட்டனர். அடிகளார் இவர்களைப் பற்றிப் பிறரிடம் குறிப்பிடும் போது, 'அப்பாலும் அடிச்சார்ந்த அடியார்க்கு அடியேன்' என்ற சுந்தரரின் திருத்தொண்டத் தொகை அடியை நினைவுபடுத்துவாராம்.

**சகசானந்தா**

சுவாமி சகசானந்தா என்பவர் 'அரிசன' இனத்தைச் சேர்ந்த துறவி. சிதம்பரத்துக் கோயிலில் அரிசனர் செல்ல முடியாதிருந்த காலத்தில் 'நகருக்கு மேற்கே ஒரு நடராசர் கோயில் கட்டி அரிசன மக்களை வழிபடச் செய்தவர். சிறந்த கல்வியும் ஒழுக்கமும் பொதுப்பணி ஈடுபாடும் உடையவர். அரிசனராகிய இவரைச் சாதி வேற்றுமை பாராட்டாது, ஞானியார் அடிகளார் தம் அருளகத்திற்கு அழைத்து அவரது பணியைப் பாராட்டிச் சிறப்பு செய் தார்.

இது காறும் கூறியன கொண்டு, அடிகளாரின் சாதி மதக் காழ்ப்பு அற்ற பெருந்தகைமை உள்ளங்கை நெல்லிக் கனியாய்ப் புலப்படும்.

# 18. இன்னாசெய்தாரை ஒறுத்தல்...?

**காரைக்குடியில் காழ்ப்பு**

அடிகளார் 1919- கார்த்திகை பத்தாம் நாள் காரைக் குடி அடைந்தார். ஆங்கு நாட்டுக் கோட்டை நகரத்துச் செட்டியார்கள் அடிகளாரைச் சிறந்த முறையில் வர வேற்றுப் பெருமைப் படுத்தினர், அளவு கடந்த பணிவிடை களும் போற்றுதலும் செய்தனர்.

காரைக் குடியில் அடிகளார் 'மணிவாசகர்' என்னும் தலைப்பில் மூன்று நாட்கள் சொற்பொழிவு முழக்கம் செய்து அனைவரையும் கவர்ந்தார். அன்பர்களின் போற்று தலுக்கு அளவே இல்லை. இஃது இருக்க,-

காரைக்குடியில் பராசக்தி - அம்பல வாண நாவலர் என்னும் பெரியார் ஒருவர் இருந்தார். அவர் செட்டிமார்க ளால் சிறப்பிக்கப் பெற்றவரே. அப்போது ஞானியார் அடி களார்க்கு நடந்த பெருஞ் சிறப்புகளைக் கண்டு உள்ளத் தில் காழ்ப்புக் கொண்டார். தம் மாணவர்களைக் கொண்டு அடிகளாரைத் தூற்றித் துண்டறிக்கை வெளியிட்டார். அடிகளார் கூறும் கருத்துகள் பொருந்தா - அவர் உரையை யாரும் கேட்கலாகாது - என்றெல்லாம் எழுதப்பட்டுக் கையெழுத்து இல்லாத மொட்டைத் துண்டு அறிக்கை வெளிவந்தது.

ஞானியார் அடிகளாரிடத்தில் ஆழ்ந்த அன்பு கொண்ட ஆற்றூர். சுப்புராய ஐயர் என்பவர், அந்த மொட்டை அறிக்கையைப் பொறாதவராய்ப் பதில்துண்டு அறிக்கை வெளியிட்டார். அதில், 'மொட்டைத் துண்டு அறிக்கையில் உள்ள செய்திகள் உண்மையல்ல. உண்மையாயின் கீழே கையெழுத்து இட்டிருப்பார்களே. 'யாம் கூறுவதில் ஏதே

னும் ஐயப்பாடு இருப்பின், நேரில் வந்து வினவின் விளக்கு மாற்றால்விளக்குதும்' என்று எழுதிக் கையெழுத்துப்போட்டு வெளியிட்டார். விளக்குமாற்றால் விளக்குதும் என்பதற்கு விளக்க வேண்டிய முறையில் விளக்குவோம் என்பது பொருள். ஆனால், அதில், விளக்குமாற்றுக் கட்டையால் - அதாவது - துடைப்பக் கட்டையால் அடிப்போம் என்னும் குறிப்புப் பொருளும் மறைந்து கிடக்கிறது. இந்த அறிக்கையும் கூட்டத்தில் வழங்கப்பட்டது.

இதையறிந்த ஞானியார் அடிகளார் பெரிதும் மனம் கலங்கி வருந்தினார். சுப்புராம ஐயரை நோக்கி இவ்வாறு மறு அறிக்கை வெளியிடலாமா - அறிக்கை வெளியிடுவது நமக்கு அழகன்று.

> "இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
> நன்னயம் செய்து விடல்" (314)

என்னும் திருக்குறளை யறிந்த தாங்கள் இவ்வாறு செய்ய லாமா? இந்தப் பழி என்னையே சாருமன்றோ எனக்கூறி வருத்தம் தெரிவித்தார்.

அடிகளாரின் பெருந் தன்மையான இந்த வருத்த உரை, எரிகிற நெருப்பில் நெய் வார்த்தாற்போல் அன்பர் களின் உள்ளங்களில் மேலும் அன்பைப் பெருக்கிற்று.

**பலாப் பழப் பண்ணி**

ஒருமுறை ரெட்டியார் ஒருவர் தமது பலாமரத்து வேர்ப் பலாப் பழம் ஒன்றை ஓர் ஆள் மூலம் அடிகளார்க்கு அனுப்பினார். அதை முருகனுக்குப் படைக்க வேண்டுமாம். அந்தப் பெரிய பலாப்பழத்தைத் தூக்கிக் கொண்டு வந்த கல்லாத ஆள், அடிகளாரை நோக்கி, 'இந்த பெரிய பண்ணியை என்னால் தூக்கிக் கொண்டு வரமுடியவில்லை' என்றானாம். பலாப் பழத்தைப் 'பண்ணி' (பன்றி) என்று குறிப்பிட்டான்.

அதைக் கேட்ட அடிகளார் அவனை இழிவுபடுத்த வில்லை; புன்முறுவல் பூத்தார். பண்ணியைக் கடவுளுக்குப் படைக்க நாங்கள் கண்ணப்பர் இல்லை என்று கூறி அவனை திரும்ப எடுத்துக்கொண்டு போகும்படி கூறினார். மற்றும், அவனுக்கு உணவளித்து, சிறிதளவு காசும் கொடுத்தனுப்பினார். அவன்மேல் இரக்கம் காட்டினார்.

இதையறிந்த ரெட்டியார், சில பலாப் பழங்களைத் தாமே வண்டியில் ஏற்றிக்கொண்டு வந்து அடிகளார்க்குத் தந்து பெருமை பெற்றார்.

**கும்பகோணத்தில் குழப்பம்**

கும்பகோணத்தில் உள்ள ஓர் ஆதீன மடத்தார், அந்த மடம் இருக்கும் தெருவில் ஞானியார் அடிகளார் பல்லக்கில் செல்லலாகாது என மறித்தனராம். அடிகளாரின் அன்பர்கள் செல்வோம் என்று அடம் பிடிக்க அம்மடத்தார் கூடாது என்று அடம் பிடிக்கப் பெருங்குழப்பம் ஏற்பட்டதாம். அடிகளார் தம்மவரை நோக்கி, அவர்கள் மறுப்பதால் நாம் அத்தெரு வழியே செல்லவே கூடாது என்று தடுத்து வேறு வழியாகச் சென்றாராம். பிறகு ஒரு முறை, இரவில் அடிகளார் பல்லக்கில் உறங்கிக் கொண்டிருந்தபோது, அன்பர்கள் வேண்டுமென்றே, அடிகளார் அறியாமல், அத் தெரு வழியே பல்லக்கைச் செலுத்திச் சென்றனராம்.

தமிழ்நாட்டு ஞானியாராகிய தமிழர் தமிழ்நாட்டுத் தெரு ஒன்றில் செல்லக் கூடாது என்று ஒரு சாரார் இடை மறித்தது மிகவும் இரங்கத் தக்க தன்றோ? துறவிகட்குள் வேறுபாடா?

ஆனால், ஞானியார் அடிகளாரிடம் துறவிகட்குள் உயர்வு தாழ்வு காணும் இழிதகைமை இருக்கவில்லை. புதுச்சேரிக்கு வந்தபோதே, ஆங்குள்ள அம்பலத்தாடையர்

மடத்துக்குச் சென்று, அம்மடத்துத் துறவியுடன் அளவளா விச் சென்றுள்ளார்.

மற்றும், சிவஞான பாலைய சுவாமிகளைத் தலைமை யாகக் கொண்ட மயிலம் மடத்திற்கும் அடிகளார் சென்றி ருக்கிறார். அங்கே பாலைய சுவாமிகள் அன்புடன் வர வேற்று உரிய சிறப்புகள் செய்தார். அடிகளார் சில நாட் கள் அங்கே சொற்பொழிவாற்றித் தமிழ்மணம் கமழச் செய்தார்.

அடிகளார் திருவண்ணாமலைக்குச் சென்றிருந்த போது. இரமணானந்த சுவாமிகளைப் (ரமண ரிஷியைப்) பார்க்க விரும்பினார். இரமணர் அப்போது மலை உயரத் தில் உள்ள கந்தாசிரமத்தில் தங்கியிருந்தார். ஞானியார் அவ்வளவு உயரம் ஏறமுடியாமையால் இரமணரை இன் னும் மலை இறக்கத்தில் உள்ள 'விருப்பாக்ஷி' குகைக்கு அழைத்து வந்தார்கள். ஞானியார் கையுறையுடன் சென்று இரமணரைக் கண்டு அளவளாவினார்.

கோவை சார்ந்த பேரூர்ச் சாந்தலிங்க சுவாமிகளின் மடத்திற்குச் சென்று சிறப்புரை ஆற்றியுள்ளார். அடிகளா ரிடம் எவரிடமும் காழ்ப்பு கொள்வதோ, உயர்வுத் தாழ்வு கருதுவதோ இல்லை என்பது இதுகாறும் கூறியவற்றால் புலனாகும்.

மற்றொரு செய்தி ஈண்டு மிகவும் குறிப்பிடத்தக்கது. ஞானியார் அடிகளார் ஐந்தாம் பட்டத்துத் தலைவராய்ப் பட்டம் ஏற்றதும், ஞானியார் மடாலயத்தோடு தொடர் புடையவரா யிருந்த மற்றொருவர், ஐந்தாம் பட்டப்பதவி தமக்கே உரியது என நீதி மன்றத்தில் வழக்குத் தொடுத் தார். ஆனால், வழக்கில், இந்த ஐந்தாம் பட்டத்து அடிகளாரே வெற்றி பெற்றார். தமிழ்நாடு செய்த தவப் பயனாகும் இது. இந்த அடிகளார் தலைமை ஏற்றிரா

திருப்பின் நாட்டில் இவ்வளவு அறிஞர்கள் தோன்றி யிருக்க முடியுமா? இவ்வளவு உரையமிழ்தம் மக்கட்குக் கிடைத்திருக்குமா? பன்னூறாயிரவர் அறநெறியைப் பின் பற்றி ஒழுக வாய்ப்பு ஏற்பட்டிருக்குமா?

ஞானியார் அடிகளார் தம்மை எதிர்த்து வழக்கில் தோல்வியுற்றவரையும் அருளகத்திற்கு அழைத்து நன் முறையில் வரவேற்றுச் சிறப்பு செய்துவந்தார்கள்.

இதுகாறும் கூறியவற்றால், அடிகளார், எவரிடமும் காழ்ப்பு கொள்வதோ - உயர்வு தாழ்வு கருதுவதோ இல்லை என்பதும், இன்னா செய்தாரை அடிகளார் ஒறுத்தல் என்பது அவர்க்கு இனிமையே செய்தலாகும் என்பதும் நன்கு விளங்கும்.

## 19. அடிகளாரின் சிறப்புப் பண்புகள்

இந்நூல் முழுவதும் அங்கும் இங்குமாக—பரவலாக— அடிகளாரின் சிறப்புப் பண்புகள் விரிவாக விளக்கப்பட் டுள்ளன. மலர்களினின்றும் தேனீ தேன் உறிஞ்சித்தேன் கூடுகட்டல் போன்று, மற்ற தலைப்புகளிலிருந்து அடிக ளாரின் சிறப்புப் பண்புகளைத் தேர்ந்தெடுத்துத்தொகுத்து இவண் கருத்துக் கூடு கட்டலாம்.

ஞானியார் அடிகளார் இனிய முகத்துடன் காட்சி யளிப்பார். குளிர்ச்சியாகப் பேசுவார். யாரும்-எப்போதும் சென்று காணலாம்.

''காட்சிக்கு எளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்
மீக்கூறும் மன்னன் நிலம்'' (386)

என்னும் குறட்பாவிற்குச் சிறந்த இலக்கியம் அடிகளார் எனலாம்.

வருபவர்க்குத் தாமே உடனிருந்து விருந்தோம்பும் பண்பு அடிகளாரிடம் அமைந்திருந்தது. அவர் பரிமாறவும் செய்வார். ஒவ்வொருவரையும் தனித்தனியே நலம் விசாரிப்பார்.

இலவசப் பாடம் யார்க்கும் எப்போதும் நடத்துவார். அழைப்பவர்கட்கு மறுப்புக் கூறாமல் சென்று சொற்பொழிவு ஆற்றுவார். ஐந்து மணி நேரம் பேசினும், இடையில் நீர்கூடப் பருகார்.

சாதி சமயப் பகை அடிகளாரிடம் இல்லை. யாவர்க்கும் ஒத்த மதிப்பு அளிப்பார். சொற்பொழிவாளர்கட்குள் ஏற்படும் முரண்பாட்டைத் தமது தலைமை யுரையில் நேர்ந்து நிரவி அமைதி செய்வார்.

“இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்துவிடல்” (314)

என்னும் குறட்பாவிற்கு ஏற்பத் தமக்கு இன்னா செய்தார்க்கும் இனியவே செய்வார்.

பல்லாண்டுகட்கு முன்பு பார்த்தவர்களையும் நினைவு செய்து அடையாளங் கண்டுகொண்டு அருள்புரிவார்.

துறவியர்க்குள் நீ பெரியவனா–நான் பெரியவனா–என்ற பாகுபாடு இருக்கும் இவ்வுலகில், மற்ற துறவியரின் மடங்களுக்கும் சென்று அவர்களைக் காண்பார்.

உள்ளத்தில் ஒன்று–பேச்சில் வேறொன்று–செய்கையில் மற்றொன்று–என்னும் வேறுபாடு சிறிதும் இன்றி மூன்றும் (மனம்–வாக்கு–காயம்) ஒத்து இயங்குவதை அடிகளாரின் பேராண்மையில் காணலாம்.

பிறர்க்கு உணவு அளிப்பதன்றி, ஏழை எளியவர்கட்குப் பணமும் நூல்களும் தந்து உதவுவதும் அடிகளாரின் தனிப் பண்பாகும்.

அடிகளாரின் இமாலயச் சிறப்புப் பண்பு ஒன்றைக் குறிப்பிடின், மிகவும் வியப்பு அளிக்கும். அவர் சொற்பொழிவுகளின் இடையே, தம்மைக் குறிப்பிட 'அடியேன்' என்றே கூறிக் கொள்வார். இவண்,'யாவர்க்கும் அடியேன்' என்று பாடிய சுந்தரரின் நினைவு வருகிறது.

அடிகளார் நன்றி பாராட்டுவதில் சிறந்த பண்பாளர். தம் தமிழாசிரியர் சாமிநாத ஐயரின் பெயரைத் தமது அருளகத்து நூல் நிலையத்திற்கு இட்டு, 'சாமிநாத நூல் நிலையம்' என வழங்கச் செய்தார். அந்த ஆசிரியரின் மகனாகிய முத்துக் கிருஷ்ண ஐயரைத் தம் சொந்தச் செலவில் பி.ஏ. (B.A.) வரையும் படிக்க வைத்தார். அடிகளாரின் சிறப்புப் பண்புகள் இன்ன பிற-இன்ன பிறவாம்.

# 20. இரங்கல் உரைக்கட்டுரைகள்

தவத்திரு ஞானியார் அடிகளார் மறைந்தபின், கட்டுரைகள் வாயிலாகவும் சிற்றுரைகள் வாயிலாகவும் அன்பர் பலர் - அறிஞர் பலர் விடுத்துள்ள இரங்கல் செய்திகளுள், முதலில் கட்டுரை வாயிலாக உள்ள ஐந்தின் சுருக்கத்தை மட்டும் காண்போம். இவற்றைக் காணின், யான் (சு.ச.) சொல்லாத செய்திகள் எல்லாம் இவற்றின் வாயிலாக அறியப்படும். யான் ஈண்டு எழுதுவதற்குப் பதிலாக, அறிஞர்களின் உரைகளை இங்கே தருவேனாயின், யான் அடிகளாரைப் பற்றி இப்போது வெளியுலகிற்குத் தெரிவிப்பதாகவே பொருள்படுமன்றோ? அல்லது, பலருடைய

உரைகளைத் தருவதன் மூலம், யானும் அறிஞர் பலரும் சேர்ந்தும் இந்நூலை எழுதியதாகக் கொள்ளினும் கொள்ளலாம், இனிச்சில கட்டுரைகள் வருமாறு:-

**ஞானியார்**

(திரு.வி.க.)

“.... .. தமிழ்நாட்டில் எத்துணையோ மடங்கள் உள்ளன. அவை என்னை ஈர்த்தனவோ? இல்லை. அம்மடங்களுள் ஒன்றாகிய ஞானியார் மடம் மட்டும் என்னை ஈர்க்குமோ? பின்னை என்னை ஈர்த்தது எது? சுவாமிகளின் பரந்த கலையொளி.

ஞானியார் சுவாமிகள் தென்மொழியில் பெரும் புலமை வாய்ந்தவர்; வடமொழியில் புலமையுடையவர். சுவாமிகட்கு ஆங்கிலமும் தெரியும். இவை எல்லாவற்றிற்கும் மேலாகச் சுவாமிகளிடத்தில் இயற்கைப் புலமை அமைந்திருந்தது.

சுவாமிகளை யான் முதல் முதல் 1913-ஆம் ஆண்டிலே வேலூரிலே சைவ சித்தாந்த மகா சமாச ஆண்டு விழா மேடையில் கண்டேன். அந்நாள் நன்னாள்.

ஆறுமுக நாவலரை யான் கண்டதில்லை. அவரது நாவன்மையைப் பிறர் சொல்லக் கேட்டிருக்கிறேன். இளமையில் யான் கண்ட நாவலர் கதிரைவேற் பிள்ளையே. ஞானியார் சுவாமிகள் பேச்சைக் கேட்ட பின்னை, தமிழ் நாட்டில் மற்றுமொரு நாவலர் இருத்தலைக் கண்டேன். தமிழ் நாட்டிலும் கிளாட்சன்கள், சுரேந்திரர்கள் இருக்கிறார்கள் என்று என் நெஞ்சம் எண்ணியது.

ஞானியார் சுவாமிகள் அறப்பள்ளித் தலைமை ஏற்று அரை நூற்றாண்டு ஆயபோது, அப்பள்ளிச் சார்பில் பொன் விழா(1939) கொண்டாடப்பட்டது. அவ்விழா மலரில் என்

சிறு மொழியும் இடம் பெற்றது. அம்மொழியில் இரண்டொரு பகுதியை அகழ்ந்து ஈண்டுத் தருகிறேன். அஃது ஈண்டைக்குப் பொருத்த மாகும்.......

.... ஞானியார் சுவாமிகள் மாணாக்கருக்குப் பாடம் சொல்லும்போதும் சொற்பொழிவு நிகழ்த்தும் போதும் தொல்காப்பியனாராகவும் - நக்கீரராகவும் - திருவள்ளுவராகவும் - இளங்கோவடிகளாகவும் - கச்சியப்பராகவும் - கம்பராகவும் - சேக்கிழாராகவும் - வியாசராகவும் - நீலகண்டராகவும் - சிவஞான முனிவராகவும் - பிறராகவும் முறை முறையே விளங்கி விளங்கி இலக்கிய இலக்கணச் சாத்திர நுட்பங்களை வெளியிடுவதைக் கேட்டுக் கேட்டுப் புலவரானவர் பலர். பழம் புலவர் பலரும் ஞானியார் ஒருவரிடம் விளங்குதல் வியப்பன்றோ?....

... சுவாமிகளின் பேச்சுத் திறனை எதற்கு ஒப்பிடுவது? கடல் மடைத் திறப்புக்கா? - வெண்கலக் கோட்டையில் அரசுவா புகுதலுக்கா? - பெரும் புயலுக்கா? - ஓயா மழைக்கா? எதற்கு - எதற்கு ஒப்பிடுவது? பலர் பலவாறு கூறுப.

திருப்பாதிரிப் புலியூரில் வீற்றிருந்து அடியவர்க்கு அருள்புரியும் கோவலடிகள் கருமை பூத்த ஒரு பொறுமை மலை. அம்மலையின் உச்சியில் - மூளையில் - கலைமேகங்கள் பொழிந்த அருவி மழைநீர், தேங்கித் தேங்கிப் புரண்டு திரண்டு பன்முகங்கொண்டெழுந்து முட்டி முடுகி, வாயின் வழியே முழங்கி விரைந்து இடையீடில்லாச் சொற்றொடர் அருவியாக இழிந்து, பலதிறச் சுவை நுட்பப் பொருள்கள் மிதந்து சுழல, அன்புவெள்ளப் பெருக்காய்ப் பரவிப் பரந்து, அருள் அலை கொழித்துக் கொழித்து ஓடும். நீர் பருகப் போந்த புலி, கரடி, யானை, மான், பசு முதலியன அருவி முழக்கில் எழும் இன்னொலி கேட்டு,

அதில் ஈடுபட்டுத் தம்தம் பகைமை மறந்து மயங்கி நிற்கும். கரை நீராடுவோர் வெள்ளத்திலுறும் மின்விசை யால் பிணி நீங்கப் பெறுவர். ஞானியார் சுவாமிகள் பேச்சால் விளைந்த நலன் அளப்பரியது...

சுவாமிகள் முதன் முறை தென்னாடு நோக்கிய போதும், சென்னை போந்த போதும் என் பத்திரிகைகள் முன்னணி வேலைகள் செய்தன. அடிகள் தென்னாடு சென்றபோது 'தேச பக்தன்' தொண்டாற்றினான். சென்னை சேர்ந்த போது 'நவ சக்தி' பணி செய்தாள்.

தமிழ் நாட்டிலே பல இடங்களிலே பலதிற விழாக்கள் ஞானியார் தலைமையிலே நடைபெறும். அவ்விழாக்களில் என் ஒலி பெறாதன சிலவாயிருக்கும். சுவாமிகள் தலைமை யில் யான் பேசிய பொருள் வகைகள் பல திறம். அவை களை யெல்லாம் சுவாமிகளின் முடிவுரை அணி செய்யும்.

........சுவாமிகள் ஒரு முறை 'நீங்கள் ஏன் செல்வரை அருவருக்கிறீர்' என்று கேட்டார். 'யான் செல்வரை அரு வருப்ப தில்லை; ஒரேயிடம் செல்வம் திரள்வதை அருவருக் கிறேன்; செல்வரிடம் பொருளுக்குச் செல்வதில் எனக்கு அருவருப்பு உண்டு' என்றேன்.

யான் இளமை தொட்டு ஞானியார் சுவாமிகளைக் காலில் விழுந்து வணங்கிவந்தேன். ஒருவரை ஒருவர் காலில் விழுந்து வணங்குதல் கூடாது என்றுசிலர் பேசுவர். அவருள் ஒருவர், 'நீங்கள் ஏன் ஞானியாரை மட்டும் வணங்குகிறீர்' என்று கேட்டார். அதற்கு, ஞானியாரை வணங்கும் பழக்கம் எனக்கு இன்று ஏற்பட்ட தன்று. அன்று ஏற்பட்டு நீண்ட கால மாயிற்று. அதை வலிந்து நிறுத்தப் புகுவது ஆணவமாகும் என்று பதிலிறுத்தேன்.

ஞானியார் சுவாமிகளின் முதல் ஆண்டு விழா கடந்த (1943) தைப் பூசத்தில் இரண்டு நாள் நடைபெற்றது.

முதல் நாள் சுவாமிகளின் படத்திறப்பு என்னால் நிகழ்த்தப்பட்டது. இரண்டாம் நாளும் யான் பேசுதல் நேர்ந்தது. அப்பொழுது ஓரிடத்தில், 'யான் ஒருவரை வணங்கி வந்தேன். அவரும் மறைந்தார்......' என்று குறிப்பிட்டேன்.

ஞானியாரின் மடத்துத் தலைமையும் சிவிகையூர்தலும் இனை பிறவும் சுவாமிகளை வெளியூர் செல்லாதவாறு தகைந்துவந்தன. அவைகள் சுவாமிகளைச் சிறைப் படுத்தின என்றே சொல்வேன். இலங்கை, மலேயா, தென்னாப்பிரிக்கா முதலிய நாடுகள் சுவாமிகளின் தமிழைப் பருக எவ்வளவோ விழைந்தன என்பதை யான் அறிவேன்.

1041-ஆம் ஆண்டு அன்பர் இராமசாமி நாயுடு என்பவர் தென்னாப்பிரிக்காவினின்றும் சென்னை போந்தனர். அவர் சுவாமிகளையும் என்னையும் தென்னாப்பிரிக்காவுக்கு அழைத்துச் செல்ல விரும்பினர். சுவாமிகளைக் காண நாயுடுவும் யானும் காஞ்சி சென்றோம்; சுவாமிகளைக் கண்டோம். நாயுடு சுவாமிகளிடம் தமது கருத்தைத் தெரிவித்தனர். 'எனக்குள்ள தடைகளை முதலியார் சொல்வர்' என்ற பதில் சுவாமிகளிடத்திலிருந்து நகைப்புடன் பிறந்தது. காஞ்சியில் கண்ட அந்நகை முகக் காட்சியே இறுதியாயிற்று.

இது, 'திரு.வி.க.வின் வாழ்க்கைக் குறிப்புகள்' என்னும் நூலிலுள்ள திரு.வி.க.வின் உரை, அடுத்து, மகா மகோபாத்தியாய பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாரவர்களின் கட்டுரைச் சுருக்கம் காண்போம்.

**ஞானியார் அடிகளின் பிரிவு**

(பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார்)

உயர்திரு ஞானியார் அடிகளை யான் பல ஆண்டுகளாக அறிவேன். அவர்களுடைய தமிழ் மொழிப் பயிற்சி

யும் வடமொழி அறிவும் சைவ சித்தாந்த நூல் உணர்ச்சி யும் தமிழ் உலகத்திற்குப் பல்லாண்டுகளாகப் பயன்பட்டு வந்தன. சொற்பொழிவாற்றும் திறமையும் மாணவர்களுக் குத் தெளிவு பெறப் பாடம் சொல்லும் வன்மையும் நன்கு வாய்க்கப் பெற்றவர்கள். அரிய பொருள் எனினும் பேசு வோரது சோர்வினால் சிறப்புறுவதில்லை என்பதும் பேசு வோரது சொல்வன்மையால் எளிய பொருளும் மக்களால் பெரிதும் மதிக்கப்படும் என்பதும் நம் அனுபவத்திற் கண் டனவாம். சிறிய பொருளையும் மிக விரிவாக எழுதுதற்கும் பேசுதற்கும் ஆங்கில மொழி தகுதி உடையதென்று பலர் கூறக் கேட்டிருக்கிறேன்.

திரு. ஞானியாரடிகளாருடைய சொற்பொழிவைச் கேட்டபின், அத்தகுதி மொழிக்கு உரியதன்று என்பதும் பேசுவோரைப் பற்றியது என்பதும் அறிந்து கொள்ளலா னேன். அடிகள் ஒரு பொருளைப் பற்றி விரிவுரை நிகழ்த்துங் கால், அது மிகக் குறுகிய கால எல்லையில் முடிக்கத்தக்க தாயினும் அதனைத் தம் மதி வன்மையால் பலவாறு வகுத்து வகுத்துக் கேட்பவர் மனம் சலியா வண்ணம் மிக நீண்ட நேரம் விளக்கிப் பேசுவார்கள். இவ்வியல்பு அடி களுக்கே சிறந்ததொன்றாக அமைந்திருந்தது. வரலாற்றுப் பகுதிகளை எடுத்து விளக்குங்கால் அவற்றில் அமைந்துள்ள அறநிலை, நீதி, உலகியல் முதலியவற்றை மிகத் தெளிவாக எடுத்துக் கூறுவார்கள். எத் திறத்து மக்களையும் தம் உரை வன்மையால் பிணித்துத் தம்வயப்படுத்தும் ஆற்றல் அடிகளிடத்து மிக்கிருந்தது. அரிய சொற்பொழிவாயினும் கால நீட்டிப்பில் கேட்பவர் சோர்வடைதல் இயல்பு. இவ் வியல்பு, அடிகளுடைய சொற்பொழிவைக் கேட்பவர்பால் காண்டல் அரிதாகும். சமய நிலையில் அடிகள் வீர சைவ ராயினும், சித்தாந்த சைவம் முதலியவற்றில் கேட்பவ

மனம் பதியும் வண்ணம் பேசுதலில் மிகவும் சதுரப் பாடுடையவர்கள்.

கடவுட் பக்தியும் சிறப்பாக முருகப் பெருமானிடத்துப் பேரன்பும் உடையவர்கள். கல்வியறிவுடையோரை நன்கு மதித்து அளவளாவும் இனிய குணம் உடையவர்கள். தமிழ் மொழியில் பேரார்வத்தையும் சைவ சமயப் பற்றையும் தமிழ் மக்களுக்கு விளைத்து வந்த இவர்களின் அரிய சொற்பொழிவுகள், இத்தமிழ்நாட்டில் நிகழாத இடம் இல்லை என்றே சொல்லலாம். மடாதிபதிகள் செய்ய வேண்டிய அரிய செயல்களெல்லாம் திரு ஞானியாரிடத்து நன்கு காணப்பட்டன. இக்காலத்துள்ள மற்றைய மடாதி பதிகள், இவர்களின் முறையைப் பின்பற்றுவார்களாயின், தமிழ் உலகத்துக்கே சிறந்த பயன் விளையும். இவர்கள் ஒழுகிய நெறி ஏனையோருக்குச் சிறந்த வழிகாட்டியாக உள்ளதென்று கூறலாம்.

இவர்களிடத்துக் கல்வி பயின்ற மாணவர் பலரும் சொற்பொழிவு கேட்ட அன்பர்கள் பலரும் இவர்கள் பாற்கொண்டுள்ள பேரன்பு அளவிடுந்தரத்த தன்று. அதற் குக் காரணம் இவர்களுடைய அருட்குண நிலையேயாகும். இவர்கள் இழப்பு ஈடு செய்ய முடியாத தொன்று என்றே கூறலாம். இத்தகைய பெரியார் ஒருவரை இனிக் காண்டல் எஞ்ஞான்று கூடுங்கொல்! திருவருள் துணை செய்தல் வேண்டும்.

முருகப் பெருமானிடத்து இவர்களுக்கிருந்த பேரன்பே, பழநிப்பதியில் அப்பெருமான் தரிசனப்பேறு இவர்கட்கு இறுதிக் காட்சியாக நிகழ்தற்குக் காரணமாயிற்று. இவர்கள் நல்லுயிர் திருவருளிற் கலந்து இன்புறுமாயினும், திருமேனியின் மறைவு தமிழ்ச் சைவ மக்களுக்கு ஆற்றொணாத்துன்பம் தருவதொன்றாகும். என்னே, நிலையாமையின் இயல்பு இருந்தவாறு!

திரு ஞானியாரடிகளைப் போன்ற பெரியோர்களுக்கு வினையளவு நின்று அதன் ஒழிவில் அழியும், நிலையற்ற உடலாக இல்லாமல் என்றும் நின்று நிலவும் ஒரு நல்லுடலாக வாய்ப்பதற்குத் திருவருள் எப்பொழுது துணை செய்யுமோ? இவ்வேண்டுகோள் அவர்கள் வீட்டு நிலைக்குத் தடையாவதொன்றெனினும், தமிழ் மக்கள் பல்லாயிரவர்க்கு விளையும் நலத்தை நினையுங்கால், இது நம்மனோரால் மேற்கொள்ளத் தக்க தென்றே எண்ணு கின்றேன். இவர்கள் நினைவுக் குறியாக ஒரு தமிழ்க் கலை மாடம் சென்னையம்பதியில் நிறுவப்படுமாயின், தமிழர் நன்றியறிவு சிறந்த தொன்றாகத் திகழ்வதாகும்''.-

இது பண்டிதமணியின் உரை. அடிகளார் வீடுபேறு (மோட்சம்) அடையக்கூட வேண்டியதில்லை. எப்போதும் உலகில் இருந்துகொண்டு மக்களுக்குப் பயன்விளக்க வேண்டும் என்னும் புரட்சிகரமான கருத்தைப் பண்டித மணி கூறியுள்ளது மிகவும் சிறப்பாயுள்ளது. அடுத்து புலவர் மு. இரத்தின தேசிகரின் கட்டுரைச் சுருக்கம் காண்பாம்:

**தோற்றம் உண்டேல் மரணம் உண்டு**

(வித்துவான் மு. இரத்தின தேசிகர், தமிழாசிரியர், போர்டு உயர்தரப் பள்ளி, குடவாயில்)

ஞானம் - மெய்ஞ்ஞானம் - மறைந்தது-இல்லை. துவ ராடை தாங்கிய மேனி-அங்க இலிங்கம்-தாழ்வடங்களின் தனியிடம்-திரு நீற்றின் பொலிவு-தமிழ் மணம் கமழும் புன்முறுவல்-இதோ தோற்றுகின்றது. இல்லை உருவெளித் தோற்றம். இனி எங்குக் காண்பது? கையற வெய்தும் கழிமட நெஞ்சே! ஒளி ஒளியுடன் கலந்தது. அவலம் ஒழிதி.

சுவாமிகள் மறைவு தமிழன்னைக்கு நீங்கா இடுக்கண் தந்துவிட்டது. சுவாமிகள் ஒரு தமிழ்க் கடல். அவர்களின்

சொற்பெருக்கு கடல் மடை திறந்த தொத்து மிடுக்கொடு பரந்து சென்று கேட்போரின் செவி வழி நுழைந்து மனப் புலத்தைப் பண்படுத்தும். உடல் தளரினும் உரை தள ராது, ஐந்து மணி நேரம் ஒரே இடத்து அமர்ந்து, இடை விடாது-கேட்போர் மனம்தளராது சொற்பெருக்காற்ற வல்லார் இனி யாருளர்?

யான் கண்ட உண்மை - கடந்த வெகுதானிய ஆண்டு சித்திரைத் திங்கள் 29-ஆம்நாள் (11-5-1938) திருவாரூர் - தம்பிரான் தோழர் தமிழ்ச் சங்கத்தின் நான்காமாண்டு விழாவைச் சுவாமிகள் தலைமை தாங்கி நடத்தினார்கள். அவர்கள் முன்னிலையில் யான் பேசும் பேறு பெற்றேன். 'சுந்தரர் தந்த மறு பெயர்கள்' என்பது பற்றிப் பேசி னேன். பல நாட்களாகச் சுந்தரர் தேவாரத்தில் எனக் கோர் ஐயம் இருந்து வந்தது. ஏற்ற சமயம் என எண்ணிச் சுவாமிகளிடத்தில் அவ்வையத்தைத் தெரிவித்துக் கொண் டேன். அது, 'அல்லியந் தாமரைத்தார் ஆரூரன்' என்று சுந்தரர் தன்னைச் சொல்லிக் கொள்வது எக்காரணம் பற்றி என்பதே. இவ்வையத்தை யான் தேவாரத்தைப் பயின்ற காலையில் நீக்கிக் கொள்ளவில்லை. பின்பு யான் கேட்ட புல்வர் பலரும் விடையிறுத்திலர். சுவாமிகள் முடிவுரையில் யாதொரு வருத்தமும் இன்றித் தயக்கமும் இன்றித் தம் மன அறையிலிருந்து நூல்களைப் புரட்டிப் பார்த்துச் சட் டெனப் பின்வருமாறு கூறினார்கள்:

"சுந்தரர் தாமரை மலர் மாலையைத் தமக்கு உரிய தாகக் கூறிக்கொண்டது, தாம் அந்தணர் என்ற மரபு பற்றி. நால்வகை வருணத்தார்க்கும் ஒவ்வோர் அடை யாளப் பூ உண்டு. அந்தணர்க்குத் தாமரை உரியது. முல்லையந்தார் வணிகன் இவன்' என்பது திருவிளை யாடல்."

இதனைக் கேட்ட என் மனம் பூரித்தது. விம்மிதம் அடைந்தேன், நல்லார் இணக்கத்தின் உயர்வை என் வாழ்க்கையில் அன்றுதான் உணர்ந்தேன். சுவாமிகளின் உயர்விற்கும் கல்வியாற்றலுக்கும் இதைத் தவிர வேறு என்ன சான்று வேண்டும்?

அடுத்த பல தினங்களில் நாகையின் அண்மையில் உள்ள மஞ்சட் கொல்லை என்ற தலத்தில் சுவாமிகளின் சொற்பெருக்கு நிகழ்ந்தது. அப்போது வந்து கேட்டார் அனைவரும் விழித்த கண் இமையாது சுவாமிகளின் மலர் முகத்தையே கண்டு களித்திருந்தனர். சொற்பெருக்கில் நகைச்சுவையும் சமத்துவச் சுவையுமே ததும்பும். சுவாமிகளின் வடமொழிப் புலமை வேதாகமங்களினின்றும் கூறிய மேற்கோள்களாலும் விளக்க உரையாலும் விளங்கிற்று. தென்மொழிப் புலமைக்கு அளவு கூற வல்லுநர் யார்?

.......... சொற்பெருக்கை இன்னும் பலமுறை கேட்டானந்தித்திருக்க எண்ணியிருந்தேன். சுவாமிகள் தைப்பூச நாளில் இராமலிங்க வள்ளலை நமக்கு நினைவுறுத்தி இறையொளியில் கலந்தார்கள். இனி என் செய்வது!

இது இரத்தின தேசிகரின் உரை. அடிகளார் தம்மன அறையிலிருந்து நூல்களைப் புரட்டிப் பார்த்ததாக இரத்தின தேசிகர் கூறியுள்ளார். அங்ஙன மெனில், அடிகளாரை ஒரு நடமாடும் நூலகம் என்று கூறலாம் அன்றோ? அடுத்து வழக்கறிஞரும் பிற்காலத்தில் சமாசத்தில் பல தொண்டுகள் புரிந்தவரும் மலேயாவில் இந்தியர் சங்கப் பொறுப்பாளராய் இருந்தவரும் ஆகிய கே. இராமநாதன் செட்டியாரின் கட்டுரைச் சுருக்கம் காண்பாம்.

**நான் கண்ட ஞானியார் சுவாமிகள்**

(கே. இராமநாதன் செட்டியார், பி.ஏ.,பி.எல்.)

“திருப்பாதிரிப் புலியூர் ஞானியார் சுவாமிகள் உடல்

நீத்தார்கள் என்று கேட்டதும் மனத்தில் சிறிது ஆட்டம் ஏற்பட்டது. ஏன்? நான் அவர்களைத் தேடி ஆராய்ந்து கொண்டேன். பல வருஷங்களுக்கு முன்னர் அவர்கள் நல்ல சொற்பொழிவாளர்கள் என்று கேள்விப்பட்டேன். சென்னையில் ஒரு கோயிலில் 'விநாயகர்' என்பது பற்றிப் பேசினார்கள். போய்க் கேட்டேன். சுமார் மூன்று மணி நேரம் பேசியிருப்பார்கள். விஷயங்களைக் கோவை செய்து ஒன்றன்பின் ஒன்றாகத் தெளிவாகச் சொன்னார்கள். பின்னர் அவர்களின் சொற்பொழிவுகளுக்குச் சௌகரியப் பட்டபோது போய்க் கொண்டிருந்தேன். அவர்களுடன் பேசியதில்லை. விபூதி வாங்கியதில்லை. இவ்வாறு சில வருஷங்கள் சென்றன ......... அவர்களைக் காண எனக்குச் சாவகாசம் இல்லை; சந்தர்ப்பமும் இல்லை ...... ..

......... அவர்கள் மயிலாப்பூர் வந்து தங்கினார்கள் அவர் தேடிக் கண்ட பொருளாயிற்றே. இவர்போல் பிறர் ஒருவர் நமக்குக் கிடைப்பாரோ? இப்பொழுது பார்த்து வைத்தால், யானும் சுவாமிகளைப் பார்த்திருக்கின்றேன் என்று சொல்லிக் கொள்ளலாமே. நமக்குக் கொடுத்து வைத்த காலம் பழகுவோமே - என்று நினைத்துப்போய் நமஸ்காரம் செய்தேன்,இரண்டு நாளைக்கு ஒரு தரமேனும் போனேன். சில மணிநேரம் இருந்தேன்-பேசினேன். சமயம் கிடைத்தால் சிறுபணி செய்வேன்....அவர்கள் தலைமையில் பேசும் பாக்கியமும் கிடைத்தது.

அவர்களுக்கு இவ்வளவு பெருமை ஏன்? அவர்கள் நன்கு படித்தவர்கள், ஆங்கிலம் தெரியும். வடமொழி நன்கு தெரியும். தமிழில் அவர்கள் படிப்பு மிகப் பரந்தது, ஆழ மானது. இத்துடன் உலகியல் அறிவும் உண்டு. கற்றார்க் கும் கல்லாதார்க்கும் பயன்படும்படிப் பேச வல்லவர்கள். இனிமையாகப் பேசுவார்கள். அவர்கள் அன்பு நிறைந்தவர்

வர்கள். எல்லாருக்கும் புன்சிரிப்பு; சில நல்ல வார்த்தை. மடாதிபதி என்ற நினைப்பு அவர்களின் வார்த்தைகளையோ செய்கைகளையோ கட்டவில்லை. விருந்தினரை நின்று விசாரிப்பார்கள். உளறுபவர்க்கும் கோபம் இன்றி அறிவு புகட்டுவர். எல்லாரும் அவர்களைப் பார்க்க முடியும்—எப்பொழுதும் பார்க்கலாம்.

அவர்கள் செய்த தொண்டுகள் பல. தங்கள் மடத்தை நல்ல நிலைமைக்குக் கொண்டு வந்தார்கள். பலர்க்குத் தமிழ் அறிவு புகட்டினர். கிறிஸ்தவர்களும் அவரிடம் படித்திருக்கிறார்கள். பலருக்குச் சமய அறிவு புகட்டினர். அநேகர் மனத்தில் அன்பு என்னும் விதையை நட்டார்கள். பற்பலர் வாழ்க்கையைத் திருத்தியமைத்தனர். அவரிடம் உபதேசம் பெற்றோர் கணக்கற்றவர். அவர்களின் சொற்பொழிவு கேட்டவர் பல்லாயிரவர்.

ஊர்தோறும் சென்று சமய உண்மைகளைப் பரப்பியவர் சமய குரவர் மூவர். அவர்களுக்குப் பின்னர் அத்தொண்டு செய்தோர் ஒருவரையும் எனக்குத் தெரியவில்லை. அத் தொண்டை இக்காலத்தில் செய்தவர் ஞானியார் சுவாமிகள்.

இனி அவர்களின் புனித உடலையும் புன்சிரிப்பையும் எங்ஙனம் காண்போம்? வாயார வாழ்த்தும் வாழ்த்துரைகளையும் வழங்கும் சொற்பொழிவுகளையும் எங்ஙனம் கேட்போம்? அவர்களுக்கு ஞாபகார்த்தமாக ஏதேனும் செய்ய வேண்டுவது மிக அவசியம்......"

இது இராமநாதன் செட்டியாரின் உரை. அடுத்து, புழலை-திருநாவுக்கரசு முதலியாரின் கட்டுரைச் சுருக்கத்தைக் காண்போம்:

## ஞானியார் பெருமை

(பண்டித ரத்னம் - குகஸ்ரீ
புழலை திருநாவுக்கரசு முதலியார்)

''சைவ சமயத்திற்கும் செந்தமிழ் மொழிக்கும் இலக்கியமாக எழுந்தருளியிருந்த ஸ்ரீமத் ஞானியார் சுவாமிகள் சிவலிங்க ஐக்கியமான செய்தி தமிழகத்தவரைத் திடுக்கிடச் செய்து விட்டது. சுவாமிகள் நிறைந்த பெரும் புலமையும் சிறந்த பேரறிவும் படைத்தவர்கள். தமிழ் மொழியில் தமக்கு ஒவ்வுவமையில்லா நிலைபெற்றிருந்த அடிகள். அங்ஙனமே ஆங்கிலம், ஆரியம் போன்ற பிற மொழிகளிலும் புலமை பெற்றிருந்தார்கள். சுவாமிகளுடைய பேச்சுக்குத் தமிழ் நாட்டில் தனி மதிப்பு. படித்தவர்கள் முதல் படியாத பாமரர்கள் வரை எல்லோரும் கேட்டு இன்புற்று மகிழும் வண்ணம் பேசுவதில் சுவாமிகள் இணையற்றவர்கள். இங்ஙனம் சிறந்த சுவாமிகள் எளிமையாக அனைவரையும் ஏற்றுக்கொள்ளும் பெருமையும் உடையவர்களாக இருந்தார்கள். எங்குச் சென்றாலும் எங்கிருந்தாலும் எளியேனிடத்துள்ள அன்பின் மிகுதியைக் காட்டும் திருநீற்றுப் பிரசாதத்தைத் தங்கள் ஆசி மொழிகளுடன் அவ்வப்பொழுது அனுப்பி வைத்து என்னை வாழ்வித்த தொன்றே, சுவாமிகள் எல்லோரையும் அணைத்து ஆதரித்து மகிழும் பெரும் பேற்றை இயல்பாகவே பெற்றவர்கள் என்பதை நிரூபிக்க வல்லது. சுவாமிகளின் பிரிவினால் தமிழகம் சிறந்த புலவர் பெருமானார் ஒருவரை இழந்தது - ஞானியார் மடாலயமும் சிறந்த தலைவரை இழந்தது - நாம் அனைவரும் தாயனைய - தந்தையுமாய பேராசிரியரை இழந்தோம் - என்று சொன்னால் பிழையாகாது. அடிகள் என்றும் பிறவாத - இறவாத நன்னிலை எய்தி மாண்புறத் திரு முருகப் பெருமான் திருவடிப்பேறு களை வணங்குவோமாக - வாழ்த்துவோமாக''.

அடிகள் அனைவரிடமும் ஒத்த அன்புடையவர்கள் என்பதைப் புழலை - திருநாவுக்கரசு முதலியார் இந்த உரையில் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு அன்பர்கள் பலரின் கட்டுரைகள் பல எழுந்து துயரத்தைப் பெருக்கிப் பின்னர் ஆறுதலும் தந்தன.

# 21. இரங்கல் உரைப் பிழிவுகள்

முன்னர், அறிஞர்கள் ஐவரின் இரங்கல் கட்டுரைகளைக் கண்டோம். இனி இங்கே, பெரிய பழத்தின் பிழிவுச்சாறு போல மிகச் சுருக்கமாக உள்ள இருபத் தைந்து அறிஞர்களின் உரைகளை மட்டும் காண்பாம்:

**1. ராஜா சர். அண்ணாமலைச் செட்டியார்**

சுவாமிகளவர்கள் ஒரு தபசி - சைவம் செழித்தோங்க அரும்பாடு பட்டவர்கள் - வாக்கு வன்மை வாய்ந்தவர்கள். - தமிழுக்குப் பெருந்தொண்டாற்றியுள்ளார்கள் - தமிழ் நாட்டில் பல பாகங்களுக்குச் சென்று மக்களுக்கு நன்னெறியைப் போதித்து வந்தார்கள்.

**2. மகாமகோபாத்தியாய டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் மகனார்**

சமாதி நிலை யடைந்த பெரியவர்களுடைய பிரிவை என் தகப்பனாரவர்கள் வருத்தமுற்றும், அந்த ஸ்தானத்திற்குத் தக்க கருவியாக அங்குத்தி அமைந்திருப்பதில் மிக்க மகிழ்ச்சி யுற்றும் இருப்பதோடு, இவற்றைக் குறித்துத் தாமே எழுத இயலாமையால் என்னைக் கொண்டு எழுதச் சொன்னார்கள்.

**3. திவான் பகதூர் சீ. தெய்வசிகாமணி முதலியார்**

சுவாமிகளின் மறைவு தமிழ்நாட்டுக்கு ஒரு பெரும்

நஷ்டம் என்பது மறக்க முடியாதது. இதனை வேறு எவரும் ஈடு செய்யவும் இயலாது. தமிழ்நாடு பொலிவிழந்து நிற்கிறது. சைவ உலகம் தவிக்கிறது. நல்வாழ்வு பெற்ற பெரியார் அமைதியடைந்திருப்பார் என்பதில் ஐயமில்லை.

### 4. பண்டித ந.மு. வேங்கடசாமி நாவலர்

திருவருட் கலப்புற்ற ஞானியாரடிகளாரின் பெருமையையும் அவர்கள் மன்பதை உய்தி பெறுமாறு ஆற்றிய அரும் பணிகளையும் சில வரிகளில் அன்று, சில ஏடுகளில் எழுதிவிடுதல் அமையாது. அங்ஙனமே அவர்கள் பிரிவால் தமிழ் நாடும் சைவ உலகும் எய்திய இழப்பின் அளவினையும் எழுதுதல் சாலாது. செல்கதிக்குச் செந்நெறி காட்டி வந்த பெரியாரைப் பிரிந்தோம். அதனை எங்ஙனம் ஆற்றுகிற்போம்!

### 5. முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ. விசுவநாதனார்

தமிழ் நாட்டில் இருந்து வந்த இந்திய நாட்டு நிலையம், அறநெறியை எடுத்துரைக்கும் தனிப்பேராற்றல், ஒழுக்கத்தின் திருஉரு, தவநெறிச் சிவச் செல்வம், வாய்மையின் தலைமை, அன்பு ததும்பும் திருமுகம், திரு முருகனின் செல்வக் குழந்தை - நம்மை விட்டுப் பிரிந்தது; இந் நாட்டிற்கு ஏற்பட்ட பெருங்குறையேயாகும்.

### 6. இராவ் சாகிப். எஸ். வையாபுரிப்பிள்ளை

தமிழ் நாட்டின் ஞான தீபம் இப்போது மறைந்து விட்டது. அது சுடர்விட்டு ஒளிர்ந்த காலத்தில் தமிழ் மக்களின் அகத் திருளை நீக்கி, அவர்களை அறிவானந்தத்திலேயே திளைக்கும்படிச் செய்து வந்தது. அந்தத் தீபம் இன்று அவிந்ததும் தமிழ் மக்களாகிய நாம் அனைவரும் துன்ப இருளில் வருந்தி மறுகுகின்றோம். ஆனால் சுவாமிகளின் திரு மேனிப் பொலிவும் அவர்களுடைய அறிவுச்

சுடரும் திருமுக மண்டலமும் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் அன்புரையும் சமய உணர்ச்சியை மக்கட்கு நல்கும் அருளுரையும் நமது நெஞ்சினின்றும் ஒரு பொழுதும் நீங்கமாட்டா. நம்மைச் சிவ கதிக்கு உய்விக்கும் தெய்வ ஒளியாக்ச் சுவாமிகள் எப்பொழுதும் நிலை நின்று ஒளிர் வார்கள்.

**7. பன்மொழிப் புலவர் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார்**

தமிழ் தமிழ் என்று பெரு முழக்கம் கேட்கும் இந்த நாளில், தமிழ்க்கென உழைத்துத் தம்முயிரையும் தந்த ஞானியார் நினைவைத் தமிழுலகம் எவ்வாறு நிலை நிறுத்தப் போகிறது எனப் பிறர் பார்த்திருப்பது இயல்பே. அவர்களும் கண்டு வியக்கும் நிலையில் தமிழன் நடந்து கொள்ள வேண்டும்.

**8. சா. கணேசன், கம்பன் கழகம், காரைக்குடி**

தமிழுக்காகவும் சைவத்திற்காகவும் திக் விஜயம் செய்து ஜெய வீரகோஷம் முழங்கிய ஞான கேசரியான ஸ்ரீலஸ்ரீ சுவாமிகளை எந்த ஒரு தமிழனும் சைவனும் மறக்க முடியாது. தமிழையும் சைவத்தையும் தமது இரு கண்ணெனப் போற்றி வந்த புலவர்மணி. அவர்கள் பேசத் தொடங்கி விட்டால் உயர்ந்த கருத்துகள் நல்ல அமைப் போடு வெகு கம்பீரமான பாஷையில் துள்ளி வந்து அலை அலையாய் மோதும்.

**9. சி. பன்னிருகைப் பெருமாள் முதலியார், திருவனந்தபுரம்**

அடிகளார் கோட்டாற்றுக்கு வந்திருந்த பொழுது ஆங்கிலப் படிப்பினால் மனம் தடுமாறியிருந்த எனக்குத் தக்க காலத்தில் நல்லறிவு புகட்டித் திருத்தினார்கள். அதற்காக அடிகளுக்கு நான் என்றும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளேன்.

**10. முத்து. மாணிக்க வாசகனார்-ஐயா நாயகர்-ஆரணி**

ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் மீளா வழியை அறிந்து சென்று சிவமாகியதால் அதற்குச் சிறிதும் அறிஞர் வருந்தார். வருந்தாராயினும் உலகியலை ஒட்டிச் சைவமும் தமிழும் தமிழரும் கொள் கொம்பில்லாக் கொடிபோல அலமரச் சென்ற – பன் மொழிப் புலமையும் கடல்மடை திறந்தா லொத்த பொருள் மொழிப் பொலிவும் அருளுருவும் அன்பகமும் பிற நலம்பலவும் இயல்பாகத் திருவருட் குறிப்பாகப் பெற்றிருந்த எங்கள் ஆண்டவனார் மறைந்து விட்டது பற்றி எம்மால் வருந்தா திருக்க முடிந்திலது.

**11. இ. சிவ குருநாதனார், பரங்கிப்பேட்டை**

சைவத்தின் தலைமணியை இழந்தோம். தமிழ்த் தாயின் கண்மணி மறைந்தது. தமிழர்தம் தவவேந்தர் ஒளிந்தார். தமிழ் நூல்கள் தம் காதலரை இழந்து கதறு கின்றன. அருள் நூல்கள் தம் அன்பரை இழந்து அலமரு கின்றன. ஆராய்ச்சி உலகம் அறிஞரை இழந்தது. ஏழை யேம் வழி காட்டிய வான் மணியை இழந்தனம்.

**12. மு.அருணாசலம் பிள்ளை, பல்கலைக் கழகம், சென்னை.**

சைவத்துக்குத் தொண்டு செய்வோர் யாவர்? சுவாமி களைப் போன்ற அறிவு, அறிந்தவற்றிலே தெளிவு, வாக்கு வன்மை, தோற்றப் பொலிவு, சிந்தையிடையறா அன்பு, பொறை, உயிர்கள் மாட்டுப் பெருங் கருணை – இவ் வரிய இயல்புகள் யாரிடத்தே உள்ளன?

**13. வி. சிவக்கொழுந்து, உசிலம் பட்டி.**

சுவாமிகளது பிரிவால் சைவ உலகம் ஒரு சமயாசாரி யரை இழந்து தவிக்கின்றது. தமிழ் உலகம் அருந்தமிழ்க் களஞ்சியத்தைத் தோற்று அலமருகின்றது. தம்மைப் பின் பற்றிய உண்மைத் தொண்டர்களுக்கும் மாணவர்களுக்கும்

கண் கண்ட தெய்வமாக விளங்கி, ஞான அமுதத்தை வழங்கும் ஞானியாராக விளங்கினார்கள் அவர்கள்.

**14. வை. குஞ்சிதபாதம், சென்னை**

அடிகளுடைய அன்பு கனிந்த 'வருக' என்றழைக்கும் இன் மொழியும் புன்முறுவலும் விருந்தோம்பி அருள் புரிதலும் ஆகிய அருள் பண்புகள் யார் உளத்தையும் உருக்கும் தன்மை வாய்ந்தன.

**15. அ. பாலாம்பாள் அம்மையார், பொன்மலை, திருச்சி**

அந்தோ! ஞானத்திரு உருவை, நான் மறையின்தனித் துணையை, மண்ணில் வளர்மதிக் கொழுந்தை, தூய வெண்ணீறு துதைந்த பொன்மேனியை, புண்ணியத்தின் புண்ணியத்தை இனி என்று காண்போம்! 'புண்ணியா உன் அடிக்கே போதுகின்றேன்'' என்று கூறி, நண்ணரிய சிவானந்த ஞான வடிவேயாகி அண்ணலார் சேவடிக்கீழ் எய்தினரோ!

**16. அ. சுவாமிநாத முதலியார், திருவண்ணாமலை**

சுவாமிகள் பாடம் சொல்லும் தன்மையில் மாணாக்கர் களிடத்துப் பொருள் அபேட்சை (அவா) இன்றிப் பாடம் சொல்லுதல் உத்தம சிவதருமம் என்றே கருதி வந்த மாணாக்கர்கட்கு உரிய காலந்தோறும் அவர்கள் சௌக ரியத்தை அனுசரித்தும் சலியாமலும் மிகுந்த பற்றுடன் முகமலர்ச்சியோடிருந்து தமிழில் ஆரம்பக் கல்வி முதல் இலக்கணம் - நீதிநூல் - இதிகாசம் - புராணம் - சித்தாந்த சாத்திரம்வரை பாடம் சொல்லிவந்தார்கள்.

**17. சைவ சித்தாந்த சபை, தூத்துக்குடி.**

சைவத்திற்கும் தமிழுக்கும் சுமார் அரை நூற்றாண் டாக அரும்பெருந் தொண்டாற்றி வந்த திருப்பாதிரிப்புலி

யார் ஸ்ரீலஸ்ரீ சிவ மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் திடீரென உலகை நீத்தமையறிந்து சபையார் ஆழ்ந்த வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்கிறார்கள்.

**18. சைவ சித்தாந்த சங்கம், பூவாளூர்**

தைப்பூச நன்னாளில் ஒரு திருமுருகன் திருவடி யடைந்த புலிசை உயர்திரு சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகளின் ஒப்புயர்வற்ற உபதேச மொழிகளை உன்னி-உன்னிப் பெரிதும் வருந்தி அடிகளார் அடிகளை மிகமிக வாழ்த்துகின்றோம்.

**19. சைவசித்தாந்த சபை, பழநி**

நம் தமிழகத்திலே செந்தமிழ் வளர்ச்சியும் சைவ சமய வளர்ச்சியும் கருதிக் கடந்த ஐம்பத்து மூன்று ஆண் டுகளாகப் பெரும் பணி யாற்றியவரும், சமய தீபகராக விளங்கியவருமான திரு அடிகளார் முத்தித் தலமென காசியை மீறிய பழநியங் 'கிரி' என்று அருணகிரி நாத சுவாமிகள் பாராட்டிய இத்தலத்திலே, ஞான தண்டாயுத பாணி சுவாமியின் திருவடியிலே கலந்து இன்புற்றமையைப் பாராட்டியும் துதித்தும் போற்றியும் வழிபாடு செய்தும் கொண்டாடுகிறது சபை.

**20. சைவ சித்தாந்த சபை, திருச்சிராப்பள்ளி**

திருக்கோவலூர் ஆதீனம் திருப்பாதிரிப் புலியூர் ஸ்ரீ ஞானியார் மடாலயத்து அதிபரும், சைவ சாத்திர வல்லுநரும், தமிழிலும் வடமொழியிலும் பெரும்புலமை உடையவரும், சைவமும் தமிழும் தழைத்தோங்கச் செய்தலே சைவ மடங்களின் முதன்மையான கடமை என்பதைச் செயலிலும் காட்டி வந்தவரும், சமயம்-மொழி முதலியவை சம்பந்தமான எந்தப் பொருளையும் மிக மிகத் தெளிவாகவும்-எத்துணை மணி நேரம் பேசினும்

கேட்போர் சலிப்புறாது விரும்பிக் கேட்கும் வண்ணமும் பேசும் பேராற்றல் படைத்தவரும், தமக்கு உரிய பூசை முதலிய சைவ ஒழுக்கங்களில் சிறிதும் வழுவாதவரும் நமது சபையின் ஆண்டுவிழா-பொன் விழா ஆகிய இவற்றைத் தலைமை தாங்கி மிகச் சிறப்பாக நடத்தியருளியவரும், நமது கலையின் ஆக்கத்தில் மிக்க கருத்துடையவரும் ஆகிய ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவசாரிய சுவாமிகள் இறைவன் நீழல் அடைந்ததை குறித்து இச்சபையார் பெரிதும் இரங்குகின்றனர். எனினும், அருள் கனிந்த நம் அடிகள் இறைவனோடு இரண்டறக் கலந்த பேரின்பப் பெருவாழ்வு பெற்றிருப்பர் என்பது கொண்டு ஒருவாறு மன அமைதி உறுகின்றனர்.

**21. பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ச் சங்கம், சென்னை**

மிகச் சிறந்த அறிஞரும் பெரிய சமயத் தலைவரும் பெருந் தமிழ் நாவலருமாக விளங்கிய உயர்திரு ஞானியார் அடிகள் திடீரென நம்மிடையிருந்து மறைந்தமையால் தமிழ் நாட்டுக்கு உண்டான நஷ்டத்தைக் குறித்து இச் சங்கத்தினர் பெரிதும் வருந்துகின்றனர்.

**22. சன்மார்க்க சபை, மேலைச் சிவபுரி**

தமிழ் நாட்டின் தவப் பயனாய்த் தோன்றிச் செந் தமிழ் மொழிக்கும் சைவ சமயத்திற்கும் சிறந்த தொண்டாற்றிப் பெரும் புகழ்பெற்ற திருப்பாதிரிப் புலியூர் ஆதீன முதல்வர் சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய அடிகள் 1-2-42 அன்று பரிபூரணம் எய்தியது குறித்துச் சன்மார்க்க சபையார் தங்கள் அனுதாபத்தை அந்த ஆதீனத்தில் உள்ளவர்களுக்கும் தமிழ் நாட்டு மக்களுக்கும் தெரிவித்துக் கொள்ளுகின்றனர்.

**23. கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை**

திருக் கோவலூர் ஆதீனத்துத் திருப்பாதிரிப் புலியூர்

ஞானியார் மடத்தின் தலைவராய்மர்ந்து ஐம்பத்திரன் டாண்டு சமயப் பணி புரிந்த அருட் செல்வரும், இள மாணவர் முதல் முதியோர்வரை - தம்மையடைந்தோர் யாவருக்கும் தமிழறிவு உறுத்திய தவச் செல்வரும், தமிழும் சமயமும் வளர்ந்தோங்குதற் பொருட்டுக் கல்லூரி நிறுவியும் - பல கழகங்களைத் தோற்றுவித்தும் - யாவரும் உண்மைப் பொருளை எளிதில் உணர்ந்து நன்னெறியில் ஒழுகுதற்கு ஏற்ற இனிய அருள் மொழிகளைத் தமிழ்நாடு எங்கணும் பரப்பியும்-ஓய்வின்றித் தொண்டாற்றிய பேரருளாளரும், நம் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் ஏழு-எட்டாம் ஆண்டு விழாவிலும் வெள்ளி விழாவிலும் தலைமை தாங்கி நல்லுரை கூறிப் போற்றிய தமிழ்ப் பெருந்தகையும் ஆகிய உய்திரு சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் எனப் பெயரிய அருள்மிகு ஞானியார் அடிகளார் அவர்கள் 1-2-42 ஞாயிறன்று பழநியிலிருந்து எழுந்தருளி வரும் பொழுது திடீரென இறைவன் திருவடி நீழலிற் கலந்து நம்மைப் பிரிந்த செய்தி கேட்டுக் கரந்தைத் தமிழ்ச் சங்க சார்பில் 3-2-42-இல் கூடிய தமிழ் மக்கள் அனைவரும் ஆற்றொணாத் துயருறுகின்றனர்.

**24. அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கிய மன்றம்**

திருக் கோவலூர் ஆதீனம் திருப்பாதிரிப் புலியூர் ஞானியார் மடத்துத் தலைவரும், சிவ ஞானச் செல்வரும் குலம் கொடி என்பவற்றின் உயர்வும் தாழ்வும் - பால் வேற்றுமையும் பாராட்டாது - யாவர் மாட்டும் பேரருள் பூண்டு - தமிழ்க் கல்வியும் சமய நூல் உணர்ச்சியும் வரையாது வழங்கி வந்த வள்ளலாரும், தமிழ் மொழியேயன்றி வடமொழி - தெலுங்கு முதலிய பிற மொழிகளிலும் வல்லுநரும் ஆகிய மறைத் திருவாளர்

சிவ சண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய அடிகளார் அணி மைக் காலத்தில் பிறவாப் பெருநெறி எய்தினார் என்ற செய்தி கேட்டு இம்மன்றத்தார் மிக்க வருத்தம் உறுகின் றனர்.

**25. நகராட்சிக்கழகம், விழுப்புரம் –**

(Municipal Council, Villupuram)

This Council Places on records its deep sense of sorrow at the irreparable loss sustained by the Tamil Nadu on account of the death of His Holiness the Gnaniyar of Thirupapuliyur Mutt who was the head of the Mutt for 52 years with credit and distinction, who was an unexcelled research Scholar in Sanskrit and Tamil and who Preached the greatness of Tamil and religion and also set an illustrious example to the other heads of Mutts as to how they should conduct themselves.

இவ்வாறு இன்னும் நூற்றுக் கணக்கான இரங்கல் உரைகள் அடிகளார் இறுதி எய்தியதும் வந்தன. அவற்றை விரிப்பின் பெருகும். இரங்கல் உரைகளைக் கொண்டு அடிகளாருக்கு இருந்த பெருமையின் ஆழத்தையும் விரிந்த பரப்பையும் உயர்வினையும் எளிதில் எவரும் உணர்வர்.

# 22. கையறு நிலைப் பாடல்கள்

ஞானியார் அடிகளார் இறுதி எய்தியதும், அறிஞர் பலர் கையறு நிலைப் பாடல்கள் எழுதியனுப்பினர். நூற் றுக்கு மேல் பாடல்கள் கையிருப்பில் உள்ளன. அவற்றுள்

அறிஞர்கள் பதினைவர் எழுதிய பாடல்களை மட்டும் இவண் தருகிறேன். கீழே, முதலில் அறிஞர் பெயரும் அவர் அனுப்பியுள்ள பாடல்களின் மொத்த எண்ணிக்கையும் இருக்கும். அதன் கீழே, மாதிரிக்காக ஒவ்வொருவரின் ஒவ்வொரு பாடல் மட்டும் இடம் பெறும். இனி அவை வருமாறு:-

1. நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார் - 3
- கரந்தைக் கல்லூரி - முதல்வர் -
(அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

"எழுமுகிலும் ஒன்றாகி அமிழ்தமழை பொழிவதென
எவரும் போற்றும்
பழுதறுநின் சொல்மழையால் உளங்குளிர்ந்தே
உயிர் குழைந்த படியே மெல்லாம்
அழுதழுதுள் நீரறுமா றகன்றிடல்நின் அருள்நீர் மைக்
கமைவ தாமோ
தொழுதகுநின் திருவடித் தொண் டினியாங்கள்
பெறுவதெவன் சொல்கிற் பாயே"

2. எஸ். வையாபுரிப் பிள்ளை - சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் ஆராய்ச்சித் துறைத் தலைவர் - 3.
(நேரிசை வெண்பா)

"அன்பொழுகு கண்ணும் அருளொழுகு நன்னெஞ்சும்
இன்பொழுக விள்ளும் இதமொழியும் - என்றும்
இனியுண்டோ உண்டோ எமதுசிவ ஞானத்
தனியரசு வீழ்ந்ததன்பின் தான்".

3. இராவ்பகதூர் சி.எம். இராமச்சந்திரச் செட்டியார் - 4
(நேரிசை வெண்பா)

"சாந்தனையும் தொண்டியற்றும் சார்புடையர்
யாரவரே
ஆந்தனையும் வீணறியா தாரெவரே - மாந்தரிடம்

ஈறில்லா அன்புகுப்பான் இங்கிதமே கொள்கையராய்
ஆறில்லார்க் காறளித்தார் ஆர்.''

4. சித்தாந்த ஆசிரியர் ந. சிவகுரு ாதப்பிள்ளை
தூத்துக்குடி - 5.

(கொச்சகக் கலிப்பா)

''திருமணக்கும் முகமலரும் சிவமணக்கும் இன்சொல்லும்
உருமணக்கும் திருநீறும் ஒளிமணக்கும் கண்டிகையும்
அருள்மணக்கும் திருநோக்கும் அடியனேன் காண்ப
தென்றோ
தெருள்மணக்கும் குருமணியே சிவஒளியாய்ப்
போந்தனையே''.

5. கவியரசு ஆர். வேங்கடாசலம் பிள்ளை - 4.
(அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

''அன்னதோர் திருமுகத்தை ஆர்வுறக் காண்ப மாயின்
சொன்னலம் கனிந்த தேனாம் சொற்பொழி வுறுவ
மாயின்
இன்னவிவ் வுலக மொன்றோ இந்திரன் வாழ்வும்
வேண்டோம்
என்னினித் தொழுவோம் அன்னோன் இணையடி
மலர்கள் அம்மா!

6. புலவர் ஆ. சுந்தரராச உடையார், திருமுது குன்றம்-3.
(கலி விருத்தம்)

''சிவமே எனுமாறு செந்தமிழ்நா டெய்திப்
பவமாம் பிணிபோகப் பலவிரி வுரைசெய்த
சிவசண் முகஞானச் செல்வமே பிரிந்தனை
தவமே இனியுனைத் தானெவண் காண்பமே!''

7. பாலகவி. வயிநாகரம் வே. இராமநாதன் செட்டியார் - 5

(அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

"வருவாரை முகமலர்ந்து வரவேற்று
வயிற்றுணவு மகிழ்ந்து முன்னே
தருவாய்பின் பவர்தகுதி தனையாய்ந்து
சிந்தைகொளும் தன்மை வாய்ந்து
பெருவாரி நலங்களெல்லாம் எளிதார
இனிதளிப்பாய் பெரிய ஞான
உருவாய தமிழ்க்கடலே ஒளித்தனையே
யாம் செய்பிழை உரைத்திடாயோ?"

8. பண்டித ரத்னம் - குகஸ்ரீ - புழலை திருநாவுக்கரசு முதலியார் - 12

(அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

"இனியதமிழ் மணங்கமழும் சொற்சுவையும்
பொருட்சுவையும் இரும்பூ தெய்த,
கனியவரும் சர்க்கரைநற் பந்தலிலே
தேன்மாரி பொழிந்த தொக்க
நனி பெருகத் தன்னைத்தான் மறந்துபர
வசமடைய நல்கும் வான்றோய்
முனிபுங்க வருமேலாய் வியந்துரைசெய்
நயமொழியார் முனிவன் எங்கோன்".

9. வீ. திருஞான சம்பந்த முதலியார், மெய்கண்டார் கழகம், காஞ்சிபுரம் - 4

(அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

"உனைப்போலத் தமிழ் சைவம் இனிதோங்க
உழைப்பவர்கள் உலகத்திலில்லை
உனைப்போல உயிர்க்குறுதி பயக்குஞ்சொற்
பொழிவாற்ற ஒருவர் இல்லை.

உனைப்போல அவைத் தலைமைக் குரியரென
இவ்வுலகில் ஒருவர் இல்லை.
உனைப்போல அடியேனுக் கருள்புரிந்த
ஞானகுரு உலகத்திலில்லை''.

10. ஆ.பா. அரங்கையப் பத்தர், ஞானியார் மாணவப் பெரியார், திருப்பாதிரிப் புலியூர் - 5.

(எண் சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

''எந்நூலை எப்பொழுது எவர்கேட்டாலும்
இசைந்தபடி மொழிந்திடுவான் பேச நின்றால்
பைந்நாகம் தலைக்கணிந்தான் தோற்றம் போல்வான்
பகர்ந்திடு நற் சகலகலை புராணம் வேதம்
இந்நானி லத்து மறைச் சொற்க ளெல்லாம்
எனைச்சொல் எனைச்சொல் என்றே எதிரேநிற்கும்
செந்நாக்குப் புலவர்களும் தீயோர் நல்லோர்
சேர்ந்துபயன் பெற்றிடுவர் சிறக்கக் கேட்டே''

11. புலவர் வடிவேல் முதலியார்,
கோவல் தமிழ்ச்சங்கத் தலைவர், திருக்கோவலூர் - 9.

(அறுசீர்க் கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்)

''தமிழ்நாடெங் கணுஞ்சென்றே சைவமொடு
தமிழ்ப் பயிரும் தழைக்க வேண்டி
அமிழ்தினினும் இனிமையுள சொல்மாரி
பொழிந்திடுநின் அருமை கண்டே
உமைகணவன் கயிலையுள கணங்களுக்கும்
நின்பெருமை உணர்த்த எண்ணி
இமைப்பொழுதில் உனைக்கவர்ந்தே எமர்கலங்க
மகிழ்வெய்தி இருக்கின்றானே''.

12. புலவர் க. வெள்ளை வாரணனார், அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவர் – 5
(எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

"வள்ளுவர் சொல் பொதுமறையைப் போன்று
பல்லோர்
வளமுறநற் றமிழ்மறையைப் பொழியும் கொண்டல்
எள்ளலிலா நின்னுரையின் ஏற்றம் காண்போர்
இது முருகன் அருளெனவே நினைப்ப ரன்றிக்
கொள்ளுவரோ வேறாக யாமென் செய்வோம்
கோவல்நக ராதீனக் குரிசில் எங்கள்
வள்ளல்முரு கிறைபொதினி வருநிற் கண்டு
வழிமறித்துக் கொண்டானோ தமிழர் வாழ்வே"

13. வித்துவான் எஸ். துரைசாமி ஐயர், சிவஞான பாலைய சுவாமிகள் தமிழ்க்கல்லூரி முதல்வர், மயிலம் – 9
(அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

"அந்தோநம் ஞானவிறை தமிழரசு
சொல்மணி நம் சைவ வேந்து
அந்தோதம் பெயர்க்கேற்ப அரன்மகனின்
பூசவிழா கண்ட அன்றே
அந்தோநந் தனையகன்றே அரன்வடிவிற்
கலந்ததென அறிய லுற்றே
அந்தோயாம் செயலழிந்து மனமழிந்து
துயர்க்கடலில் அமிழ்கின் றேமால்".

14. வித்துவான் ஏ.ஆர். முத்தையன், தியாகராயநகர்-3
(அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

"பண்புற்ற உளத்தினரும் காணாத
பலபொருள்கள் பகிர்ந்து நின்றாய்
எண்ணுற்றுக் கொடுவந்த இந்திமொழி
மறுத்துரைப்பாய் இரும்பு விக்கோர்

கண்ணுற்ற தமிழ்மொழியைக் கற்பித்தாய்
கல்லூரி தனையுங் கண்டாய்
எண்ணுற்ற குரவருள் நின் னெறிநின்று
புகழடைந்தார் எவரே ஐயா!"

15. வித்துவான்முருக இலக்குவனார்-10
(அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

"கடல்போலப் பெருமக்கள் கூடியபே
ரவையேனும் காணுங் காலை
உடலுயிரா தியவெல்லாம் பறந்துண்மை
உணர்வூறி ஊழிக் காலத்து
அடல்விடையான் உருவெதிர்ந்த உயிர்த்தொகையோ
லாமென்னின் அடிய ரேங்கள்
நொடி மொழியால் அவனுடைய சொல்வன்மை
தனை விரித்தல் நோன்மைத் தாமே".

"ஞானி ஞானி என்றுபல ஏத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
ஞானி ஒருவனும் அல்லன்
வாணியும் உண்டீண் டறிவுசிறந் தோளே".

— சுந்தர சண்முகன்

இத்தகைய இரங்கற் பாக்கள் எண்ணற்றன எழுந்தும், ஞானியார் அடிகளார் இனியொரு முறை எழுந்து வருவாரா? ஞானியார் அடிகளாரின் புகழ் ஓங்கி வாழ்க!

# 23. ஐந்தைத் தொடர்ந்து...

ஐந்தாம் பட்டத்து ஞானியார் அடிகளார், 'சிவ சண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்' என்னும் பட்டப் பெயருடன் 20-11-889 ஆம் நாள் பட்டம் ஏற்றார். 1-2-1942 ஆம் நாள் இறுதி எய்தினார். சுமார் 53 ஆண்டுகள் இவர் அருளாட்சி புரிந்துள்ளார்.

ஐந்தாம் பட்டத்திற்குப்பின், ஆறாம் பட்டத்து அடிகளார், 'சிவ சண்முக சத்திய ஞான சிவாசாரிய சுவாமிகள் என்னும் பட்டப் பெயருடன் 2-2-1942 ஆம்நாள் பட்டம் ஏற்றார். பலவகை அரும் பணிகள் ஆற்றிய பின்னர் 15-12-1950 ஆம் நாள் இறுதி எய்தினார். இவர் சுமார் 9 ஆண்டு காலம் அருளாட்சி புரிந்தார்.

அடுத்து ஏழாம் பட்டத்து அடிகளார், 'சிவ சண்முக ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் என்னும் பட்டப் பெயருடன் 15-12-1950ஆம் நாள் பட்டம் மேற்கொண்டார். அரும் பெரும் பணிகள் பல ஆற்றிய பின் 17-6-1986 ஆம்நாள் இறுதி எய்தினார். இவர் சுமார் 36 ஆண்டுகள் அருளாட்சி நடாத்தினார்.

அடுத்து எட்டாம் பட்டத்து அடிகளார், 'சிவ சண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்' என்னும் பட்டப் பெயருடன் 18-6-1986 ஆம்நாள் பட்டம் சூட்டப்பெற்றார். இப்பொழுது (1989) இந்த அடிகளார் அருளாட்சி புரிந்து வருகிறார்.

ஐந்தாம் பட்டத்து அடிகளார்க்குப் பின் வந்த அடிகளார்கள் அனைவர் காலத்திலும், புலிசையில் வைகாசிப் பெருவிழா சொற்பொழிவும், கந்தர் சஷ்டி ஆறு நாள் சொற்பொழிவும், மார்கழித் திங்கள் 30 நாள் சொற்பொழிவும் வழக்கம்போல் நடைபெற்றன. இப்போதும் நடை பெறுகின்றன.

ஏழாம் பட்டத்து அடிகளார், ஆரணி மடாலயத்தைச் சேர்ந்த முருகன் திருக்கோயிலுக்கு 31-5-1964-ஆம் நாள் குட முழுக்கு விழா நடாத்தினார். குட முழுக்கு விழாவின் நினைவாக, 'கந்தர் உலா', 'சண்முகர் பாமாலை' என்னும் இரு நூல்கள் அடிகளாரால் வெளியிடப்பெற்றன.

ஏழாம் பட்டத்து அடிகளார் காலத்தில்தான் ஐந்தாம் பட்டத்து ஞானியார் அடிகளாரின் நூற்றாண்டு விழா 29-5-1973 ஆம் நாள் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. விழா சிறப்புற அடிகளார் பெரும் பொறுப்பும் முயற்சியும் எடுத்துக் கொண்டார்கள்.

இந்த நூற்றாண்டு விழாவின்போது, 'சிவத்திரு ஞானியார் அடிகளார் நூற்றாண்டு விழாக் குழு' என்னும் ஒரு குழு அமைக்கப் பெற்றது. இக்குழு இன்றும் செயல்பட்டு வருகிறது. ஆண்டுதோறும் ஐந்தாம் பட்டத்து ஞானியார் அடிகளாரின் பிறந்தநாள் விழா கொண்டாடப் பெறுகிறது. ஏழாம் பட்டத்து அடிகளார் இருந்த போதும் இவ்விழா நடைபெற்றது. இப்போதும் - எட்டாம் பட்டத்து அடிகளார் காலத்திலும் தொடர்ந்து நடைபெறுகிறது.

மற்றும், ஐந்தாம் பட்டத்து ஞானியார் அடிகளார் 1942 - தைத் திங்கள் பூச நாளில் இறுதி எய்தியதால்' 1943 ஆம் ஆண்டிலிருந்து தைப்பூச நாளில் ஐந்தாம் பட்டத்து ஞானியார் அடிகளாரின் நினைவு நாள் விழா தொடர்ந்து கொண்டாடப் பெற்று வருகிறது. இந்த - 1989 ஆம் ஆண்டு தைப் பூசத்திலும் விழா நடைபெறுகிறது.

இவ்வாறாகத் திருக்கோவலூர் ஆதீனம் - திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் மடாலயம் பெரும் புகழுடன் மேன்மேலும் சிறந்தோங்கி வளர்ந்து வருகிறது.

# இந்நூலில் குறிப்பிடப் பெற்றுள்ள நூல்கள்

ஞானியார் போற்றி - மாணாக்கர் ஒருவர்
ஔவையாரின் தனிப் பாடல்
உளவியல் நூல் கருத்து
பெரிய புராணம் - 1,3646 -சேக்கிழார்
கந்த புராணம் - வள்ளியம்மைத் திருமணப் படலம் - 62, 63 — கச்சியப்ப சிவாசாரியார்
கடவுள் வணக்கப் பாடல்கள் - ஞானியார் அடிகளார்
கந்தர் அநுபூதி - 51 - அருணகிரிநாதர்
கந்தர் அநுபூதிக் குறிப்புரை - ஞானியார் அடிகளார்
திருப் போரூர்ச் சந்நிதி முறை - சிதம்பர சுவாமிகள்
திருப் போரூர்ச் சந்நிதி முறைக் குறிப்புரை - ஞானியார் அடிகளார்
கந்தர் சஷ்டிச் சொற்பொழிவுகள் - ஞானியார் அடிகளார்
சைவ ஒழுக்கம் - ஆனியார் சுவாமிகள் (ஐந்தாம்பட்டம்)
நிட்டாநுபூதி சாரம் - முதல்பட்டத்து ஞானியார்
சண்முகர் அகவல் - முதல்பட்டத்து ஞானியார்
முருகர் அந்தாதி - இரண்டாம் பட்டத்து ஞானியார்
விநாயகர் மாலை - இரண்டாம் பட்டத்து ஞானியார்
சுப்பிரமணியர் பதிகம் - இரண்டாம் பட்டத்து ஞானியார்
திலகவதி அம்மையார் துதி - ஐந்தாம் பட்டத்துஅடிகளார்
குருதுதி - ஐந்தாம் பட்டத்து அடிகளார்
ஞான தேசிக மாலை - ஐந்தாம் பட்டத்து அடிகளார்
ஆத்திசூடி 100 - ஔவையார் ஐந்தாம் பட்டத்து அடிகளார்
கொன்றை வேந்தன் 45 - ஔவையார்

ஈசா வாஸ்யம் - வடமொழி நூல்
திருக்கோவையார் - மாணிக்க வாசகர்
திருக்குறள் - 1, 1330, 397, 424,214, 386 - திருவள்ளுவர்
தொல்காப்பியம் - பொருளதிகாரம் - மெய்ப்பாட்டியல் - 9,11 - தொல்காப்பியர்
நன்னூல் - பவணந்தி
கருணைப் பிரகாசர் பாடல்
திருநாவுக்கரசர் தேவாரம் - சில சில
சுந்தரர் தேவாரம் - திருத்தொண்டத்தொகை - 7,10 - மற்றும் சில
இறையனார் அகப்பொருள் - இறையனார்
ஆசான் ஆற்றுப்படை - ஆந்திரக் காசிப அந்தணர்
திருவெம்பாவை, திருப்பள்ளி எழுச்சி - மாணிக்க வாசகர்.



## பதிப்புச் செம்மல்
## டாக்டர் ச. மெய்யப்பன்

டாக்டர். ச. மெய்யப்பன் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியர்; திருக்குறள் இயக்கம், திருமுறை இயக்கம், தமிழிசை இயக்கம், தமிழ்வழிக்கல்வி இயக்கம் முதலிய தமிழிலக்கியங்களில் முழுமூச்சுடன் ஈடுபட்டு உழைப்பவர்; புலவர்குழு உறுப்பினர்; பல்கலைக் கழகங் களின் பதிப்புக்குழு உறுப்பினராகச் சிறப்பாகச்செயலாற்றி வருகிறார். இவர், தமிழ் நாட்டில் பல பல்கலைக் கழகங் களில் அறக்கட்டளைகள் நிறுவியுள்ளார்; பன்னிரண்டு நூல்களின் ஆசிரியர். இவர் எழுதிய 'தாகூர்' நூல் தமிழக அரசின் முதற் பரிசு பெற்றது. தமிழ் நூல் வெளியீட்டுத் துறையில் சாதனைகள் பல புரிந்த செம்மலாகிய இவர் துறைதோறும் தமிழுக்கு ஆக்கம் தரும் நல்ல நூல்களை வெளியிடுவதைத் தம் வாழ்வின் குறிக்கோளாகக் கொண் டுள்ளார். பதிப்புச் செம்மல் என அறிஞர்கள் இவரைப் பாராட்டுவர்.



**Wrapper Printed at Ganesh Printing, Ms-1. Ph: 561039**